# சுவாமி சிவானந்தரின் சுயசரிதை



ஸ்ரீ சுவாமி சிவானந்தா



இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

8.5.82

# சுவாமி சிவானந்தரின் சுயசரிதை

அருளியது

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்

**ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தா**




**ஸ்ரீ சுவாமி கிருஷ்ணானந்த மஹராஜ்**

**அவர்களின்**

**60–ஆம் ஆண்டு நிறைவு விழா**

**ஞாபகார்த்தமாக**

வெளியிடுவோர் :

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா.

விலை ] **1982** [ ரூ. 6—00

# ஆசியுரை

ஒளிவீசும் அழியா ஆத்மன் !

வணக்கத்திற்கும் அன்பிற்கும் உரிய சந்திரசேகரன்ஜி,

ஓம் நமோ பகவதே சிவானந்தாய.

கீதை, உபநிடதங்கள், இன்னோரன்ன பிற நூல்கள் போன்று, நமது மாபெரும் வேதங்களின் உண்மைகளைப் பரப்புவதற்கென்றே குருதேவர் வாழ்ந்தார்; தமது வாழ்நாளெல்லாம் உழைத்தார். கரை புரண்டோடும் வெள்ளம் என, பாரெங்கும் அவரது நூல்கள் பரவாத இடமில்லை. நீங்கள் உலகின் எப்பகுதிக்குச் சென்றபோதிலும், நம் தலைவரின் நூல்களைக் காண்பீர்கள். மெய்ஞ்ஞானத்தைப் பரப்புவதே அவரது வாழ்வின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. தமது வாழ்நாட்களை யெல்லாம் இத்திருப் பணிக்கே அர்ப்பணித்தார்; வாழ்ந்தும் காட்டினார். இவ்வுன்னத பணியில் குருபகவானுக்கு உதவி புரிந்தோர் அனைவரும் அவரது இதயத்தில் சிறப்பாக இடம் பெற்றுள்ளனர். சந்திரசேகரன்ஜியாகிய நீங்களும் எங்களது அன்பிற்குப் பெரிதும் அருகதையுடையவராக விளங்குகின்றீர்கள். குருதேவர் தங்கள்பால் சிறப்புமிக்க மதிப்பினைக் கொண்டிருந்தார். தங்களுக்கான வழியில் குருதேவரின் நூல்களை மொழிபெயர்த்துக் குறிப்பாகத் தமிழகப் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்தும் வகையில், குருதேவரின் இலக்ஷியத்திற்கேற்ப, நீங்கள் அமைதியுடன் அதிசயிக்கத் தக்க சேவையினைப் புரிந்து வருகின்றீர்கள். அவ்வப் போது இத்தகு உயரிய தொண்டினை ஆற்றி வருவதன் மூலம், குருதேவருக்கும் அவரது இலக்ஷியத்திற்கும் உங்களையே நீங்கள் அர்ப்பணித்துக் கொண்டீர்கள். குருமகராஜ் அவர்களின் வாழ்த்துக்கள் தங்களுக்கு உரித்தாகுக.

இப்புதையலைத் தமிழகப் பொதுமக்களுக்குக் கிடைக்குமாறு தாமாகவே முன்வந்து உதவிபுரிந்த நம் தலைவரின் தீவிர பக்தர்கள், சீடர்கள் ஆகியோர் அனைவருக்கும் எனது சிறப்பு மிக்க மதிப்பும் நல்வாழ்த்துக்களும் உரித்தாகுக.

நீங்கள் எல்லோரும் உடல்நலத்தோடும் இறைவனின் இடையறு நினைப்போடும் இருப்பீர்களென நான் நம்புகின்றேன்.

(Camp) கனடா
16, ஆகஸ்டு'69

ஸ்ரீ சுவாமி சிதானந்தா
ஓம்.

# பொருளடக்கம்

ஓம்

# 'சுவாமி சிவானந்தரின் சுயசரிதை'

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும். | ரூபாய் |
|---|---|---|
| 1. | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம்<br>தலைவர் : தெய்வீக வாழ்க்கைச் சங்கம் &<br>Prop : ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ்,<br>இராசிபுரம். ... | 100 |
| 2. | திரு. N. அன்னையன்,<br>தலைவர் : சன்மார்க்க சங்கம்,<br>மேச்சேரி, சேலம் மாவட்டம். ... | 51 |
| 3. | திரு. T. K. சம்பத், மேனேஜர்,<br>இந்தியன் பேங்க், இராசிபுரம். ... | 50 |
| 4. | திரு. M. ஜெயகுமார் & பிரதர்<br>இந்தியன் பேங்க், இராசிபுரம். ... | 50 |
| 5. | திரு. P. கணபதி கவுண்டர்,<br>'முன்சீப் தோட்டம்',<br>அரியாகவுண்டம்பட்டி. — | 101 |
| 6. | திரு. C. சிவசண்முகம்,<br>Prop : 'சிவானந்தா டெக்ஸ்டைல்ஸ்'<br>இராசிபுரம் — | 50 |
| 7. | அருட்செல்வன் 'ஸ்ரீ ராம்'<br>S/o D. செல்வராஜ், B. Sc., B. Ed.,<br>திருச்செங்கோடு. ... | 101 |
| 8. | திரு. C. அன்புமலர், B. Com.,<br>S/o S. சின்னுசாமி, B. A., B. L., ஈரோடு. ... | 52 |

9. திரு. K. ஹரிஹரராமன், B. A., B. Com., 'ஆடிட்டர்' ஈரோடு. ... 51

10. திருமதி. P. மனோரஞ்சிதம் அம்மாள் 51, அக்ரஹார வீதி, ஈரோடு. ... 50

11. திருமதி. தங்கம்மாள் மாரிமுத்து, ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ், திருச்செங்கோடு. ... 100

12. திரு. T. S. A. முருகேசன், மளிகை திருச்செங்கோடு. ... 51

13. திரு. Y. K. V. சந்தானம் செட்டியார் & திருமதி. கிருஷ்ணவேணி, இராசிபுரம் ... 50

14. திருமதி. A. E. சுபத்திரா, ஆசிரியை முனிசிபல் ஆரம்ப பள்ளி, இராசிபுரம். ... 50

15. திரு. M. தனகோபால், ஷராப் வியாபாரம், இராசிபுரம். ... 50

16. திருமதி. D. H. ரமா ராஜன், ஆரணி, வடஆற்காடு மாவட்டம். ... 51

17. திருமதி. கனகம்மாள், இராசிபுரம். ... 50

18. திரு. A. V. தனுஷ்கோடி, விருதுநகர். ... 101

19. திரு. P. மாணிக்கம், செயலாளர் சன்மார்க்க சங்கம், மேச்சேரி. ... 50

20. திரு. A. R. M. மாணிக்கவாசகம் செட்டியார், "Metal Wares Emporium" பெங்களூர்-53. ... 101

21. திரு. M. பாலதண்டபாணி, 'கர்நாடகா மெட்டல் ஸ்டோர்ஸ்' பெங்களூர்-53. ... 101

22. திரு. A. P. வெங்கடாஜலபதி, B. A.
நந்திதுர்க்கம் எக்ஸ்டென்ஷன்,
பெங்களூர்-46. ... 51

23. 'குருபக்தி ரத்ன' திரு. V. A. அண்ணுமலை,
இரும்பு & பெயிண்ட் வியாபாரம், மதுரை-1. ... 101

24. திரு. P. ஸ்ரீனிவாசன், 'சுதர்ஸன்'
திலக் நகர், பாம்பே-89. ... 101

25. திரு. A. S. தனுஷ்கோடி,
நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ,
தேனி, மதுரை Dt. ... 200

26. திரு. A. A. M. அய்யா நாடார் & சன்ஸ்,
மளிகை, தேனி. மதுரை Dt. ... 50

27. திரு. N. P. S. S. நடராஜ நாடார்,
ஓரியண்டல் லித்தோ பிரஸ், சிவகாசி. ... 100

28. திரு. M. தங்கமணி, M. Sc.
போட்டோ சென்டர்,
திண்டுக்கல், மதுரை Dt. ... 100

29. திரு. P. R. பட்டுலிங்கம், 'ஆனந்தபவனம்'
கோபிசெட்டிபாளையம்-638 452. ... 100

30. சிவானந்த அடியவன், விருதுநகர். ... 108

31. திரு. R. சுப்பரமணியம் செட்டியார்,
1, நாராயணசாமிபுரம், சேலம்-9. ... 50

32. ஆண்டவர் & கோ,
கொமாரபாளையம்-638 183. ... 50

33. ஸ்ரீ சுவாமி பரமாத்மானந்தா, சேலம்-6. ... 100

34. திருமதி. T. K. பாப்பம்மாள்,
திருநெல்வேலி-6. ... 100

35. திரு. R. K. இராஜகோபால், TXR.
தென் இந்திய ரயில்வே, மேட்டுப்பாளையம். ... 100

36. திரு. M. N. ஜெகநாதன்,
ஷராப் வியாபாரம், சேலம்-2. ... 100

37. திரு. K. A. மல்லைய்ய செட்டி & சன்ஸ்,
கலர் நூல் வியாபாரம், சேலம்-6. — 50

38. திரு. G. K. கிருஷ்ணன், சென்னை-34. ... 101

39. திரு. ம. இராஜரத்தினம், B. A., B. T.,
சிவம் யோகாசன சாலை, சேலம். ... 50

40. திரு. V. சவுண்டப்பன்,
'யோகமயா டெக்ஸ்டைல் ஏஜன்சி',
வேம்படிதாளம். ... 100

41. திரு G. நடராஜன்,
வீரம்மாள் பேக்கரி, சென்னை-21 ... 50

42. திரு. மகா. கோவிந்தசாமி,
'சங்கர ஆஸ்ரமம்', கொப்பமாபுரி-621 012. ... 50

43. திரு. K. R. ராதாகிருஷ்ணன்,
80, திருவேங்கடசாமி ரோடு, கோவை-2. ... 101

44. திரு. S. R. சோலைமுத்து,
ஜவ்வரிசி மில், சேந்தமங்கலம். ... 50

45. 'குருபக்தி ரத்ன' திரு. V. R. அண்ணாமலை,
தெய்வீக வாழ்க்கைச் சங்க
உதவித்தலைவர், இபோ, மலேசியா. ... 100

46. திரு. R. கிருஷ்ணமூர்த்தி,
தெய்வீக வாழ்க்கைச் சங்க காரியதரிசி,
இபோ, மலேசியா. — 100

47. திரு. K. A. A. சங்கரலிங்கம்,
தெய்வீக வாழ்க்கைச் சங்க
உதவித்தலைவர், பத்தமடை. — 100

48. திரு. S. K. மயில்சாமி கவுண்டர்,
S. K. M. கோழித்தீவனம், ஈரோடு-2. — 100

49. ஸ்ரீ சுவாமி பூர்ணானந்தகிரி,
ஞானாந்த பிரணவ நிலயம், ஏற்காடு-2. ... 50

50. திரு. M. ஆழ்வார் ராமாநுஜம்,
பள்ளித்துணை ஆய்வாளர், சேலம். — 100

51. திரு. J. K. K. முனிராஜா,
'அன்னை இல்லம்'
கொமாரபாளையம்-638 183. — 100

52. ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த சங்கம்,
இராசிபுரம். — 50

53. திரு. SM. RM. அடைக்கலவன் செட்டியார்,
லக்ஷ்மி பார்மஸி, இராசிபுரம். — 51

54. திரு. M. சுப்பு செட்டியார் அவர்கள்
"லக்ஷ்மி மெடிகல்ஸ்" சேலம்-1. — 51

55. திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A., B. L.
அட்வகேட், நாமக்கல். — 50

56. டாக்டர்.
திரு. K. ஜெயராமசந்திரன், M. B., B. S.
நாமக்கல். — 50

57. திரு. V. மாரப்ப கவுண்டர் (N. R. T.)
19, பத்ரகாளி தெரு, நாமக்கல். ... 50

58. திரு. M. பாலசுப்ரமணியம்,
Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். ... 100

59. திரு. S. P. ஆறுமுகம்,
லக்கி ஏஜன்சீஸ், திருச்சி–17. ... 50

60. திரு. V. சிங்காரவேல் & பிரதர்ஸ்
வேல் கட்பீஸ் சென்டர் & வேல் குருப்ஸ்,
சேலம்–1. ... 100

61. திரு. B. கபாலீஸ்வரன்,
'செல்வ மாளிகை' சேலம்–1. ... 100

62. திரு. M. குப்புசாமி,
கிருபாகர் பேப்பர் மார்ட், சேலம்-1. ... 50

63. திரு. C. பரமசிவம்,
Prop: செந்தில் டிரேடிங் கார்பொரேஷன்,
சேலம்-1. ... 100

64. பிரம்மச்சாரி கிருஷ்ணன்,
ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுல உயர்நிலைப்பள்ளி,
சின்னதாண்டா-636 311. சேலம் Dt. ... 100

65. திரு. R. சுந்தரராஜ செட்டியார், N. B. S.
நாமக்கல் பஸ் சர்வீஸ், நாமக்கல். ... 100

66. திரு. S. P. ஜனார்த்தனன்,
சோபனா டிரேடிங் கம்பெனி, பெங்களூர்-53. ... 50

67. திரு. K. P. முத்து Ex. V. M.
கூகலூர் (P. O.) ஈரோடு R. M. S. ... 50

68. டாக்டர். க. சீதாராம்,
'கதிரி கிளினிக்' சேலம்-6. ... 50

69. திரு. P. K. பொன்னுசாமிக் கவுண்டர், B. A.
S/o 'வாழைத்தோட்டம் பண்ணடி',
கோபி-638 452. ... 50

70. ஸ்ரீ மாதாம்ப ஸரஸ்வதி,
32, தங்க செங்கோட முதலி தெரு,
சேலம்-3. ... 51

71. திருமதி. K. சூரியகுமாரி,
90, திருவேங்கடசாமி ரோடு, கோவை-2. ... 50

72. திரு. K. லட்சுமிநாராயண ரெட்டியார்,
ஆவணிப்பூர், தென்னுற்காடு மாவட்டம். ... 50

73. திரு. K. V. மூர்த்திநாராயண செட்டியார்,
177, கடைத்தெரு, பாப்பாரப்பட்டி-636 809. ... 50

74. 'ராமகிருஷ்ண வித்யாலயா'
கண்டாச்சிபுரம்-605 701. ... 100

75. திரு. K. S. கோதண்டராமன்,
Prop: ராம் குமார் ஸ்டோர்ஸ், சேலம்-2. ... 50

76. திரு. மு. ஆ. அருணஜல முதலியார்,
தலைவர்: அறப்பளீஸ்வரர் திருப்பணிக்குழு,
திருச்சி-3. ... 50

77. 'முத்தமிழ்ப்பண்ணை' பா. அரங்கராசன்,
வைரிசெட்டிபாளையம், திருச்சி மாவட்டம். ... 50

78. திரு. V. பாலகிருஷ்ணன், மேனேஜர்
லக்ஷ்மி விலாஸ் பேங்க், சின்னதாராபுரம். ... 51

79. திருமதி. பார்வதி சுந்தரம்,
20, ஜாலன் மாமார், சிங்கப்பூர். ... 200

80. சேலம் திரு. A. O. கெங்காதர செட்டியார் &
திருமதி. சின்னம்மாள், இராசிபுரம். ... 51

81. திரு. M. S. V. வேணுகோபால்,
வேம்படிதாளம். ... 50

82. திரு. ஹிரியன், பாமுடி
கோடநாடு, நீலகிரி மாவட்டம். ... 50

83. திரு. V. L. நாகராஜ், காரியதரிசி,
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
டாஸ்கர் டவுன், பெங்களூர். ... 50

84. திரு. V. ராமச்சந்திர ரெட்டியார்,
சாத்தனூர், தென்னாற்காடு Dt. ... 50

85. திரு. I. ஆதித்தன், D. C. T. O.
திருநெல்வேலி-7. ... 50

86. 'சிவநெறிச் செல்வர்'
திரு. க. கனகராசா J. P.
அதிபர் : மில்க் ஒயிட் சோப்,
யாழ்ப்பாணம், சிலோன். ... 100



முத்தமிழ் மன்றம்

ஓம்

# சுவாமி சிவானந்தரின் சுயசரிதை

## அத்தியாயம் — 1.

## நான் பிறந்தேன்

### புனித அவதாரம் — ஸ்ரீ தீக்ஷிதர்

இந்த புனித உலகத்திலிருந்துதான் ஒருவன் வாழ்க்கைப் போராட்டத்தை நடத்தி முக்தியை அடைய முடியும். தேவர்களும் தங்களது கடைசி பேரானந்தத்தை அடைய விரும்பி இங்கு பிறக்க வேண்டியவர்களாக இருக்கின்றனர். அவ்வப் போது சில அபூர்வமான மகாத்மாக்களும் அவதரிக்கிறார்கள். அவர்களின் ஒரே நோக்கம் அன்பு, ஒளி, ஆனந்தம், தயை இவற்றை எங்கும் பரப்பவேண்டும்; ஏழை எளியவர்களுக்கும், அனாதைகளுக்கும் சேவை செய்யவேண்டும்; ஆதரவற்றவர்களுக்கும், மனமொடிந்தவர் களுக்கும் ஆறுதல் அளிக்க வேண்டும், அறியாமை இருளிலே அகப்பட்டவர்களைக் கைதூக்கி விட வேண்டும், ஆத்மீக அறிவை ஜனங்களிடையே பரப்பவேண்டும், கலப்பற்ற இன்பத்தையும் பேரானந்தத்தையும் துன்பத்திடை சிக்கி தத்தளிக் கும் மனிதவர்க்கத்திற்குக் கொடுக்கவேண்டும் என்பதே. இவர்கள்தான் பல்வேறு இடங்களில் பல்வேறு சமயங்களில் சாதுக்களாகவும், சந்நியாசி களாகவும் புனித ஆத்மாக்களாகவும், புத்தர் களாகவும், பக்கிரிகளாகவும், பாகவதர்களாகவும், ஸ்வாமிகளாகவும், யோகிகளாகவும் இப்

பூவுலகத்தை அலங்கரித்திருக்கிறார்கள். பகவத் கீதை சொல்லுகிறது : -

''தூய்மையான காரியங்களையே செய்யும் உலகத்தை அடைந்து பல்லாண்டுகள் அங்கு வசித்த பிறகு எவன் ஒருவன் யோகத்திலிருந்து வீழ்கிறானோ அவன் தூய்மையான, புனிதமான வீட்டில் மறுபிறப்பெடுக்கிறான். அல்லது அவன் சிறந்த யோகிகளின் குடும்பத்தில் பிறக்கலாம்; ஆனால் அதைப்போன்ற ஒரு பிறப்பை இந்த உலகத்தில் அடைவது மிக மிகக் கடினம்.'' (அத். VI-41, 42)

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் அப்பேர்ப்பட்ட ஒருவர். எனக்கு அந்த மாபெரும் மகானின் குடும்பத்திலே பிறக்கின்ற பாக்கியம் கிடைத்தது.

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் வடஆற்காடு ஜில்லாவில் ஆரணிக் கருகில் அடைப்பாலம் என்ற ஊரில் பிறந்தார்.

## அறிஞர்களிலே ஆற்றல் மிக்கவர்

தென்னிந்திய சரித்திரத்திலே கீர்த்திவாய்ந்த பெயர்களிலே ஸ்ரீ அப்பைய தீக்ஷிதருடைய பெயரும் ஒன்று. அவர் வடமொழி இலக்கியங்களிலே பல பிரிவுகளைத்தழுவி 104 க்கு மேற்பட்ட புத்தகங்களுக்கு ஆசிரியராவார். அவருடைய அறிவுத் திறமைக்கு அவருடைய வேதாந்த நூல்களே எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. வேதாந்த பாடசாலைகள் அனைத்தும் அவருடைய தனிப் பெரும், ஒப்பற்ற நூல்களிலிருந்து புத்துணர்ச்சி பெற்றிருந்தன. அவருடைய வேதாந்த நூல்களிலே ''சதுர் மதஸார ஸங்க்ரஹ'' என்ற நூலில் அவர் நான்கு மதக் கோட்பாடுகளாகிய த்வைத, விசிஷ்ட்

டாத்வைத, சிவ அத்வைத, அத்வைத — ஆகிய வற்றின் கருத்துக்களை முறையே ''நியாய முக்தா வளி'', ''ந்யாமாயுக மாலிகா'', ''ந(ா)ய மணி மாலா'', ''ந(ா)ய மஞ்சரி'' என்ற தனது தொகுப்பில் (இந்த நான்கு நூலும் சேர்ந்ததே ''சதுர் மதஸார ஸங்க்ரஹ'') வெளிப்படுத்தியிருக்கும் அவரது நுண்ணறிவும் புலமையும் அந்நூலுக்குப் பொருத்தமான பெருமையைத் தேடித்தந்திருக் கின்றன.

சமஸ்கிருத இலக்கியத்திலே, கவி, சொல் வன்மை, வேதாந்தம் முதலிய எல்லா துறை களிலும், அவரது சமகாலத்தவரோடு மட்டு மல்லாமல் அவருக்கு பல்லாண்டுகளுக்கு முன்னும் பின்னும் இருந்த பேரறிஞர்களிடையேயும் ஈடு இணையற்றவராகத் திகழ்ந்தார். ''குவலயானந்தா பொதுவாக வாக்குவன்மையைப் பற்றிய நூல் களிலே சிறந்தததொன்றாகக் கருதப்படுகிறது. அவர் இயற்றிய சிவ கீர்த்தனைகள் சைவர்களுக்கு மிகவும் பிடித்தமானவைகளாக இருக்கின்றன. அவர் வேதாந்தத்தைப்பற்றி ''பரிமளா'' என்ற சிறந்த தொரு வியாக்யானமும் இயற்றியிருக்கிறார். அது வேதாந்த ஞானத்திற்கு ஒரு ஞாபகச் சின்னமாக விளங்குகிறது.

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதருடைய அறிவு சக்தி வாய்ந்தது. அவருக்கு இப்பொழுதுகூட பெரு மதிப்பு அளிக்கப்படுகிறது. இதேபோல் அவர் வாழ்ந்த காலத்திலேயும் மதிக்கப்பட்டார். ஒரு சமயம் அவரது மனைவியார் பிறந்த கிராமத்திற்குச் சென்றார். அக்கிராம வாசிகளால் அவருக்கு ஒரு பெரிய வரவேற்பளிக்கப்பட்டது. அவர்கள் அவரை தங்களுள் ஒருவராகக் கூறிக்கொள்வதில் பெருமைப்பட்டனர். ''அந்த மகா தீக்ஷிதர்

நம்மிடையே வந்துகொண்டிருக்கிறார்'' என்ற ஒரு பெரிய பரபரப்பு ஏற்பட்டது. மதிப்பிற்குரிய விருந்தினர் — தீக்ஷிதர் — கூட்டம் கூட்டமான மக்களால் வரவேற்கப்பட்டார். அவர்கள் ''வேதாந்த சிங்க''த்தை தரிசிக்க மொய்த்திருந்த னர். ஒரு கிழவி ஓரளவு ஆர்வத்துடன் கையில் ஊன்றுகோலுடன் அந்த ''மகா புருஷனை''ப் பார்க்க வெளியே வந்தாள். வயது காரணமாக அவளுக்குக் கிடைத்த சுதந்தரத்தினால் கூட்டத்திற் கிடையே சுலபமாக விலக்கிக்கொண்டு ஸ்ரீ அப்பையாவை ஒருசில நிமிடங்கள் உற்று நோக்கினாள். மங்கலானதொரு ஞாபகத்திலே ஒரு தெரிந்த முகமாக அது அவளுக்குப்பட்டது. ''நான் எங்கோ இந்த முகத்தைப் பார்த்திருக் கிறேன்'' என்று ஆழ்ந்து யோசித்து, திடீரென்று ''நில்லுங்கள், ஓ! ஆம்! நீ ஆச்சாவின் அகத்துக் காரர்தானே?'' என்று கத்திவிட்டாள். அம்மகா பண்டிதர் ஒரு புன்முறுவலோடு அவளுடைய யூகத்தை உறுதிப்படுத்தினார். அம்மூதாட்டியார் ஏமாற்றமடைந்தாள். அகமும் முகமும் சோர அவளுடைய நடையை வீட்டுப்பக்கமாகத் திருப்பிக் கொண்டு ''அடேயப்பா என்ன ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள்! என்ன அவன் ஆச்சாவின் அகத்துக் காரன்தானே!'' என்று முணுமுணுத்துக் கொண்டே சென்றாள். ஸ்ரீ அப்பையர் இந்த சம்பவத்தை ஒரு அரை வரியிலே சுருக்கமாக ஒரு ஞான உலகத்தையே சிருஷ்டித்து அமரத்வமாக்கி விட்டார். —''அஸ்மின் க்ராமே, ஆச்சா பிரசித்தா''—இந்த கிராமத்தில் பெயரும் முக்கியத்துவமும் ஆச்சாவுக்கே.

## மாபெரும் ஆத்மீக ஜோதி

ஸ்ரீ அப்பையர் சிவபெருமானின் அவதாரமாக பலராலும் கருதப்பட்டார். அவர் தென்னிந்தியா

விலுள்ள திருப்பதி ஆலயத்திற்கு சென்றிருந்த பொழுது அவர் சைவர் என்ற காரணத்திற்காக வைஷ்ணவர்கள் அவரை கோவிலுக்குள்ளே அனுமதிக்க மறுத்தனர். ஆனல் அந்தோ! விஷ்ணு மூர்த்தியானது காலையில் சிவனுருவமாகக் காணப் பட்டது. கோவில் தலைவர் திகைப்புற்ருர். தீக்ஷிதரிடம் மன்னிப்புகோரி மூர்த்தியின் திருவுரு வத்தை விஷ்ணுவாக மாற்றும்படிக் கெஞ்சினர். அவ்வாறே அம்மகா புருஷர் செய்தார் என்பதை சொல்லவும் வேண்டுமா?

ஸ்ரீ தீக்ஷிதர் 16வது நூற்ருண்டின் மத்தியிலே வாழ்ந்தவர். அவர் கவிதை இயற்றுவதிலே பண்டிதராஜ ஜகன்னதருக்கு ஒரு மாபெரும் போட்டிக்காரர். அவருக்கு சங்கர–வேதாந்தத்தில் கொள்கையளவில் தனிப்பட்ட சொந்தமான கருத்துக்கள் கிடையா. ஆனல் அவர் வல்லபா அவர்களின் கொள்கைகளைப் பின்பற்றுபவர் களோடு பயங்கரமான வாக்குவாதங்களை ஜெய்ப் பூரிலும் மற்ற இடங்களிலும் நடத்திவந்திருக்கிருர். அவர் இயற்றிய ''சித்தாந்தலேஷா'' என்ற நூலானது சங்கராச்சாரியாரைப் பின்பற்று வோரிடையேயுள்ள கொள்கை வேறுபாடுகளின் மிகப் புகழ்பெற்ற சாராம்சமாகும். இந்தியா தோற்றுவித்த மாபெரும் ஆத்மீக ஜோதிகளிலே ஒருவர். அவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தைப் பற்றிய விவரமான தகவல்கள் இல்லாவிடினும் அவரது நூல்கள் அவரது பெருமைக்குப் போதிய சான்ருக விளங்குகின்றன.

## என்னுடை பிறப்பிடம்

பசுமையான நெல்வயல்களும், மாந்தோப்பு களும் நிறைந்த அழகான ஊர் பத்தமடை. அது

திருநெல்வேலி ஜங்ஷனிலிருந்து பத்து மைலுக் கப்பால் இருக்கிறது. சரயு நதி அல்லது காவேரி நதியானது எப்படி அயோத்யா அல்லது ஸ்ரீரங்கத்தை மாலே போல் சுற்றியிருக்கிறதோ அதுபோல் தாம்பரபரணியிலிருந்து கனடியன்கால் என்று சொல்லப்படும் ஒரு அழகான கால்வாய் பத்தமடையைச் சுற்றி வளைத்துச் செல்கிறது. தாம்பரபரணி தக்ஷிண கங்கை (தென் கங்கை) என்று வழங்கப்படும். அது செம்பு கலந்த பாறைகளின் வழியாகப் பாய்ந்து செல்லுகின்ற காரணத்தால் அதற்கு அந்தக் குறிப்பிடத் தக்க பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. (தாம்பரம் என்ருல் செம்பு) அதன் தண்ணீர் மிகவும் இனிமையாகவும் உடலுக்கு நன்மை பயக்கக்கூடிய தாகவும் இருக்கிறது. பத்தமடை மிக அழகிய பாய்களுக்குப்பெயர் போன இடம். ''சிவானந்தா ரெகாலியா''வில் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கும் பட்டுப் போன்ற அந்த பாய்களேக்கண்டு மக்கள் பெரிதும் புகழ்கிருர்கள்.

எனது தந்தையார் பத்தமடை ஸ்ரீ P. S. வெங்கு ஐயர், ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் பரம்பரை யில் வந்தவர். அவர் எட்டயபுரம் ஜமீனுக்கு தாசில்தாராக இருந்தார். அவர் நற்குணங்களும் தூய உள்ளமும் படைத்த ஒரு சிவபக்தரும் ஞானியுமாவார். அவர் எட்டயபுரத்து ராஜா சாஹேப் அவர்களாலும் பொதுமக்கள் பலராலும் பூஜிக்கப்பட்டார். ஜனங்கள் ''வெங்கு ஐயர் ஒரு மகான், ஒரு மகா புருஷர்'' என்று சொல்வது வழக்கம். நீதிபதி சுப்ரமணிய ஐயர் அவருடன் படித்தவர்; அவருக்கு வெங்கு ஐயரிடம் பெரு மதிப்பு இருந்தது. வெங்கு ஐயர் ''சிவோகம், சிவோகம்'' என்று சொல்லும் பொழுது அவர் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் ஏராளமாக

சொரிவது வழக்கம். அவருடைய பாட்டனூர் பத்தமடையில் ஒரு பெரிய ஜமீன்தார். அவர் பண்ணை சுப்பையர் என்று பிரசித்தி பெற்றவர். பண்ணையார் என்ருல் ஒரு நிலப்பிரபு அல்லது ஜமீன்தார் என்று பொருள்.

பத்தமடையில் காலஞ்சென்ற படித்தமேதை ராமசேஷ ஐயர், B. A. L. T., அவர்களால் அப்பொழுது ஏற்படுத்தப்பட்டு நடத்தப்பட்டு வந்த ஒரு அருமையான உயர்நிலைப்பள்ளி இருக்கிறது. இந்த ஊரின் மற்ருெரு முக்கிய அம்சம் என்னவெனில் அந்த பத்தமடை மண்ணின் எல்லாக் குழந்தைகளும் சங்கீதப்பிரியர்களாகவும் நன்ருகப் பாடக்கூடியவர்களாகவும் இருக்கிருர்கள். பத்தமடை பல பெரும் திறமை வாய்ந்த சங்கீத வித்துவான்களை உற்பத்தி செய்திருக்கிறது.

நான் ஸ்ரீமதி பார்வதியம்மாளுக்கும் ஸ்ரீ P. S. வெங்கு ஐயர் அவர்களுக்கும் அவர்களுடைய மூன்ருவது மகனுக, 1887ம் ஆண்டு செப்டம்பர் 8ந் தேதி வியாழக்கிழமை சூரியோதயத்தில் பரணி நட்சத்திரம் ஏற்றத்தில் இருக்கும் போது பிறந்தேன். எனது மூத்த சகோதரர் ஸ்ரீ P. V. வீரராகவ ஐயர் எட்டயபுரம் ராஜாவுக்கு அந்தரங்க காரியதரிசியாக இருந்தார். எனது மற்ருெரு சகோதரர் ஸ்ரீ P. V. சிவராம ஐயர் ஒரு தபால் ஆபீஸ் இன்ஸ்பெக்டராக இருந்தார். எனது மாமா அப்பைய சிவம் என்பவர் ஒரு சமஸ்கிருதப் புலவர். அவர் திருநெல்வேலி ஜில்லா வாசிகளால் பெரிதும் மதிக்கப்பட்டார். அவர் சமஸ்கிருதத்தில் பல தத்துவப் புத்தகங்கள் எழுதியிருக்கிருர். எனது பெற்ருேர்களால் எனக்குக்கொடுக்கப்பட்ட பெயர் குப்புசாமி.

எனது இளமையில் நான் பூக்களும் வில்வத் தழைகளும் கொணர்ந்து அழகான மாலைகள் தொடுத்து எனது பெற்றோர்களுக்கு அவர்களது சிவபூஜையில் (சேவை) உதவி செய்தேன்.

## இளமைப் பருவம்

பக்தர்களும், சாதுக்களும், தத்துவ ஞானிகளும் நிறைந்த குடும்பத்திலே செல்லக் குழந்தையாகப் பிறந்து எனது பெற்றோர்களால் நான் ஜாக்கிரதையாக வளர்க்கப்பட்டதோடு மிக அருமையான பயிற்சியையும் பெற்றேன். எனது அதிசயிக்கத்தக்க உடலமைப்பையும், விரிந்த மார்பையும், கட்டுமஸ்தான புஜங்களையும் கண்டு ஜனங்கள் மெச்சுவது வழக்கம். எட்டையபுரம் ராஜா எனது கட்டான உடம்பையும், என்னுடைய நன்னடத்தையையும், பழக்க வழக்கங்களையும் பார்த்து மிகவும் புகழ்வார். நான் இயற்கையாகவே தீரம், தைரியம், கவலையற்ற தன்மை, நேசப்பான்மை குடிகொண்டவனாக இருந்தேன். முன்னாளில் குறிப்பாக கிராமப்புறங்களில் கெட்ட வழக்கங்களை வளர்த்துக்கொள்ள இடமேயில்லை. அந்த சந்தர்ப்ப சூழ்நிலைகள் கல்வியிலும், குணத்திலும்முன்னேற மிகவும் சாதகமாக இருந்தன. நான்பையனாக இருக்கும்பொழுது அசாதாரண சுறுசுறுப்புடையவனாகவும் முன்னேற்ற ஆர்வமும் உடையவனாக இருந்தேன்.

ஒரு சமயம் அப்போதைய சென்னை கவர்னர் ஆம்த்தில் பிரபு 1901ல் வேட்டையாடுவதற்காக குருமலைக் குன்றுகளுக்கு வந்தபொழுது அவருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்க நான்தான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். இது எனக்கு இப்பொழுதும் நன்றாக நினைவிருக்கிறது.

கோவில்பட்டி ரயிலடிக்கு அடுத்துள்ள குமாரபுரம் ரயில்நிலைய மேடையில் ஆங்கிலத்தில் ஒரு வரவேற்பு கீதமும் பாடினேன். பள்ளிக்கூட வருடாந்திர பரிசளிப்பு விழாவில் நான் ஏராளமான புஸ்தகங்களைப் பரிசாகப் பெறுவது வழக்கம். ஒரு சமயம் நான் ''ஷேக்ஸ்பியர் மெக்காலே இவர்களின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்'' என்ற சர்வதேசப் பதிப்பைப் பெற்றேன். நான் எனது மெட்ரிகுலேஷன் பரீட்சையை 1903ல் எட்டயபுரம் ராஜாஸ் ஹைஸ் கூலிருந்து தேறினேன். பிறகு திருச்சிராப்பள்ளி S. P. G. கல்லூரியில் சேர்ந்தேன். அப்பொழுது அதன் தலைவராக, இப்பொழுது பாதிரியாக இருக்கும் ரெவெரெண்ட் H. பாக்கன்ஹாம் வால்ஸ் இருந்தார்.

கல்லூரியில் எனக்கு நாடகத்தில் நடிக்க விருப்பம் அதிகம் இருந்தது. 1905ல் ஷேக்ஸ் பியருடைய ''நடுவேனிலிரவுக் கனவு'' நாடகம் கல்லூரியில் போடப்பட்டபொழுது நான் ஹெலீனு (பெண் வேஷம்) பாகத்தை ஏற்று நடித்தேன். நான் மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சையில் நல்ல தகுதிபெற்றுத் தேறினேன். நான் மருத்துவத் துறையைத் தேர்ந்தெடுத்து திருச்சிராப்பள்ளியில் மூன்றுண்டு காலம் ''அம்ப்ரோஸியா'' என்ற மருத்துவ பத்திரிக்கையை நடத்திவந்தேன். நான் மிகுந்த ஆவலும் ஊக்கமும் உள்ளவனுக இருந்தேன்.

நான் பள்ளியில் அபாரமான கடின உழைப் பாளியாக இருந்தேன். தஞ்சாவூர் மருத்துவப் பள்ளியிலே படிக்கும்போது விடுமுறை நாட்களில் வீட்டிற்குப் போவது கிடையாது. முழுநேரத்தை யும் ஆஸ்பத்திரியிலேயே கழிப்பது வழக்கம். ரண

சிகிச்சை அறைக்குள் எனக்குப் போகவர தாராள மான அனுமதியுண்டு. நான் அங்குமிங்கும் ஓடிக் கொண்டு மேல் வகுப்பு மாணவனுக்குத் தெரிந்த அளவு ரணசிகிச்சை முறைகளைப் பற்றிய அறிவைப் பெற்றுக்கொண்டிருப்பேன். இதனால் நான் மேல் வகுப்பு மாணவர்களோடு பாடத் திறமையிலே போட்டிபோட முடிந்தது. நான் எல்லா பாடங் களிலும் முதன்மையாக இருந்தேன்.

மன்னார்குடி ஆஸ்பத்திரியிலிருக்கும் ஒரு கெட்டிக்கார உதவி மருத்துவரைப்பற்றி கேள்விப் பட்டிருக்கிறேன். நான் அவரைப்போல் ஆக வேண்டும் என்று விரும்பினேன். பல பட்டங்கள் பெற்ற பல டாக்டர்களைக் காட்டிலும் அதிக அறிவைப் பெற்றிருந்தேன் என்பதை மிக மிகப் பணிவோடு குறிப்பிட விரும்புகிறேன். வீட்டில் எனது தாயாரும், சகோதரர்களும் வேறு துறையில் ஏதாவது தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு தூண்டுவார்கள். ஆனால் நான் எனக்கிருந்த ஆர்வத்தின் காரணமாக மருத்துவத் துறையை இறுகப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற முடிவில் விடாப்பிடியாக இருந்தேன். என்னுடைய ஓய்வு நேரம் முழுவதும் மருத்துவப் புத்தகங்களைப் படிப்பதிலேயே கழிந்தது.

மருத்துவப் பள்ளியிலே முதல் வருஷம் படிக்கும்போது இறுதியாண்டு மாணவன் பதிலளிக்க முடியாத கேள்வித்தாள்களுக்கு என்னால் பதிலளிக்க முடிந்தது. நான் வகுப்பிலே எல்லா பாடங்களிலும் முதன்மையாக இருந்தேன். எனது முதல் வருஷத்தில் டாக்டர் திருமுடிஸ்வாமி அவர்களோடு ''ஆஸ்லர்''ருடைய மருந்துகளைப் பற்றி கற்றறிந்தேன். அது எனக்கு ஒரு அரிய வாய்ப்பாகும். லெப்டினென்ட் கர்னல் ஹாஸல்

ரைட் I. M. S. அவர்கள் என்னை நேசித்தார். டாக்டர் ஞானம் என்னை அந்த ஸ்தாபனத்திற்கே ஒரு அணிகலன் என்று புகழ்ந்தார். விடுமுறையின் போது கூட நான் ஆஸ்பத்திரியில் வேலை செய்து பல புதிய பாடங்களை கற்றுக்கொண்டேன்.

ஒரு மருத்துவப் பத்திரிகை நடத்தவேண்டு மென்று ஒரு யோசனை செய்தேன். உடனே அதற்கு வேண்டிய விவரங்களைத் தயாரித்தேன். ஆரம்பச் செலவுகளுக்காக எனது தாயாரிடமிருந்து நூறு ரூபாய் வாங்கினேன். ஆயுர்வேத வைத்தியர்களை ஆயுர்வேதத்தைப்பற்றிய கட்டுரைகளுக்காக அணுகுவதுண்டு. நானே சொந்தமாக பல விஷயங் களைப்பற்றி கட்டுரைகள் எழுதி பல புனைப் பெயர் களில் அவைகளை ''அம்ப்ரோஸியா'' வில் வெளி யிட்டு வந்தேன்.

1909-ல் ஆரம்பித்த சின்னளிலேயே அந்தப் பத்திரிகை விரைவில் பிரசித்தமடைந்தது. பல பிரமுகர்கள் அதற்குக் கட்டுரைகள் கொடுக்க ஆரம்பித்தனர். ஒரு சமயம் எனது தாயாருக்கு ஏதோ ஒரு பண்டிகை கொண்டாடுவதற்காக செலவுக்கு நூற்றைம்பது ரூபாய் தேவையாக இருந்தது. நான் இந்தத் தொகையைத் தயாராக வைத்திருந்தேன்.

நான் மலேயாவுக்குப் புறப்படும் வரையிலும் ''அம்ப்ரோஸியா'' பத்திரிகை நான்காண்டு காலம் வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருந்தது. அதன் ஒவ்வொரு வெளியீடும் 32 பக்கங்கள் கொண்டு டெமி குவார்ட்டோ அளவில் நன்றாக அழகாக அமைந்திருந்தது. பிரதி மாதமும் அது வாசகர்களுக்களித்து வந்த விஷயங்கள் எல்லா மருத்துவர்களுக்கும் பெரிதும் பயனுள்ளவைகளாக

இருந்தன. ''அம்ப்ரோஸியா'' வைப் புரட்டினால் பக்கத்திற்குப் பக்கம் குறிப்பிடத்தக்க ஆத்மீக மெருகு கொடுக்கப்பட்டிருப்பதை உணரலாம். மற்ற மருத்துவப் பத்திரிகைகளைப் போலல்லாது அதனுடைய கருத்துக்கள் (நோக்கங்கள்) அனைத்தும் பண்டைய முனிவர்களின் உபதேசங்களை ஆதாரமாகக் கொண்டவை. ஆத்மீக உணர்ச்சியானது எனது இளமைப் பருவத்திலே கூட ஆழமாகப் பதிந்திருந்தது.

## வாழ்க்கையிலே சோதனைகள்

நான் அந்தப் பத்திரிகை நடத்துவதோடு திருப்தியடையவில்லை. நான் என்னுடைய வாழ்க்கைச் செலவிற்காகவும் பத்திரிகையை ஸ்திரப்படுத்துவதற்காகவும் ஏதாவது ஒரு வேலை செய்ய விரும்பினேன். ஆகவே நான் திருச்சிராப்பள்ளியை விட்டு சென்னைக்கு டாக்டர் ஹாலருடைய ஆஸ்பத்திரியில் சேருவதற்குச் சென்றேன். இங்கு நானே கணக்குகளையும், மருந்து கொடுக்கும் வேலையையும், நோயாளிகளையும் கவனித்துக் கொள்ள வேண்டியிருந்தது. மிகுந்த கடின உழைப்பு நான் உழைக்கவேண்டியிருந்தது. நான் இந்த வேலைகளனைத்தையும் முடித்த பிறகுங் கூட ''அம்ப்ரோஸியா''விற்குத் தலையங்கம் எழுதவும், பத்திரிகை விற்பனை வேலையைக் கவனிக்கவும் எனக்கு நேரம் கிடைத்தது. நான் திருச்சிராப்பள்ளியிலிருந்து பழைய பிரதிகளைக் கொண்டு வந்து உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கும் பெரிய மனிதர்களுக்கும் அவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்காக அனுப்பி வைத்தேன். நான் வேறு எங்காவது இன்னும் சற்று உயர்ந்த நிலையைத்தேடத் தீர்மானித்தேன். கடைசியாக நான் என்னுடைய அதிர்ஷ்டத்தை மலேயா

நாட்டில் பார்க்க விரும்பினேன். ஆகவே சில நாட்களுக்கு முன்பு டாக்டர் ஹாலர் வீட்டுக்கு அருகாமையில் இருந்த டாக்டர் ஐயங்கார் என்ற நண்பர் ஒருவருக்கு எழுதினேன். நான் டாக்டர் ஐயங்கார் அவர்களுக்கு மலேயா வரத் திட்ட மிட்டிருப்பதாக எழுதினேன். ''S. S. தாரா'' என்ற கப்பலில் சென்னையை விட்டுப் புறப்பட்டேன்.

நான் அவ்வளவு நீண்ட பிரயாணத்திற்குப் பழக்கப்படவில்லை. வழியில் என்ன உணவு எடுத்துக்கொள்வது, மலேயாவில் எனது தொழிலை ஆரம்பிப்பதற்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டும், எவ்வளவு பணம் தேவைப்படும் என்பவைகளைப்பற்றி எனக்கு எந்த விதமான அபிப்பிராயமும் இல்லை. நான் எனது சாமான்களை மூட்டை கட்டிக்கொண்டேன். அதே சமயத்தில் எனது தாயார் எனக்காக அன்பாகச் செய்து கொடுத்த தித்திப்பு பலகாரங்களிலும் போதிய அளவு எடுத்து வைத்துக்கொள்ள மறந்துவிட வில்லை. நான் வைதீக குடும்பத்தைச் சேர்ந்த காரணத்தால் கப்பலில் அசைவ உணவை எடுத்துக் கொள்ள அஞ்சி போதிய அளவு தித்திப்புப் பலகாரங்களை எடுத்துச் சென்றேன். இளமை யிலே நான் இனிப்புப் பண்டங்களை அளவுகடந்து விரும்பினேன். கடல் பிரயாணம் முழுவதிலும் அந்த இனிப்புப் பலகாரங்களையே சாப்பிட்டும், நிறைய தண்ணீரைக் குடித்துக் கொண்டுமே சமாளித்தேன். இம்மாதிரியான ஆகாரம் பழக்க மில்லாத காரணத்தால் அரை உயிரோடு சிங்கப் பூரை அடைந்தேன்! நிச்சயமற்ற தன்மை என்கின்ற ஆழ்கடலிலே ஒருவன் குதிப்பது ஒரு மனிதனிடம் பொருந்திய சாகஸச் செயலேயாகும். என்னுடைய மதிப்பீட்டிற்கு பதில் நேர்மாறாக ஒருவேளை நிகழ்ந்து விட்டால் திரும்பி

வருவதற்குக் கூட என்னிடம் பணம் கிடையாது. இருந்த போதிலும் எனக்கு அபார நம்பிக்கை இருந்தது. ஆகவே எனது விதியின் சக்தியைச் சோதித்துப்பார்க்கத் தைரியமாகக் குதித்தேன். மனோசக்தியும், தீவிர உறுதியும் எனது வாழ்க்கையும் ஆத்மீகத்துறையும் உருவாகுவதற்குப் பெரிதும் காரணமாக இருந்தன. தொலைவிலுள்ள அந்த மலேயா மண்ணிலே எனக்கு சொகுசான முன்னேற்றம் காத்திருக்கவில்லை. ஏனெனில் முற்றிலும் அறிமுகமாகாதவன், சிநேகிதர்களற்றவன், எந்தவிதமான பொருளாதார பாதுகாப்புமில்லாதவன்; நான் அஸ்திவாரத்திலிருந்து ஆரம்பிக்க வேண்டியிருந்ததோடு கூட ஏமாற்றமடையக்கூடிய இடையூறுகளையும் ஆரம்பத்தில் சமாளிக்க வேண்டியிருந்தது. ஆனால் பிறகு நடந்த சம்பவங்கள் எனக்கு மிகவும் சாதகமாகத் திரும்பின. நான் எனது நிலை பத்திரமாக இருப்பதை உணர்ந்தேன்.

கப்பலை விட்டு இறங்கியதும் டாக்டர் ஐயங்கார் வீட்டுக்குச் சென்றேன். அவர் நெக்ரி செம்பிலான் தலைநகரான செரம்பானில் உள்ள அவருக்குப் பழக்கமான டாக்டர் ஹரோல்டு பார்ஸன்ஸ் என்பவருக்கு ஒரு அறிமுகக் கடிதத்தை என்னிடம் கொடுத்தார். செரம்பானை அடைந்ததும் டாக்டர் பார்ஸன்ஸ் அங்கில்லை என்பதைக் கண்டேன். அதற்குள் என்னிடமிருந்த சிறிது பணமும் செலவாகி விட்டது. எனக்கு வேலை கிடைத்துவிடும் என்ற திடமான நம்பிக்கையுடன் இருந்தேன். டாக்டர் பார்ஸன்ஸுக்கே உதவிக்கு ஆள் தேவைப்படாமலிருந்தது. நான் அந்த மருத்துவரை கட்டாயப் படுத்தியதில் அவர் அருகாமையில் சொந்த ஆஸ்பத்திரியுடன் கூடிய ஒரு ரப்பர் தோட்டத்தின்

மானேஜர் ஸ்ரீ A. G. ராபின்ஸ் என்பவரிடம் அழைத்துச் சென்றார்.

எனது அதிர்ஷ்டவசமாக ஸ்ரீ A. G. ராபின்ஸுக்கு எஸ்டேட் ஆஸ்பத்திரியில் வேலை செய்ய அப்போதுதான் ஒரு ஆள் தேவையாக இருந்தது. அவர் உயர்ந்த, பருத்த, பூதாகாரமான உருவமுடைய ஒரு பயங்கரமான முன் கோபக்காரரர். அவர் என்னை ''நீயே தனியாக ஒரு ஆஸ்பத்திரியைப் பார்த்துக்கொள்ள முடியுமா?'' என்று கேட்டார். நான் அதற்கு ''நான் மூன்று ஆஸ்பத்திரிகளைக் கூட பார்த்துக்கொள்ள முடியும்'' என்று பதிலுரைத்தேன். நான் உடனே வேலையில் அமர்த்தப்பட்டேன். அவர்களுடைய கொள்கைப் படி மாதமொன்றுக்கு நூறு டாலர்களுக்குக் குறைவாக பெறக்கூடாது என்று அங்குள்ள ஒரு இந்தியர் மூலம் கேள்விப்பட்டேன். ராபின்ஸ் அவர்கள் ஆரம்பத்தில் நூற்றைம்பது டாலர்கள் கொடுக்க ஒப்புக்கொண்டார்.

அந்த எஸ்டேட் ஆஸ்பத்திரியில் இருந்த டாக்டர் அப்போதுதான் விலகியிருந்திருக்கிறார். அவர் அவ்வளவு தகுதியில்லை என்று நான் கேள்விப் பட்டேன். நான் உடனே ஆஸ்பத்திரியிலுள்ள சாமான்களைப்பற்றியும், அங்குள்ள கையிருப்பு மருந்துகளைப்பற்றியும் விவரங்களை அறிந்து கொண்டு வேலையில் ஒன்றிவிட்டேன். இங்கு மறுபடியும் கடினவேலை எனக்காகக் காத்திருந்தது. நான் சென்னையில் டாக்டர் ஹாலரிடம் செய்தது போலவே இங்கும் ஆஸ்பத்திரிக் கணக்குகளைக் கவனித்துக்கொண்டதோடு மருந்து கலக்கிக் கொடுக்கவும் நோயாளிகளை நேரில் சென்று கவனிக்கவும் வேண்டியிருந்தது. அசாதாரணமான இடையூறுகள் எனக்கு வர ஆரம்பித்தன. சில

நாள் கழித்து வேலையை ராஜிநாமா செய்து விடலாம் போலிருந்தது. ஆனால் ஸ்ரீ A. G. ராபின்ஸ் என்னை போக அனுமதிக்கவில்லை.

பிறகு நான் ஜோஹோர் மெடிகல் ஆபீஸில் இருந்தபொழுது எனது உதவியாளர்கள் எனது அன்பையும் பரிவையும் அளவுக்குமிஞ்சி பயன் படுத்திக்கொண்டு அவர்களுடைய வேலையில் தூங்க (அசட்டையாக இருக்க) ஆரம்பித்துவிட்டனர். நான் அவர்களுடைய வேலையையும் சேர்த்துச் செய்ய வேண்டியதாயிற்று. அங்கும் நான் அதிக வேலை என்று புகார் பண்ணுவதற்கில்லை. ஏனெனில் முதலாளி அவர்களிடம் கோபித்துக்கொள்வார். என்னுடைய அதிக வேலைப் பிரச்னை மலேயாவில் தீர்க்கப்படவேயில்லை. இருந்தபோதிலும் நான் அதே வேலையிலேயே தொடர்ந்து இருந்துவந்தேன்.

செரெம்பானுக்குப் பக்கத்திலுள்ள எஸ்டேட் ஆஸ்பத்திரியில் நான் சுமார் ஏழாண்டுகாலம் சேவை செய்தேன். அதன் பிறகு அப்பொழுது யுத்த சேவையிலிருந்து திரும்பி வந்திருந்த டாக்டர் பார்ஸன்ஸ் அவர்களின் தூண்டுதலின் பேரில் நான் ஜோஹோர் மெடிகல் ஆபீஸ் லிமிடெட்டில் சேர்ந்தேன். நான் இந்த உலகைத் துறப்பதற்கு முன் ஜோஹோரில் மூன்றாண்டுகாலம் வேலை செய்தேன்.

மலேயாவில் நான் நூற்றுக்கணக்கான ஏழை உள்ளூர் வாசிகளோடும், ஒப்பந்தப்படுத்தப்பட்ட தொழிலாளிகளோடும், உள்ளூர் நகர வாசிகளோடும் நேர் தொடர்பு வைத்திருந்தேன். நான் மலேயா மொழியைக் கற்றுக்கொண்டு அவ்வூர் வாசிகளோடு அவர்கள் மொழியிலேயே பேசினேன்.

நான் அம்மாகாண மக்களுக்கு நல்ல முறையில் சேவை செய்து அவர்கள் எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமானேன். நான் முதலாளி, தொழிலாளி இருவருடைய நன்மதிப்பையும் பெற்றேன். எனக்கு எப்பொழுதும் சேவை செய்வதில் பிரியமதிகம். இந்தக் கணத்தில் ஆஸ்பத்திரியிலிருப்பேன். அடுத்த கணமே எங்காவது ஒரு ஏழை நோயாளியின் வீட்டிலே அவனையும் அவன் குடும்பத்தாரையும் கவனித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். டாக்டர் பார்ஸன்ஸ் அந்த எஸ்ட்டேட் ஆஸ்பத்திரிக்கு அடிக்கடி வந்து பார்த்துவிட்டுப் போகிற மருத்துவர். அவர் என்னை மிகவும் நேசித்தார். நான் அவருடைய சொந்த வேலையில் கூட ஒத்தாசை செய்வதுண்டு. அடிக்கடி நான் எனது வருமானத்தை நண்பர்களுடைய, நோயாளிகளுடைய உதவிக்காக செலவழிப்பதுண்டு. எனது சொந்தப் பொருட்களில் சிலவற்றை அடகு வைக்கும் அளவுக்குச் சென்று விட்டேன்.

நான் முதலாளி தொழிலாளி இருவர்களுக்கும் நண்பனாக இருந்தேன். அங்கு தோட்டிகள் வேலை நிறுத்தம் செய்தால் எஸ்ட்டேட் மானேஜர் உடனே என்னிடம்தான் வருவார். நான் எப்படியாவது அங்குமிங்கும் ஓடி அவர்களை மறுபடி வேலைக்குக் கொண்டுவந்து விடுவேன். எனது சொந்த வேலையைத்தவிர நான் மற்ற ஆஸ்பத்திரிகளுக்கும் சென்று விஷக்கிருமிகள் சம்பந்தப்பட்ட மற்றும் இதர விஷயங்களைப்பற்றியும் தனிப்பட்ட (அனுபவத்தை) அறிவைப்பெறுவதுண்டு. அந்தச் சமயத்தில் நான் படித்துக் கரைத்துக் குடிக்காத ஆங்கில மருத்துவ புத்தகம் ஒன்றுகூட கிடையாது. இத்தனையும் தவிர எனது உதவியாளர்களுக்கும் உதவி செய்து தினமும் சிறிது

நேரம் பயிற்சி கொடுத்து பிறகு அவர்களுக்கு சிபார்சுக் கடிதம் கொடுத்து, ரயில் செலவுக்கு எனது சொந்த பணத்தைக் கொடுத்து, அவசர செலவுகளுக்கும் கொஞ்சம் பணம் கொடுத்து மற்ற ஆஸ்பத்திரிகளுக்கு அனுப்பி வைப்பேன். விரைவில் செரெம்பானிலும், ஜோஹோர் பாஹ்ரு விலும் நான் நன்ருக அறிமுகமானேன். பாங்க் மானேஜர் என்னுடைய செக்குகளை எந்த நேரத்தில் கொடுத்தாலும், விடுமுறை நாட்களில் கூடப் பெற்றுக்கொள்வார். என்னுடைய சேவை யின் மூலமாகவும் சரளமாக எல்லோருடனும் பழகும் சுபாவத்தினுலும் நான் ஒவ்வொருவருக்கும் நண்பனுனேன். எனக்கு விரைவான உத்தியோக உயர்வும் அதன் மூலம் எனது சம்பளமும் தனிப் பட்ட வருவாயும் எல்லையற்றுப் பெருகின. இவை யெல்லாம் ஒரு நாளில் சாதிக்கப்பட்டவையல்ல. அது எப்படி பெறப்பட்டது என்ருல் மிகக் கடின உழைப்பு, மனந்தளரா ஊக்கம், இடை விடா முயற்சி, நன்மை நற்குணங்களின் தத்துவங் களிலும் அசையா நம்பிக்கை, அவைகளை எனது தினசரி வாழ்க்கையில் பயன்படுத்தியது ஆகிய இவைகளாலேயேயாம்.

என்னுடைய மலேயா உத்தியோகத்தின்போது நான் சிங்கப்பூர் ''மலேயா ட்ரிப்யூன்'' பத்திரிக் கைக்கு ''பொதுஜன சுகாதார''த்தைப்பற்றிப் பல கட்டுரைகள் வழங்கியிருக்கிறேன்.

## சமுதாய சேவையில் முதல் பாடங்கள்

நான் சூக்ஷ்ம தரிசனிப்பாடத்திலும் உஷ்ண மண்டல மருந்து வகைகளிலும் தனிப்பட்ட தேர்ச்சியடைந்தேன். பிறகு சிங்கப்பூருக்கு அருகாமையில் உள்ள ஜோஹோர் பாஹ்ருவுக்கு

டாக்டர்கள் பார்ஸன்ஸ், கிரீன் என்பவர்களோடு சேருவதற்காகச் சென்று அங்கு மூன்றுண்டுகாலம் வசித்து வந்தேன். டாக்டர்கள் பார்ஸன்ஸ், கிரீன், கார்லிக், க்லென்னி இவர்கள் நான் மருத்துவத் துறைக்கு மிகவும் பொருத்தமானவன் என்று புகழ்ந்தார்கள். என்னுடைய சரளமான, துரிதமான, திறமையான சுபாவத்தைக் கண்டு என்னை மெச்சினுர்கள். நான் சந்தோஷமாகவும், உற்சாகத்துடனும், திருப்தியாகவும் இருந்தேன். நான் ஜாக்கிரதையாக எல்லா நோயாளிகளையும் கவனித்து வந்தேன். எனது வாடிக்கைக்காரர்களிடமிருந்து பணம் கேட்டதே கிடையாது. அவர்கள் துன்பத்திலிருந்தும் நோயிலிருந்தும் விடுதலையடைவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன். மக்களுக்குச் சேவை செய்வதும் என்னிடம் இருப்பதைப் பகிர்ந்துகொடுப்பதும் என்னுடன் பிறந்த குணங்களாகும்.

நான் எனது விகடத்தாலும், வேடிக்கைப் பேச்சாலும் மக்களை உற்சாகப்படுத்துவதுண்டு. நோயாளிகளை அன்பான, ஆறுதலான வார்த்தைகளால் ஊக்கப்படுத்துவதுண்டு. நோயாளிகள் உடனே ஒரு புது ஆரோக்கியத்தையும், நம்பிக்கையையும், ஊக்கத்தையும், சக்தியையும், தெம்பையும் உணர்கின்றனர். எங்கும் ஜனங்கள் எனக்கு கடவுளிடமிருந்து தனிப்பட்டதொரு அருட்சக்தி கிடைத்திருக்கிறதென்றும் அதனுல் நோயாளிகளை அதிசயிக்கத்தக்க முறையில் குணப்படுத்துவதாகவும் கூறினர். தவிர என்னை ஒரு கவர்ச்சிகரமான கம்பீரமான தோற்றத்தோடு கூடிய, அன்பும் அனுதாபமும் காட்டக்கூடிய டாக்டர் என்று கொண்டாடினர். மிகவும் மோசமான நோயாளிகள் விஷயத்தில் நான் இரவில்

கண் விழித்துப் பிரார்த்திப்பதுண்டு. நோயாளிகளோடு இருக்கும்போது, அவர்களுடைய உணர்ச்சிகளை உணர்ந்து அவர்களுடைய கஷ்டங்களை நிவர்த்திக்க முயற்சி செய்திருக்கிறேன்.

நான் லண்டனிலுள்ள ராயல் இன்ஸ்டிட்யூட் ஆப் பப்ளிக் ஹெல்த் சங்கத்திலும், லண்டனிலுள்ள ராயல் ஏஷியாடிக் சொஸைடியிலும் லண்டனிலுள்ள ராயல் சானிடரி இன்ஸ்டிட்யூட்டிலும் அங்கத்தினனாக ஆனேன். நான் மலேயாவில் தங்கியிருக்கும்போது ''வீட்டு வைத்தியம்'' ''பழங்களும் ஆரோக்கியமும்'' நோய்களும் அதன் தமிழ்ப் பெயர்களும்'' ''மகப்பேறு புள்ளி விவரக் குறிப்பேடு'' ''பொது சுகாதாரத்தைப்பற்றி 14 பிரசங்கங்கள்'' போன்ற சில மருத்துவப் புத்தகங்களை வெளியிட்டேன். நான் பலபேருக்கு அவர்கள் வேலையில்லாதிருந்தபோது இருக்க இடம் கொடுத்து உண்ண உணவு கொடுத்து உடுக்க உடைகொடுத்து ஏதாவதொரு அலுவலகத்தில் வேலையில் அமர்த்தினேன்.

நான் தாராள மனப்பான்மையுள்ளவனாக இருந்தேன். சந்நியாச உணர்ச்சி என்னிடம் ஆழமாகப் பதிந்திருந்தது. குறுகிய மனப்பான்மை, ராஜதந்திரம், இங்கொன்று அங்கொன்று சொல்லுதல் ஆகியவைகள் எனக்குத் தெரியாதவை. நான் மிகவும் உண்மையாகவும், நேர்மையாகவும், எளிமையாகவும், வெள்ளை உள்ளம் படைத்தவனாகவும் இருந்தேன். பல இளைஞர்களுக்கு நான் வேலைசெய்த ஆஸ்பத்திரியில் பயிற்சியளித்து பல்வேறு எஸ்டேட் ஆஸ்பத்திரிகளில் வேலைக்கு அமர்த்தினேன். நான் எனது முழு சக்தியையும், நேரத்தையும் இரக்க உள்ளத்தோடு, இரவும் பகலும், ஏழைகளுக்கும் நோயாளி

களுக்கும் சேவை செய்து மனித வர்க்கத்தின் துன்பங்களைத் துடைப்பதிலேயே செலவழித்தேன். இவ்வகையான தன்னலமற்ற சேவை என் உள்ளத்திற்கும் எண்ணத்திற்கும் தூய்மையைக் கொடுத்து ஆத்மீக வழியில் நடத்திச்சென்றது.

எனது இளமையில் எனக்கு உயர்ந்த ரக ஆடைகளிலும், தங்கம், வெள்ளி, சந்தனக்கட்டை ஆகியவைகளால் செய்யப்பட்ட வேடிக்கையான, அலங்காரப் பொருள்களைச் சேர்ப்பதிலும், அலாதிப் பிரியம் இருந்தது. சில சமயங்களில் நான் பலவகையான தங்க மோதிரங்களையும், கழுத்தணிகளையும் வாங்கி அவற்றையெல்லாம் ஒரே சமயத்தில் அணிந்து பார்ப்பது வழக்கம். நான் கடைகளில் புகுந்தால் சாமான்களைத் தேர்ந்தெடுப்பதில் நேரத்தைச் செலவழிப்பது கிடையாது. கண்ணுக்குப் பட்டதையெல்லாம் சேகரித்துவிடுவேன். நான் அற்ப விஷயங்களுக்காக வழக்காடுவதையும், பேரம் பேசுவதையும் விரும்பவில்லை. கடைக்காரனுடைய பட்டியலுக்கு அதன் விவரங்களைப் பார்க்காமலேயே பணம் கொடுத்து விடுவேன். இப்பொழுதுகூட, எப்பொழுதாவது புத்தகக் கடைக்குள் நுழைந்தால், ஆஸ்ரமத்திலுள்ள மாணவர்கள் பயனடையும் பொருட்டு நிறைய புத்தகங்களை வாங்கி ஆரண்ய சர்வகலாசாலை நூலகத்தில் சேர்ப்பதுண்டு.

என்னிடம் பல தொப்பிகள் இருந்தன. ஆனால் அவைகளை ஒருபோதும் போட்டதில்லை. சில சமயங்களில் என்னுடைய கம்பளித் தொப்பியையும் ராஜபுத்திர இளவரசனைப்போல் பட்டுத் தலைப்பாகையையும் உபயோகிப்பதுண்டு. நீண்ட நாட்கள் எனது உணவை நானே சமைத்து வந்தேன். சைக்கிள் சவாரி எனது சிறந்த தேகப்

பயிற்சியாக இருந்தது. நான் விருந்தாளிகளை வரவேற்று மிகுந்த அன்போடும், மரியாதையோடும் அவர்களுக்கு உபசரணை செய்வேன். மலேயா உணர்ச்சிகளைத் தூண்டிவிடக்கூடிய தேசம் தான்; ஆனால் என்னை எதுவும் தூண்டிவிட முடியவில்லை. நான் ஸ்படிகம் போன்ற தூய்மையுள்ளவனாக இருந்தேன். தினசரி தியானம், பிரார்த்தனை, வேத புத்தகங்கள் படித்தல் ஆகியவற்றைச் செய்தேன். நான் நந்தன் சரித்திரம் நடத்துவதும், ஹார்மோனியம் வாசிப்பதும், பஜனை செய்வதும், கீர்த்தனைகள் பாடுவதும் வழக்கம். மலேயாவில் கூட அனாகத லய யோகத்தையும், ஸ்வர சாதனையையும் பழகி வந்தேன்.

---

## அத்தியாயம் இரண்டு

# அழியாச் சக்தியின் அழைப்பு

## ஒரு புது நோக்கின் விடிவு

''வழக்கமாக தினசரி அலுவலக வேலைகளும், சாப்பிடுவதும், அருந்துவதும் தவிர அதைவிட உயர்ந்ததொரு நோக்கம் வாழ்க்கையில் இல்லையா? இந்த அழியக்கூடியதும், பொய்யானதுமான இன்பங்களைவிட உயர்ந்ததொரு நிரந்தரமான அழியா இன்பம் இல்லையா? பலவகையான நோய்களோடும், ஆவல்களோடும், துன்பங்களோடும், பயத்தோடும், ஏமாற்றங்களோடும், இந்தப் பூமியில் வாழ்வது எவ்வளவு பாதுகாப்பற்றது! பெயர்களோடும், உருவங்களோடும் கூடிய இவ்வுலகம் இடைவிடாது மாறிக்கொண்டிருக்கிறது. காலம் வேகமாகச் சென்று கொண்டிருக்கிறது. இவ்வுலகில் ஆனந்தமடையலாம் என்ற

நம்பிக்கை முழுவதும் கடைசியாக துன்பம், ஏமாற்றம், துக்கம் இவைகளில்போய் முடிவடைகின்றது.''

இதுபோன்ற எண்ணங்கள்தான் எனது உள்ளத்தில் இடைவிடாது முளைத்துக்கொண்டிருந்தன. மருத்துவத் தொழிலானது இவ்வுலகின் துன்பங்களைக் காண நல்லதொரு வாய்ப்பைக் கொடுத்தது. இரக்க உள்ளம் படைத்த ஒரு ''வைராகி''க்கு இவ்வுலகம் துன்பம் நிறைந்ததே. உண்மையானதும், நிரந்தரமானதுமான ஆனந்தத்தை சொத்து சேர்த்துக்கொண்டிருப்பதில் மட்டும் காண முடியாது. தன்னலமற்ற சேவை மூலமாக உள்ளம் தூய்மையடைந்ததனுல் எனக்கு ஒரு புது நோக்கு ஏற்பட்டது. ஆத்மாநுபூதி மூலமாக பூர்ணமான பாதுகாப்பு, முழு அமைதி, நிரந்தரமான ஆனந்தம் ஆகியவைகளை அடையக்கூடிய ஒரு இடம் — பழம் புகழ்பெற்ற, தூய்மையான, தெய்வீக ஒளி பொருந்தியதொரு இனிய வாசஸ்தலம் — இருக்க வேண்டும் என்ற முழு நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது.

நான் அடிக்கடி ''யாதஹாரேவ விராஜேத் தாதஹாரேவ ப்ரவ்ரஜேத்''—''என்று ஒருவன் வைராக்கியத்தை அடைகிருனே அன்றே அவன் உலகத்தைத் துறக்க வேண்டும்'' என்ற ஸ்ருதி வாக்கியத்தை ஞாபகப்படுத்திக் கொண்டேன். நான் இடைவிடாது ''ஸ்ரவணார்த்தம் சந்யாஸம் குர்யாத்''—அதாவது ''ஸ்ருதிகளைக் கேட்பதற்கு ஒருவன் சந்நியாசத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்'' என்பதை நினைத்தேன். வேதவாக்கியங்களுக்கு பெருமதிப்பு உண்டு. நான் சொகுசான, சௌகரியமான, ஆடம்பரமான வாழ்க்கையை விட்டுவிட்டு, பிரார்த்தனை, தியானம், படிப்பு,

உலகமனைத்திற்கும் சேவை செய்ய உயர்ந்ததொரு மார்க்கம் ஆகியவைகளுக்காக எடுத்துக்காட்டாக விளங்குகின்றதொரு இடத்தைத் தேடிக் கண்டு பிடிக்கக் கருதி இந்தியா வந்தடைந்தேன்.

1923ல் இந்த சொகுசான, பணம் திரட்டும் வாழ்க்கையைத் துறந்து பேருண்மையைத் தேடுகின்ற உண்மையானதொரு சந்நியாசி வாழ்க்கையை மேற்கொண்டேன். எனது மூட்டை முடிச்சுக்களை மலேயாவில் ஒரு நண்பரிடம் விட்டு வந்தேன். 1939ல் மலேயாவிலுள்ள ஒரு ஆசிரியர் ஆசிரமத்திற்கு வந்தபோது என்னிடம் ''மிஸ்டர் நீங்கள் திரும்பி வருவீர்கள் என்று உங்கள் சாமான்களனைத்தையும் அப்படியே வைத்துக் கொண்டிருக்கிறுர்'' என்று கூறினுர்.

## அலைந்து திரியுமொரு சந்நியாசியாக

சிங்கப்பூரிலிருந்து காசியை அடைந்து சிவ பெருமானைத் தரிசித்தேன். பிறகு நாசிக், பூனு மற்றும் இதர முக்கியமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றேன். பூனுவிலிருந்து பண்டரிபுரத்திற்கு எழுபது மைல் தூரம் நடந்து சென்றேன். வழியில் கெட்கேவானில் உள்ள யோகி நாராயண் மஹராஜ் அவர்களின் ஆஸ்ரமத்தில் ஒரு சில தினங்கள் தங்கினேன். பிறகு சந்திரபாகா நதிக்கரையில் உள்ள தலஜ் என்ற இடத்தில் ஒரு நான்கு மாதங்கள் கழித்தேன். எனது இடைவிடா யாத்திரையில் நான் எவ்விதம் பல்வேறுவிதமான மக்களிடம் சந்தர்ப்ப சூழ்நிலையை அனுசரித்து நடப்பது என்பதைக் கற்றுக் கொண்டேன்.

நான் யோகிகளுடைய, மஹாத்மாக்களுடைய, பெரியார்களுடைய வாழ்க்கைகளிலிருந்து ஏராளமாகக் கற்றுக்கொண்டேன். என்னுடலோடு ஊறியிருக்கும் அந்த சேவா மனப்பான்மை காரணமாக நான் எங்கணும் அமைதி நிறைந்த வாழ்க்கையை நடத்த இயன்றது. சந்நியாச வாழ்க்கையானது யாத்திரையின்போது திதிக்ஷா (சகிப்புத்தன்மை), சமநோக்கு, சுக துக்கங்களில் சீரான நிலையிலிருத்தல் ஆகிய குணங்களை பெருமளவு வளர்த்துக் கொள்ள பேருதவி புரிந்தது. நான் பல மஹாத்மாக்களை சந்தித்து அருமையான பாடங்களைக் கற்றேன். சில நாட்கள் உண்ண உணவின்றி தொடர்ந்து மைல் கணக்கில் நடக்க வேண்டியிருந்தது. புன்னகையோடு இன்னல்களனைத்தையும் சமாளித்தேன்.

## யாத்திரையினால் பலனடைவது எப்படி

மஹாத்மாக்களும், பக்தர்களும் ஆத்மீக சாதனையின் ஒரு அங்கமாக யாத்திரை செய்து பல புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்கிறார்கள். அவர்களுக்கு அதற்குப் பல நோக்கங்கள் உண்டு. மஹாத்மாக்கள் பல இடங்களில் உண்மையான பக்தர்களோடு தொடர்பு கொண்டு தங்கள் அறிவையும் அனுபவங்களையும் அவர்களுடன் பகிர்ந்துகொள்வதுடன் அவர்களுக்கு வழியும் காட்டுகிறார்கள். அவர்கள் தீவிர சாதனை செய்ய வசதியுள்ள, இறையுணர்வைத் தூண்டக்கூடிய, தியானம் செய்வதற்குத் தகுதியான இடங்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இல்லறத்தார்களுடைய சந்தேகங்களை நீக்கி, தங்கள் ஆசிகளைப் பொழிந்து, அவர்களுக்கு வழி காட்டுகின்றனர். பக்தர்கள் யாத்திரையில் மஹாத்மாக்களுடைய தரிசனங்களைப் பெற்று தங்கள் சந்தேகங்களை நிவர்த்தி

செய்துகொள்கின்றனர். அவர்கள் புனித ஆத்மாக் களையும், புண்ணிய ஸ்தலங்களையும் தரிசித்து இறையுணர்வு பெறுகிறார்கள். தவிர பலவிதமான மக்களோடு கலந்து பழகி பலவிதமான தெய்வீக குணங்களையும் வளர்த்துக்கொள்கிறார்கள். அவர்கள் எளிய வாழ்க்கையை நடத்தவும், இடையூறுகளைச் சகித்துக்கொள்ளவும் பழக்கப் படுத்தப்படுகிறார்கள்.

தங்கள் வாழ்நாள் முழுமையும் அடிக்கடி இலங்கையிலுள்ள கதிர்காமத்திலிருந்து திபெத்தி லுள்ள கைலாச பர்வதம் வரைக்கும், பூரியிலிருந்து துவாரகை வரைக்கும், காஷ்மீரிலுள்ள அமர்நாத்தி லிருந்து அலகாபாத் வரைக்கும், காசியிலிருந்து ராமேஸ்வரம் வரைக்கும் சுற்றி யாத்திரையிலேயே கழிக்கும் ஒரு சிலர் உண்டு. இவ்வாறு அலைந்து திரிந்து தங்கள் இளமையை வீணாக்கிக்கொண்டதற் காக முதுமையில் வருந்துகின்ற பல பேர்களை நான் பார்த்திருக்கிறேன். நான் என்னுடைய குரு நாதரைத் தேடிக்கொண்டும், தனிமையாக இருக்க வும், கடுமையான சாதனைகள் மூலமாக வாழ் நாளை கழிக்கவும் ஆத்மீக அலைகளால் நிரப்பப் பட்ட தகுதியானதொரு இடத்தைத் தேடிக் கொண்டும் அலைந்து திரியும் சந்நியாசி வாழ்க்கையை ஒரு சிறிது காலமே நடத்தினேன்.

## ஒரு குருவின் அவசியம்

ஆத்மீகப்பாதையானது பல இடையூறுகளால் சூழப்பட்டது. குருவானவர் சாதகர்களுக்கு பத் திரமான வழியைக்காட்டி அவர்கள் எதிர்நோக்க வேண்டிய இன்னல்களனைத்தையும் நீக்கி விடுகிறார். அவர் மாணவர்களுக்கு உணர்வை ஊட்டி, அவர் களுக்குத் தனது ஆசிகள் மூலமாக ஆத்மீக சக்தி

யையும் கொடுக்கிறார். குருவும், ஈஸ்வரனும், உண்மையும், மந்திரமும் ஒன்றேயாகும். குருவோடு நேர்தொடர்பு வைத்துக்கொள்வதும், அவருக்குச் சேவை செய்வதையும் தவிர, அனுபவமற்ற, உலகாயத மக்களின் உணர்ச்சிவசப் படக்கூடிய தன்மையாகிய இந்தப் பொல்லாத உலக சம்ஸ்காரங்களிலிருந்து விடுபட வேறொரு வழியும் கிடையாது.

ஒரு குருவைத்தேடிக்கொண்டு, ரிஷிகேசத்தை அடைந்து இறைவனிடம் அவனுடைய அருளுக்காக இறைஞ்சினேன். ''எனக்கு குரு தேவையில்லை. கடவுளே எனக்கு குரு'' என்று சொல்லுகின்ற ஆணவம் படைத்த மாணவர்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் தங்களுடைய உடைகளை மாற்றிக் கொண்டு சுதந்தரமாக இருக்கிறார்கள். இன்னல்களும், இடையூறுகளும் அவர்களை எதிர் நோக்கும் பொழுது கதிகலங்குகின்றனர். நான், வேதங்கள், சாதுக்கள், சந்நியாசிகள் வகுத்த சட்டதிட்டங்கள் மீறப்படுவதை விரும்பவில்லை. எப்பொழுது உள்ளத்திலே மாறுதல் ஏற்படுகிறதோ அப்பொழுது வெளித் தோற்றத்திலும் மாறுதல் இருக்கவேண்டும். ஒரு சந்நியாசியினுடைய மகத்துவமும், சுதந்திரமும், பயங்கொள்ளிகளாலும், சக்தியற்றவர்களாலும் எண்ணிப் பார்க்கக்கூட முடியாதவைகளாகும். நான் 1924-ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் தேதியன்று கங்கா நதிக் கரையிலே பரமஹம்ஸ விஸ்வானந்த சரஸ்வதி அவர்களின் திருக்கரங்களிலிருந்து புனித தீக்ஷையைப் பெற்றேன். ''விராஜஹோமம்'' என்ற மதச்சடங்கு எனக்காக கைலாச ஆஸ்ரமத்திலிருக்கும் என்னுடைய ஆச்சார்ய குரு ஸ்ரீ ஸ்வாமி விஷ்ணு தேவானந்தஜீ மஹராஜ் அவர்களால் செய்து வைக்கப்பட்டது.

ஆரம்பத்தில் தனக்கென்று ஒரு குரு அவசியம். அவரால்தான் குருக்களுக்கெல்லாம் குருவான இறைவனை அடைய உனக்கு வழிகாட்டி, உன்னுடைய பாதையிலே இருக்கின்ற பள்ளம், படுகுழிகளிலிருந்து காப்பாற்ற முடியும். ஆத்மானுபூதி என்பது ஒரு மானசிகமான அனுபவமாகும். உண்மையையுணர்ந்த, ஆத்மானுபூதியை அடைந்த ஞானிகளின் வார்த்தைகளில் முழுநம்பிக்கை வைத்துத்தான் முன்னேற முடியும்.

குருவினுடைய அனுக்கிரஹம் சிஷ்யனுக்குத் தேவை. இதன் பொருள், சிஷ்யன் சோம்பேறித்தனமாக உட்கார்ந்து கொண்டு, அவனை நேராக சமாதி நிலையில் தள்ளுவதற்காக குருவினிடமிருந்து அற்புத சக்தியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது அல்ல. குருவினிடமிருந்து ஒரு துளி கமண்டல ஜலத்திலிருந்து ஆத்மஞானம் அடைந்துவிடலாம் என்று எதிர்பார்ப்பது முட்டாள்தனம். குரு மாணவனுக்கு வழிகாட்டுவார்; அவனுடைய சந்தேகங்களை நிவர்த்திப்பார்; வழிவகுத்துக் கொடுப்பார்; ஆபத்துக்கள், படுகுழிகள், இடையூறுகள் இவற்றை நீக்குவார்; வழியிலே ஒளியைக்காட்டுவார். ஆனால் ஆத்மீகப்பாதையிலே ஒவ்வொரு அடியாக எடுத்துவைத்து நடக்கவேண்டியது சிஷ்யனே தவிர வேறுயாருமல்ல.

ஆத்மீக முன்னேற்றத்திற்கு குரு, சாஸ்திரம் இவைகளின் உபதேசங்களில் தீவிரமான, அசையாத நம்பிக்கையும், கொழுந்துவிட்டு எரிகின்ற நிரந்தரமான வைராக்கியமும், விடுதலைவேட்கையும், தீவிரமான விடாப்பிடியான இச்சாசக்தியும், உக்கிரமான தீர்மானமும், தளரா உறுதியும், கலங்காத பொறுமையும், அட்டை போன்ற விடாப்பிடியும், கடிகாரத்தைப் போன்ற ஒழுங்கும், குழந்தை போன்ற எளிமையும் தேவை.

உனக்கு ஒரு குரு இல்லையெனில் கிருஷ்ண பரமாத்மாவையோ, சிவபெருமானையோ, ஸ்ரீராமச் சந்திரனையோ, அல்லது இயேசு கிறிஸ்துவையோ உனது குருவாக எடுத்துக்கொள். அவனைப் பிரார்த்தி. அவனை தியானி. அவன் பெயர் பாடு. அவன் உனக்குத் தகுதியான ஒரு குருவை அனுப்பிவைப்பான்.

## யாத்திரையின் முடிவு

நான் 1924 ஜூன் மாதம் ரிஷிகேசத்தை அடைந்து அது நான் தேடிய இடமாக இருப்பதைக் கண்டேன். எனது குரு எனக்கு உபதேசத்தையும் போதுமான அளவு ஆத்மீக பலத்தையும், ஆசீர்வாதத்தையும் கொடுத்தார். குருமார்கள் இவ்வளவுதான் செய்யமுடியும். தீவிரமான, கடுமையான சாதனை செய்யவேண்டியவன் மாணவனே. ரிஷிகேசம், இமயமலையில், உத்தரப் பிரதேசத்தில் டேராடூன் ஜில்லாவிலுள்ளதொரு ரயில் நிலையம். அது பல மகாத்மாக்கள் நிறைந்த புனிதக்ஷேத்திரம். அங்கே எல்லா சாதுக்களுக்கும், யோகிகளுக்கும், சாதகர்களுக்கும் இலவசமாக உணவளிக்க அன்ன சத்திரங்கள் இருக்கின்றன. அவர்கள் எங்கு வேண்டுமானாலும் சொந்தமாக பர்ணசாலைகளோ குடிசைகளோ அமைத்துக் கொண்டோ, அல்லது ஏதாவதொரு தர்ம சாலையிலோ அல்லது குடியாக்களிலோ, தங்கியிருக்கலாம். ரிஷிகேசத்திற்கு அருகாமையில் பிரமபுரி ஆரண்யம், நீலகாந்தா, வசிஷ்ட குகை, தபோவனம் போன்ற நேர்த்தியான இடங்கள் இருக்கின்றன. அம்மாதிரியான இடங்களில் தங்குகின்ற சாதுக்கள் பதினைந்து நாட்களுக்கொரு

முறை சமைக்காத பங்கீட்டு உணவைப் பெற்று தங்கள் உணவை தாங்களே சமைத்துக் கொள்ளலாம்.

இமயமலைகளினுடைய காட்சியானது மனோ ரம்மியமாகவும் உள்ளத்தை உயர்த்தக்கூடிய தாகவும் இருக்கிறது. புனித கங்கை ஒரு வரப் பிரசாதமாகும். ஒருவன் ஒரு பாறையின் மீது உட்கார்ந்து கொண்டோ, கங்கைக்குப் பக்கத்தில் மணற்பாங்கான கரையில் உட்கார்ந்து கொண்டோ தியானத்தில் பலமணிநேரம் கழிக்கலாம். ஆதார பூர்வமான, சம்ஸ்கிருத, ஆங்கில, ஹிந்தி மொழி களில் யோகத்தைப் பற்றியும், தத்துவத்தைப் பற்றியும் நூல்களை அங்குள்ள சில நூல்நிலையங் களிலிருந்து பெற்றுக்கொள்ளலாம். சில கற்றறிந்த மகாத்மாக்கள் ஒழுங்காக தினசரி வகுப்புக்கள் நடத்துவதோடு தகுதி பெற்ற மாணவர்களுக்குத் தனியாகவும் படிப்பு சொல்லிக் கொடுக்கிறார்கள். அந்த இடத்தில் தட்பவெப்ப நிலை அருமையானது- குளிர் காலத்தில் (நவம்பர் முதல் மார்ச் முடிய) லேசான குளிரும், வேனிற் காலத்தில் (ஏப்ரல் முதல் ஜூன் முடிய) லேசான வெப்பமும் உடையது. நோயுற்றோரைக் கவனிக்க அங்கு மேல்நாட்டு வைத்திய சாலைகளும், ஆயுர்வேத வைத்திய சாலை களும் இருக்கின்றன. இவ்வாறாக நான் ரிஷிகேசம் கடுமையான, இடையூறற்ற ஆத்மீக சாதனைக் கேற்றதும், உண்மையை நாடிச் செல்லுவோருக்கு உண்மையானதொரு இடமாகவும் இருக்கக் கண்டேன்.

---

## அத்தியாயம் மூன்று

# பட்டரைக் கல்லின் மேல்—தெய்வீக பொக்கிஷத்தைப் பகிர்ந்து கொள்ளல்

## ஆத்மீக அவாவின் தடுமாற்றங்கள்

சில மகாத்மாக்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் வேதங்களை ஆழ்ந்து படிப்பதிலேயே செலவழிக்கிறார்கள். அவர்கள் யோகம், வேதாந்தம் இவைகளிலுள்ள சிக்கலான விஷயங்களை எடுத்துக்கொண்டு காரசாரமாக தர்க்க விவாதங்கள் செய்வதிலே ஆனந்தமடைகின்றனர். சில யோகிகள் சித்திகளைப் பெறுகின்ற நம்பிக்கையிலே ஹடயோகப் பயிற்சிகளோடு சண்டையிடுகின்றனர். இவ்வுடலை வதைக்கக் கூடிய பழக்கங்களில் ஈடுபடுகின்றனர். அதிசயங்களை செய்துகாட்டும் பொருட்டு ஆத்மீக சக்திகளைப் பெறுவதற்காக குண்டலினி யோகத்தாலும், தந்திர சாஸ்திரத்தாலும் தூண்டப்படுகின்ற ஒரு சிலரும் இருக்கிறார்கள். பக்தர்கள் தங்கள் நேரம் முழுவதையும் ஜபத்திலும் கீர்த்தனைகளிலும் செலவிட்டு இறைவனிடமிருந்து பிரிந்து இருக்கின்ற காரணத்தால் மணிக்கணக்காக கண்ணீர் வடிக்கிறார்கள். இந்த ரகத்தில் நீங்கள் ஒருசில படித்த இளைஞர்கள் தங்கள் நேரம் முழுவதையும் மயிர் சிலிர்க்கும்படியான விஷயங்களைப் பற்றி எழுதிக்கொண்டும், பிரசங்கங்கள் செய்துகொண்டும் இருப்பதைக் காணலாம். அவர்கள் ஒரு உலகப் பயணத்திற்கு திட்டம் போட்டு தயார் செய்கிறார்கள். எனக்கு அப்படிப்பட்ட எல்லா மகாத்மாக்களிடமும் அவர்கள் பலவழிகளில் செய்யும் பூரணமான ஆராய்ச்சிக்காக மிகுந்த அன்பும்

மரியாதையும் உண்டு. அ வ ர் க ள் எல்லோரும் பூ ர் ண த் து வ த் தை அடைவதில் வெ ற் றி பெறுகிருர்களா?

அவர்களுக்குச் சரியான வசதிகளும், சாதனங் களும், சௌகரியங்களும் இல்லாதிருப்பதை நான் கண்டேன். வழிகாட்ட தகுதிவாய்ந்த ஒருவர் கிடைப்பதில்லே. அவர்கள் அ வ ர் க ளு டை ய சாதனையில் ஸ்திரமாகவும் ஒழுங்காகவும் இருக்க முடிவதில்லே. அவர்களிடமுள்ள திட்டம் போடும் குணமானது அவர்களுடைய தினசரி பழக்கங்களில் அடிக்கடி மாற்றத்தில் கொண்டு விடுகிறது. ஒன்று அவர்கள் தே வை க ளு க் கா க அளவுக்கு மிஞ்சி கருத்துச் செலுத்துகிருர்கள் அ ல் ல து அவர்கள் ஆரோக்கியத்தைப் பற்றியே அ ல க்ஷி ய ம் செய்து விடுகிருர்கள். அவர்கள் எ ல் லோ ரு ம் எதிர் காலத்தைப் பற்றியே சிந்திக்கிருர்கள். சித்திகளுக் காகவும், அற்புத செயல்களுக்காகவும், பெயருக் காகவும், பு க ழு க் கா க வு ம் பாடுபடுகிருர்கள். அதுவே அவர்கள் ஆ ண வ த் தை வளர்க்கிறது. மகாத்மாக்களுடைய முறைகளே ஆழ்ந்து கவனித் ததன் மூலம் எனது கண்கள் தி ற ந் த ன. அது எனக்கு சரியான வழியிலே கடுமையான சாதனையை இ று க ப் பி டி த் து க் கொ ள் ள பலத்தையும் கொடுத்தது. இறைவனுடைய அருளே உணர்ந் தேன். நான் உள்ளிருந்து பலத்தையும் வழியையும் பேற்றேன். நாளுவித மு ன் னே ற் ற த் தி ற் கு ம் வழிகளேக் கண்டேன். ஆத்மானுபூதியை எனது வாழ்க்கையின் லக்ஷியமாகக் கொண்டேன். எனது சக்தியின், நேரத்தின் ஒவ்வொரு சிறு பாகத்தையும் படிப்பதிலும், சேவை செய்வதிலும், சாதனையிலும் செலவழிப்பதென்று உறுதி பூண்டேன்.

# எப்படி நான் என்னுடைய சாதனையைக் கலந்தேன்

நோயுற்றோருக்கும், ஏழைகளுக்கும், மகாத்மாக்களுக்கும் சேவை செய்தல் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகிறது. பொறுமை, இரக்கம், தயை, பெருந்தன்மை போன்ற தெய்வீக குணங்களை வளர்த்துக் கொள்ள இது ஒரு சாதன மாகும். ஆணவம், சுயநலம், கர்வம், வெறுப்பு, கோபம், ஆசை, பொறாமை போன்ற மனத்தின் மாசுக்களையும் கெட்ட குணங்களையும் களைந்தெறிய உதவுகின்றது. நோயுற்ற மகாத்மாக்களுக்கும் ஏழை கிராமவாசிகளுக்கும் போதிய மருத்துவ உதவி இல்லாமலிருந்தது. பத்ரிநாத், கேதார்நாத் செல்லும் ஆயிரக்கணக்கான யாத்திரீகர்களுக்கும் மருத்துவ உதவி தேவைப்பட்டது. ஆகவே நான் பத்ரி— கேதார் போகும் வழியில் லக்ஷ்மண ஜூலாவில் ''சத்ய சேவாஸ்ரமம்'' என்ற ஒரு சிறு மருத்துவ விடுதியை ஆரம்பித்து பக்தர்களுக்கு மிகுந்த அன்போடும், ஆதரவோடும் சேவை செய்தேன். கடுமையான நோயுற்ரோருக்கு தனிப் பட்ட உணவுக்கு ஏற்பாடு செய்து அவர்களுக்கு பாலும் இதர தேவையான பொருட்களும் அளித்தேன். சரியான பாவத்துடனும் மனப் பாங்குடனும் செய்யும் சேவை மூலமாக சீக்கிரம் ஆத்மீக முன்னேற்றம் அடைய முடிகிறது.

மிகவும் சிறந்த ஆரோக்கியத்தைக் காப்பாற்ற நான் ஆசனங்கள், பிராணாயாமம், முத்திரைகள், பந்தங்கள் ஆகியவற்றைச் செய்து வந்தேன். மாலை நேரங்களில் நான் வெளியே சுறுசுறுப்பான நீண்ட தூர நடைப்பயணம் செய்வதுண்டு. நான் தண்டால், பஸ்கி போன்ற தேகாப்பியாசங்களையும் சேர்த்துக்கொண்டேன். நான் எளிய வாழ்க்கை,

உயர்ந்த எண்ணம், எளிய உணவு, ஆழ்ந்த படிப்பு மௌன தியானம், ஒழுங்கான பிரார்த்தனை இவைகளில் மிக்க கவனம் செலுத்தினேன். நான் தனிமையை விரும்பினேன். மௌனத்தை அனுஷ்டித்தேன். நான் பலருடன் சேர்ந்திருப்பதையும் வீண் பேச்சையும் விரும்பவில்லை. முனி – கி – ரேதி யிலுள்ள ராம் ஆஸ்ரம நூல் நிலையத்திலிருந்து சில புத்தகங்களை வாங்கி தினசரி கொஞ்ச நேரம் படிப்பதற்கென்று செலவழிப்பது வழக்கம். நான் எப்பொழுதும் எனக்குப் பக்கத்தில் ஒரு அகராதியை வைத்துக்கொண்டு கடின பதங்களுக்குப் பொருள் பார்த்துக் கொள்வேன். அமைதியும் ஓய்வும் எனக்குத் தீவிர சாதனை செய்யப் போதிய சக்தியைக் கொடுத்தன. நான் சில மகாத்மாக்களிடம் மிகவும் நெருங்கிப் பழகினேன், ஆனால் அவர்களோடு ஒருபோதும் தர்க்க விவாதங்களில் ஈடுபடவே இல்லை. ஆத்ம பாகுபாடும் ஆத்ம சோதனையும் என்னுடைய வழிகாட்டிகளாக இருந்தன.

பிரார்த்தனைக்காகவும், தியானத்திற்காகவும் அதிக நேரத்தை செலவழிக்கக் கருதி நான் ஸ்வர்க்காஸ்ரமத்திற்குச் சென்றேன். நான் 8 அடிக்கு 10 அடி உள்ள முன்புறம் ஒரு சிறு தாழ்வாரத்துடன் கூடிய ஒரு சிறு குடீரில் வசித்து வந்தேன். என்னுடைய ஆகாரத்திற்காக காலி கம்பளிவாலா க்ஷேத்திரத்தை நம்பியிருந்தேன். இப்பொழுது அந்த அறை அதன் பக்கத்தில் மேற்கொண்டும் சில அறைகளுடன் 111 என்று எண்ணிடப்பட்டிருக்கிறது. அவ்விடத்திய பிணியாளர்களுக்கு சேவை செய்வதையும் என்னுடைய சாதனையையும் தொடர்ந்து செய்து வந்தேன். நான் குடீர் குடீராகச் சென்று நோயுற்ற மகாத்மாக்களை கவனித்து அவர்களுடைய உடல்

நலத்தைப்பற்றி விசாரித்து அவர்களுக்குத் தேவையானவற்றைக் கொடுத்து வருவது வழக்கம். நான் எனது நேரத்தின் பெரும் பகுதியை தியானத்தில் செலவழித்ததோடு என்னுடைய சாதனையில் பலவிதமான யோகங்களைப் பயின்று வந்தேன். என்னுடைய அனுபவங்களெல்லாம் நான் வெளியிட்டுள்ள நூல்களில் பலவற்றில் சாதகர்களுக்குப் புத்திமதிகளாக வெளிவந்திருக்கின்றன. சீக்கிரமாக நான் என்னுடைய எண்ணங்களையும் அனுபவங்களையும் உலகத்திற்கும், உண்மையைக் காணும் பொருட்டு மன்றுடிக்கொண்டிருப்போர்க்கும் பயன்படும் வண்ணம் வெளியிலே அனுப்பினேன். பெரும் மகாத்மாக்கள் கூட அவர்களுடைய அபூர்வமான ஞான களஞ்சியத்தை ரகசியமாக வைத்துக்கொண்டு பொறுக்கியெடுத்த ஒரு சிலருக்கு மட்டும் சொல்லிக்கொடுப்பது வழக்கமாக இருந்தது.

## ஸ்வர்க்காஸ்ரமத்தில் வாழ்க்கை

நான் பல் துலக்குவதிலும், துணி துவைப்பதிலும், குளிப்பதிலும் அதிக நேரம் செலவழித்ததில்லை. இவைகளை நான் சாதனை, படிப்பு, சேவை ஆகியவற்றிலிருந்து சிறிது ஓய்வு கிடைக்கும்பொழுது சீக்கிரமாக முடித்துக்கொள்வேன். எனக்காக சேவை செய்ய சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிய வண்ணம் சில சிஷ்யர்கள் இருந்தபோதிலும் நான் ஒரு போதும் யாரையும் எதிர்பார்ப்பதில்லை. படிப்பு, குறிப்பெழுதுதல், சாதகர்களுக்குக் கடிதமெழுதுதல், தேகப்பயிற்சிகள், பிக்ஷைக்கு வெளியே செல்லுதல் போன்ற எல்லா வேலைகளுக்கும் நான் நேரத்தைக் குறிப்பிட்டு வைத்திருந்தேன். நாளடைவில் ஜனங்கள் ஏராளமாக என்னிடம் வந்தனர். அது எனது

முறையான வேலையைப் பெரிதும் பாதித்தது. க்ஷேத்திரத்திலுள்ளோருடைய அனுமதி பெற்று என்னுடைய குடீரைச் சுற்றி முட்கம்பி வேலி அமைத்துக் கொண்டு வாயிற்கதவை பூட்டி விட்டேன்.

பார்க்க வந்தவர்கள் முன்னிலையில் நான் உயர்ந்த தத்துவங்களைப்பற்றி நீண்ட விவாதங்கள் செய்து எனது புலமையைக் காட்டிக்கொள்ளவில்லை. நான் நடைமுறையில் செய்யக்கூடிய சாதனையைப் பற்றிய சில சிறு குறிப்புகள் கொடுத்து ஒவ்வொருவரையும் ஐந்து நிமிடத்தில் அனுப்பிவிட்டேன். காம்பவுண்டு வாயிலில் பேட்டி – மாலை 4 மணி முதல் 5 மணி வரை ஒரு சமயத்தில் ஐந்து நிமிடங்கள் மட்டும்'' என்று போர்டு எழுதிக்கட்டிவிட்டேன். குளிர் காலத்தில் பக்தர்கள் அதிகம் இல்லை. இக் காலத்தை நான் காம்பவுண்டைச் சுற்றி வேகமாக நடப்பதற்கும் பஜனை செய்வதற்கும், பாட்டுக்கள் பாடுவதற்கும் உபயோகித்தேன். சில நாட்கள் நான் எனது குடீரை விட்டு வெளியே வரமாட்டேன். என்னுடைய ஆகாரத்திற்காகக் கொஞ்சம் காய்ந்த ரொட்டியையும், தினசரி பிக்ஷையில் மிகுதியான வற்றையும் வைத்துக்கொள்வது வழக்கம். இவ்வாறாக கடுமையான சாதனையே எனது லக்ஷியமாக இருந்தது.

நான் கங்கையின் மணற்கரைகளில் மாலை நேரத்தில் மணிக்கணக்காக நேரத்தை கழிக்கும் போது, அல்லது ஒரு அழகான பாறையின் மீது உட்கார்ந்து கொண்டு அதிசயமான ''இயற்கை'' யை உற்றுப் பார்க்கும் போது எனக்கேற்பட்ட ஆனந்தம் வர்ணனைக்கப்பாற்பட்டது. நான்

இயற்கையோடு ஒன்றிவிட்டேன். இந்தச் சமயத்தில், மகாத்மாக்களுடைய துன்பங்களைத் துடைக்கும் பொருட்டு ஸ்வர்க்காஸ்ரம சாது சங்கத்தை நிறுவி அந்த ஸ்தாபனத்தைப் பதிவு செய்தேன். நான் பெரும் மகாத்மாக்களை அழைத்து வாராந்திரப் பிரசங்கங்களுக்கும், சில காலம் தினசரி பஜனை, ராமாயண கதை இவற்றிற்கும் ஏற்பாடு செய்தேன். சில மாதங்கள் எங்களுக்கு யோகவாசிஷ்டத்தைப்பற்றியும், துளசிதாஸ் ராமாயணத்தைப்பற்றியும், உபநிடதங்களைப் பற்றியும் கூட பிரசங்கங்கள் நடந்தன. நான் எனது மாணவர்களுக்கு ஸ்வர்க்காஸ்ரம சாது சங்கத்தின் மூலமாக கூட்டு வேலையில் பயிற்சி அளித்தேன்.

## தெய்வீக சேவையில் வெளியே

1925ல் பிஜ்னூர் ஜில்லாவில் தாம்ப்பூர் என்ற ஊரிலுள்ள ஷெர்காட் எஸ்டேட்டிற்கு விஜயம் செய்தேன். ஷெர்காட் ராணி, ஸ்ரீமதி பூல்குமாரி தேவி எனக்கு ஒரு அமோகமான வரவேற்பளித்தார். அங்கு நான் பல நாட்கள் பஜனை செய்தேன். கிராம வாசிகளுக்கு மருத்துவ உதவி அளித்தேன். மாண்டி மகாராணி, ஸ்ரீ லலிதா குமாரி தேவியும் பஜனைக்கு வந்திருந்தார். பல வருஷங்களுக்குப் பிறகுகூட மகாராணி என்னை சந்திக்கும் பொழுதெல்லாம் உங்களுடைய இனிய, உள்ளமுருக்கும் கீதத்தை என்னுல் மறக்க முடியாது. என்னுடைய ஞாபகத்தில் அவைகள் என்றும் மாருப் பசுமையாக இருக்கின்றன. அவற்றின் சக்தியை இப்பொழுது நான் உணர முடிகிறது. அவைகள் என்னை தாலாட்டின; எனது ஆத்மாவை உயர்த்திவிட்டன,'' என்று சொல்வது வழக்கம்.

ஷெர்க்காட்டிலிருந்து நடந்து வழியிலுள்ள கிராமங்களுக்கு விஜயம் செய்து கொண்டு ரிஷிகேசம் திரும்பி வந்தேன். நான் சந்தித்த பக்த கோஷ்டிகளுக்கு யோகத்தைப்பற்றிப் பிரசங்கங்களும் கீர்த்தனைகளும் பஜனைகளும் செய்தேன். அவ்வப்போதைய யாத்திரைகள் எனக்கு தெய்வீக குணங்களைத்தையும் விருத்தி செய்து கொள்வதற்கும் பரந்த அளவிலே மனித வர்க்கத்திற்குச் சேவை செய்யவும் உதவியாக இருந்தன. ஒரு சமயம் என்னுடைய பரிவ்ராஜ வாழ்க்கையின்போது (அலைந்து திரியும் சந்நியாசி வாழ்க்கை) ராமேஸ்வரம் சென்றிருந்தேன். தென் இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களைக் கண்டேன். இந்தச் சமயத்தில் சில காலம் நான் ஸ்ரீ ரமண ஆஸ்ரமத்திலே தங்கியிருந்தேன். சீதாப்பூர் வக்கீல் ஸ்ரீ சந்த் நாராயண் ஹார்கூலி என்னுடன் வந்திருந்தார். எனது வழியில் நான் பூரிக்குச் சென்று ஜகந்நாதரைத் தரிசித்தேன். வால்டேரில் கடலில் ஸ்நானம் செய்தேன். ராமேஸ்வரத்தில் பகவான் இராமலிங்கரை தரிசித்தேன். ஸ்ரீரமணருடைய பிறந்ததின விழாவின்போது ஆஸ்ரமத்தை அடைந்தேன். நான் அந்த பெரிய ஹாலில் ஸ்ரீ பகவான் ரமணருக்கு முன்னிலையிலும், பக்தர்களுக்கு முன்பும் பஜனையும் கீர்த்தனமும் செய்தேன். அருணசல பர்வதத்தை வலம் வந்தேன். தேஜஸ் லிங்கத்தைப் பூஜித்தேன்.

பெருமளவில் ஜனங்களுக்குச் சேவை செய்ய ஒரு சந்தர்ப்பத்தைக் கண்டால் அல்லது ஜனங்கள் ஆத்மீக மாநாடுகளுக்குத் தலைமை தாங்கும்படி வற்புறுத்தும் பொழுது, நான் பீஹார், பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள் ஆகிய பிராந்தியங்களில் பல இடங்களுக்குச் சென்றேன். சாதனை செய்வதற்கு பலம் பொருந்திய கேந்திரங்களை ஆரம்பித்தேன்.

ஆத்மீக மாநாடுகளையும், கீர்த்தன சம்மேளனங்களையும் ஏற்பாடு செய்து பல கல்வி, மத, ஆத்மீக ஸ்தாபனங்களின் நடவடிக்கைகளில் கலந்து கொண்டேன். ரயிலில் யாத்திரை செய்து கொண்டிருக்கும்போதுகூட யாத்திரீகர்களுக்கு யோகப்பயிற்சிகளை சொல்லிக் கொடுத்ததோடு, ஜபம், தியானம் இவைகளைப் பற்றிய எளிய பாடங்களையும் அவர்களுக்குக் கற்பித்தேன். நான், எப்பொழுதும் என்னுடன் ஒரு மருந்துப்பெட்டியை கூட எடுத்துச்சென்றேன். நோயுற்றோருக்கு மருத்துவ உதவி செய்தேன்.

நான் சென்ற முக்கியமான ஊர்களாவன:— லாகூர், மீரட், ஸ்ரீ நகர் (காஷ்மீர்), பாட்னு, மாங்கிர், லக்னௌ, கயா, கல்கத்தா, அயோத்யா, லக்கிம்பூர்-கேரி, பாகல்பூர், அம்பாலா, அலிகார், சீதாபூர், புலந்ஷாஹர், டில்லி, ஷிகோஹாபாத், நிம்ஸார், மதுரா, பிருந்தாவன், எட்டவா, மணிபுரி, தவிர வட இந்தியாவில் இன்னும் பல இடங்கள். ஆந்திர மாகாணத்திலே தோட்டப் பள்ளிக் குன்றிலுள்ள சாந்தி ஆஸ்ரமத்திற்கும், வால்டேரிலுள்ள சமாதான சங்கத்திற்கும், ராஜமகேந்திரபுரம், காகினடா, பித்தாபுரம், லக்ஷ்மி நரசாபுரம் ஆகிய இடங்களுக்கும் சென்றேன்.

என்னுடைய பிரயாணங்களில் நான் மைக்கூடு, பேனுக்கள், பென்ஸில்கள், குண்டூசிகள், விவேக சூடாமணி, உபநிஷத்துக்கள், கீதை, பிரம்ம சூத்திரம் போன்ற படிப்பதற்கான புத்தகங்கள் ஆகியவை அடங்கிய மூட்டையை எடுத்துச் சென்றேன். சில அவசரமான கடிதப் போக்குவரத்து வேலைகளைக் கவனிப்பதற்காக சில தபால் தலைகளும் வைத்திருந்தேன். நான் ரயில் வரும் நேரத்திற்கு இரண்டு மணி முன்னதாகவே ரயில்

நிலையத்திற்குச் சென்றுவிடுவது வழக்கம். அங்குமிங்கும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக ஒரு மரத்தினடியில் உட்கார்ந்து எனது எழுத்து வேலைகளை கவனிப்பேன். என்னுடைய யாத்திரையிலே முக்கியமான கேந்திரங்களில் நல்ல சாப்பாட்டைப் பெறும் பொருட்டோ அல்லது பொருளாதார உதவியை நாடியோ, நான் என்னிடம் பக்தர்களுடைய அல்லது நண்பர்களுடைய விலாசப்புத்தகத்தை வைத்துக் கொண்டதே கிடையாது. நான் என்ன காரியத்திற்காக யாத்திரை செய்து கொண்டிருந்தேனோ அவ்வேலையை துரிதமாக முடித்துக் கொண்டு கிடைக்கின்ற முதல் சந்தர்ப்பத்திலேயே ரிஷிகேசம் திரும்பினேன்.

நான் கேதார்நாத், பத்ரிநாத், துங்கநாத், திரியுகிநாத் ஆகிய இடங்களுக்குச் சென்றேன். ஸ்வாமி பாலானந்தா, ஸ்வாமி வித்யாசாகர் என்னைத் தொடர்ந்தனர். பத்ரிநாராயணத்தில் வெந்நீர் ஊற்றுக்களில் குளித்தேன். என்னுடைய யாத்திரை முழுவதும் கீர்த்தனைகளையும் பஜனையையும் செய்ததோடு மட்டுமின்றி மானசீக ஜபமும் செய்தேன்.

நீராவிப் படகு மூலம் கல்கத்தாவில் கங்கை நதி வங்காள விரிகுடாவில் சங்கமமாகின்ற இடமாகிய கங்கா சாகரத்தை அடைந்தேன். ஸ்ரீமதி மகாராணி சூரத் குமாரி தேவியும் என்னுடன் இருந்தார். அந்த புனிதமான கங்கா சாகரத்தில் கபில முனியினுடைய சிறியதொரு கோவிலுள்ளது. கடலில் நான் குளித்தேன். அப்போது ஒரு மேளா (சந்தை) நடந்தது. நான் யாத்ரீகர்கள் ஏணியில் ஏறுவதற்கு உதவி செய்தேன்.

## கைலாச பர்வதத்தின் அழைப்பு

ரிஷிகேசத்தில் என்னுடைய சாதனையின் ஆரம்ப வருஷங்களில் கைலாசத்தைப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்தேன். கைலாச பர்வதம் மேற்கு திபெத்தில் இருக்கிறது. 1931ம் ஆண்டு ஜூன் மாதம் 12ந் தேதி அந்தப் புனித ஸ்தலத்திற்கு ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி அத்வைதானந்தஜி, ஸ்ரீ ஸ்வாமி ஸ்வயம் ஜோதி மகராஜ், ஸ்ரீ பிரம்மச்சாரி யோகானந்தா, மேன்மைதங்கிய மகாராணி சாகிபா சூரத் குமாரி தேவி, O. B. E., சிங்காஹி ஸ்டேட், அவருடைய காரியதரிசி ஸ்ரீ கேதார்நாத் ஆகியவர்களுடன் ஒரு யாத்திரை புறப்பட்டேன். நாங்கள் எல்லோரும் மானஸரோவர் ஏரியில் குளித்து கைலாச பர்வதத்தைச் சுற்றிவந்தோம். முழுதூரத்தையும் நான் நடந்தே கடந்தேன். மாறுத பனிக்கட்டிகளின் கண்கவர் வனப்பை ஒப்பிட கைலாச பர்வதத்திற்கு இணையாக இவ்வழகிய பூலோகத்தில் ஒரு இடமும் இல்லை. எல்லா யாத்திரைகளிலும் கைலாச யாத்திரையே மிகக்கடினமானதாகும். அது மேருமலை—மலைகளுக்கெல்லாம் அச்சு—என்றழைக்கப்படுகிறது. நான் அங்கு சென்றிருந்த சமயம் மேன்மைதங்கிய மைசூர் மகாராஜாவும் கைலாசத்திற்கு விஜயம் செய்திருந்தார். இந்தியாவில் இந்தப் புனித பர்வதத்திற்கு விஜயம் செய்த மகாராஜா இவர் ஒருவரே. அல்மோராவிலிருந்து கைலாசத்திற்கு மொத்த தூரம் 230 மைல். இரண்டு மாதங்களில் ஒருவன் சுலபமாக அந்த இடத்திற்குப் போய் விட்டுத்திரும்பிவிடலாம். ஆகஸ்ட் 22ந் தேதி எங்கள் கோஷ்டி அல்மோரா திரும்பியது.

## ஆத்மீக அறிவைப் பெருமளவில் பரப்புதல்

1950 செப்டம்பர் 9ந் தேதி இரண்டு மாத காலம் விஸ்தாரமானதொரு அகில இந்திய—சிலோன் யாத்திரையை மேற்கொண்டு சக்தி பொருந்தியதொரு அறிவைப் பரப்பும் வேலையை ஆரம்பித்தேன். 1950 நவம்பர் 7ந் தேதி ரிஷிகேசம் திரும்பினேன். நான் அப்பொழுது நாடு முழுவதும் ஆயிரக்கணக்கான உண்மையான ஆத்மீக—அபிலாஷிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டேன். இந்த அனைத்திந்திய—இலங்கை யாத்திரையை மேற்கொண்டு இறைவன் அவனுக்கும் அவனுடைய குழந்தைகளுக்கும் சேவை செய்ய எனக்கொரு சந்தர்ப்பம் கொடுத்தான் என்று உளம் பூரித்தேன். புனிதமான சந்நியாசத்திற்கு இந்திய-சிலோன் மக்கள் வைத்திருக்கும் பெருமதிப்பையும் யோகத்தைப்பற்றியும், வேதாந்தத்தைப் பற்றியும் அறிந்துகொள்ள அவர்களுக்கிருக்கும் ஆர்வத்தையும், ஆழ்ந்த பக்தி சிரத்தையையும் பூரிப்புடன் நான் ஞாபகப்படுத்திப் பார்க்கிறேன்.

இந்தியா முழுவதிலுமுள்ள எல்லா முக்கியப் பட்டணங்கள், நகரங்கள், கிராமங்கள் ஆகியவற்றிற்கு விஜயம் செய்தேன். நான் பொதுக் கூட்டங்களில் பேசியதோடு கீர்த்தனமும் நடத்தினேன். நான் பல பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும், நீதி போதனைகளைப் பற்றியும் "உண்மையான கல்வி" யைப் பற்றியும் சொற்பொழிவாற்றினேன். பொதுவான ஆத்மீக விஷயங்களைப்பற்றி ஏராளமான பொதுக் கூட்டங்களில் பேசினேன். சரித்திர முக்கியத்வம் வாய்ந்த இந்த சம்பவத்தின்போது—அனைத்திந்திய

சிலோன் யாத்திரையின்போது—பல்லாயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள புத்தகங்கள் பொது ஜனங்களுக்கு இலவசமாக விநியோகிக்கப்பட்டது.

சாதாரணமாக என்னுடைய வழக்கத்தில் அதுபோன்ற சந்தர்ப்பங்களில் யோகம், பக்தி, வேதாந்தம் இவைகளைப் பற்றி அழகான நீண்ட சொற்பொழிவுகளுக்காக தயார் செய்வதில் சிறிது நேரம் கூட செலவழித்தது கிடையாது. நான் என்னுடைய கீர்த்தனைகள் பாட்டுக்கள் இவைகளுடனேயே சாதனையைப்பற்றிய நடைமுறைப் பாடங்களையும் சொல்லி வந்தேன். அது கேட்பவர்களிடம் ஒரு அதிசயிக்கத்தக்க பலனை உண்டு பண்ணியது. பக்தர்களுடைய கூட்டத்தில் உள்ளம் ஆனந்தத்தால் நிறைந்திருக்கும்பொழுது நிருத்யத்தையும் நான் கலந்தேன்- சிவ பெருமான், கிருஷ்ண பரமாத்மா இவர்களின் நடனங்கள்- ஜனங்கள் தூண்டப்பட்டனர். இன்று கூட ஆயிரக்கணக்கானவர்கள் எனக்குப் பிடித்த கீர்த்தனமான ''அகடபம்'' ''சிதானந்த-ஹம்'', ''பிலாடே'' முதலியவற்றைத் திரும்பத்திரும்பச் சொல்கின்றனர். பல கேந்திரங்களில் பக்தர்களும் எழுந்து நின்று நெடு நேரம் வரையிலும் தெய்வீகப் பரவசத்தில் ஆடினர்.

நான் சென்றவிட மெல்லாம் ஜனங்களுடைய அன்பு மிகுதியால் மூழ்கடிக்கப்பட்டேன். ஒவ்வொரு கேந்திரத்திலும் ஜனங்களுடைய பரிவையும், பக்தியையும் கண்டு ஆனந்தித்தேன். ஜனங்களுடைய பக்தி சாகரத்திலே நான் திரும்பத் திரும்பக் குளித்தேன். இறைவனுடைய நாமமாகிய அழியாத அமிர்தத்தை ஜனங்கள் எல்லோரும் பாவத்தோடும் உற்சாகத்தோடும் பாட அதைத் திரும்பத் திரும்பப் பருகினேன்.

சேவை எனக்கு ஆனந்தத்தை கொடுக்கிறது. ஒரு விஞடிகூட சேவை செய்யாமல் என்னுல் ஜீவித்திருக்க முடியாது. அகில இந்திய யாத்திரையில் நான் ஒரு சக்தி பொருந்திய களத்தைக் கண்டேன். நான் இரண்டு மாதகாலம் ஓய்வு ஒழிவேயின்றி வேலை செய்தேன். யாத்திரை வண்டி, ஆகாய விமானம், ரயில், மோட்டார்கள், நீராவிக் கப்பல்கள் இவைகளில் பிரயாணம் செய்யக் குறிப்பிட்ட கால அட்டவணைகள் ஆகியவைகள் என்னுடைய தீவிரமான வேலைக்குத் தடை விதித்தன. நான் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள ''நேரத்தை'' அனுசரிக்க வேண்டியிருந்தது. பக்தர்களுடைய தேவைகளை கவனிக்க போதிய அவகாசம் கிடைக்கவில்லை.

என்னுடைய திருப்ப யாத்திரையிலே நான் பம்பாயிலிருக்கும் போது டில்லியிலிருந்து யாத்திரை வண்டியை விலக்கி விட்டு மாகாணத்திற்கு மாகாணம், பிறகு யாத்திரையைத் தொடரலாம் என்று விரும்பினேன். ஒவ்வொரு நகரத்திலும், பட்டணத்திலும், கிராமத்திலும் வீடுவீடாகச் சென்று கீர்த்தனைகளும் பஜனைகளும் பாடி பக்தர்களுடைய ஆரோக்கியத்திற்காகவும் நீண்ட ஆயுளுக்காகவும், மகா மிருத்யுஞ்சய மந்திரத்தைத் திரும்பத்திரும்பச் சொல்ல வேண்டுமென்றும் விரும்பினேன். நான் ஒவ்வொரு பக்தனிடத்திலும் தனித்தனியாக தெய்வ நெறியின் செய்தியைக் கொண்டு செல்ல விரும்பினேன்.

## ஆத்மீக மாநாடுகள்

நான் ஸ்வர்க்காஸ்ரமத்திலே இருக்கும் போது தனிமையாக இருந்து ஆழ்ந்து தியானம் செய்ய

வேண்டுமென்கின்ற ஒரு தனிப்பட்ட நாட்டம் எனக்கு இருந்த போதிலும், மாலை நேரங்களில் ஒழுங்காக வழக்கமாக சத்சங்கங்களுக்கு ஏற்பாடு செய்தேன். நான் மகாத்மாக்களையும் பிரம்மச் சாரிகளையும் வரவழைத்தேன். ஒரு பஞ்சாபி மகாத்மா, யோக வாசிஷ்டத்தைப் பற்றியும் துளசிதாஸ் ராமாயணத்தைப் பற்றியும் வகுப்புகள் நடத்துவது வழக்கம். வகுப்பு முடிவதற்கு முன் நான் பஜனையும் கீர்த்தனையும் செய்தேன். சில சமயம் நான் சீதாப்பூர், லக்கிம்பூர்-கேரி, மீரட் மற்றும் உ. பி. பஞ்சாப் இங்குள்ள மற்ற இடங் களுக்கும் விஜயம் செய்தேன். நான் இரவு நேரங் களில் கீர்த்தனைகள் செய்தேன். எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் யோகப்பயிற்சிகள் செய்து காட்டுவதோடு சொற்பொழிவுகளும் நிகழ்த்தினேன். ''இருபது முக்கிய ஆத்மீக போதனைகள்'', ''பிரம்மச்சரியத்தின் முக்கியத் துவம்'' ஆகிய துண்டுப் பிரசுரங்களையும் வழங் கினேன். நான் விடியற்காலை 4 மணிக்கு பொதுப் பிரார்த்தனையும், மௌனத்தியானத்தையும் புகுத்தி எல்லா பக்தர்களையும் இந்தக் கூட்டு சாதனையில் சேரும்படி கட்டாயப்படுத்தினேன்.

நான் ஜனங்களிடம் லிகித ஜபம் (மந்திரம் எழுதுதல்) செய்யும்படி கேட்டுக் கொண்டேன். பொதுக்கூட்டங்களில் பல பக்தர்கள் அசையாமல் உட்கார்ந்து கொண்டு மந்திரம் எழுதிக் கொண்டு அந்த நேரத்தில் மௌனம் அனுஷ்டிப்பதைப் பார்த்திருக்கிறேன். அதிகமான எண்ணிக்கை மந்திரங்களை சுத்தமாக எழுதுகிறவர்களுக்கு வெகுமதிகள் வழங்கினேன். ஜனங்களை உற்சாகப்படுத்தும்பொருட்டு போட் டியில் ஜயித்தவர்களுக்கு மட்டுமல்லாது மண்டபத் தில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் ஆத்மீக

புத்தகங்களைக் கொடுத்தேன். பக்தர்கள் நிறைய பழங்கள் கொண்டுவருவதுண்டு. அவற்றை அப்போதே அங்கேயே சபையோர்களிடம் வினியோகித்துவிடுவது வழக்கம். முடிவில் ஒரு சிறு துண்டை பிரசாதமாக நான் எடுத்துக் கொள்வது வழக்கம்.

## பிரசங்க யாத்திரைகள்

பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்பவர்கள் தவறாது ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்கான இடைவிடாத நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து விடுவது வழக்கம். அப்பொழுது இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு அகண்ட கீர்த்தனை இருப்பது வழக்கம். வெளியிடங்களில் எனக்கு வேலையி லிருந்து சிறிது நிவாரணம் பெறும் பொருட்டு எனது மாணவர்களான ஸ்ரீ ஸ்வாமி ஸ்வரூபானந்தா, ஸ்ரீ ஸ்வாமி ஆத்மானந்தா இவர் களை பயன்படுத்திக்கொள்வதுண்டு. முன்னவர் என்னுடைய ஆங்கில சொற்பொழிவுகளை விரைவாக, திறம்பட ஹிந்தியில் மொழிபெயர்த்து விடுவார். பின்னவர் இனிமையான பஜனையும் கீர்த்தனையும் செய்வார். அநேக துண்டுப் பிரசுரங்கள் இலவச விநியோகத்திற்காக அச்சடிக்கப்பட்டன.

1933ல் நான் இந்தப் பிரசார யாத்திரையை லக்கிம்பூர்—கேரி, மீரட், ஹார்டாய் ஆகிய இடங் களில் செய்தேன். பிரதி வருஷமும் ஓரிரண்டு வாரங்கள் பஞ்சாப், பீஹார் ஆகிய இடங்களில் சுற்றுப்பிரயாணம் செய்தேன். அந்த யாத்திரை களின் போது ஸ்வர்க்காஸ்ரமத்திலுள்ள எனது மாணுக்கர்களிடமும், ரிஷிகேசத்திலுள்ள போஸ்ட்

மாஸ்ட்டரிடமும் எனது கடிதங்களை அந்த இடங்களுக்குத் திருப்பியனுப்ப வேண்டாம் என்று கேட்டுக் கொண்டேன். என்னுடைய யாத்திரையின்போது இந்த கடிதப்போக்குவரத்து வேலைகளை கவனிக்க மாட்டேன். கவனம் முழுவதையும் அறிவைப்பரப்பும் சக்தி பொருந்திய வேலையிலேயே ஒருமுகப் படுத்தினேன்.

ரிஷிகேசத்தில் சாதாரண வரட்டு ரொட்டிகளிலேயே எளிமையானதொரு வாழ்க்கையை நடத்தி வந்த போதிலும் அப்பேர்ப்பட்ட கடுமையான வேலையின்போது இரவும், பகலும், சத்துள்ள ஆகாரமும் பழங்களும் தேவை என்பதை உணர்ந்தேன். என்னுடைய ஜேபியில் சில ரொட்டித் துண்டுகளையும், பிஸ்கோத்துகளையும் வைத்துக் கொள்வது வழக்கம். ஏனென்றால் பல்வேறு இடங்களிலுள்ள வேலையானது எனக்கு சாப்பாட்டிற்கும் ஓய்விற்கும் சிறிது கூட இடந்தரவில்லை. அம்மாதிரியான மாநாடுகளுக்குப் புறப்படுமுன்பு நான் திரும்பி வருவதற்குப் போதுமான பணத்தை என்னிடம் வைத்துக் கொள்வேன். என்னுடைய செலவுகளுக்காக விழாவிற்கு ஏற்பாடு செய்பவர்களிடம் பணம் கேட்பதே கிடையாது. ஆனால் அவர்களை துண்டுப் பிரசுரங்களையும் சிறு சிறு புத்தகங்களையும் ஏராளமாக பல மொழிகளில் அச்சிட்டு மாநாடு அல்லது சம்மேளனத்தின்போது பரந்த அளவில் வினியோகிக்கச் சொல்லுவேன். யாத்திரைகளின் போது என்னுடன் வந்த என்னுடைய மாணாக்கர்கள் அடிக்கடி ''குருமகராஜ் அவர்களோடு பிரயாணம் செய்வது அவர் கொடுக்கும் அதிசயிக்கத்தக்க அனுசரணை காரணமாக ஆனந்தமயமாக இருக்கிறது'' என்று அடிக்கடி சொல்வார்கள். என்னிடம் இருப்பது அனைத்தையும் அவர்களோடு

பங்கிட்டுக் கொள்வதுடன் அவர்களுடைய ஆரோக்கியத்தை மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டு அவர்களை எல்லோருக்கும் தெரியும்படியாகவும், பிரபலமாகவும் செய்வேன். சில சமயங்களில் ஏற்பாடு செய்பவர்களுக்கு ''எனது அறையில் போதுமான அளவு பழங்களும் பிஸ்கோத்துக்களும் வைத்திருங்கள். அதுதான் என்னுடைய சகுண பிரம்மன். திறம்பட நிறைய வேலை செய்வதற்கு, செய்பவர்களுக்கு நல்ல ஆகாரமும், சக்தியைக் கொடுக்கக் கூடிய பழங்களும் தேவை'' என்று எழுதினேன். 1934ல் நான் சீதாப்பூர் சென்றிருந்தபோது ஒரு மருத்துவ நிவாரண இயக்கத்தை ஆரம்பித்து வைத்தேன். ஆந்திர ஜில்லாக்களில் எனது யாத்திரையின்போது நான் பல கிராமங்களுக்குச் சென்று ஏழை கிராம மக்களுக்கு மருந்துகள் வழங்கினேன். அதுசமயம் ஸ்ரீ ஸ்வாமி ஓம்கார்ஜி அவர்களும் சகோதரி சுசீலா (ஸ்ரீ எல்லன் St. கிளேர் நொவால்டு) வும் என்னுடன் வந்திருந்தனர்.

## தவறாத ஈசுவரப் பிரேரணை

கடுமையான வேலையின் போது, ஜபம், தியானம், ஆழ்ந்த மூச்சுப் பயிற்சிகள், பஸ்த்ரிகா பிராணாயாமம், கீர்த்தனை இவைகள் மூலம் ஓய்வு எடுத்துக் கொள்வது வழக்கம். அவைகள் எனக்கு சக்தியூட்டி, புது மெருகு கொடுத்தன. நான் நகர் கீர்த்தனைகளும் பிரபாத் பேரியும் (காலையில் ஊர் வலம் வருதல்) பல இடங்களில் செய்தேன். நான் சென்ற இடமெங்கணும், நகர் முழுதும், ஆத்மீக அலைகளால் நிரப்பப்பட்டன. ஜனங்கள் நாட் கணக்கில் அதிசயிக்கத்தக்க அமைதியையும், சக்தியையும் உணர்ந்தனர். பக்தர்கள் பல வருஷங்கள் கழித்து இம்மாதிரி எனக்கு

எழுதுவதுண்டு. ''அன்புள்ள ஸ்வாமிஜி, நாங்கள் உங்களுடைய ''ஓம்''கார ஒலியையும், மகாமந்திர கீர்த்தனத்தையும் இன்று கூட கேட்கிறேம்.'' வயல்களில் வேலை செய்யும் மக்கள் இப்பொழுதுகூட என்னுடைய பிரபல கீர்த்தனை களாகிய ''ஓம் நம சிவாய, சிதானந்த ஹம், சீதாராம், சீதாராம்'' த்வனிகளை திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கின்றனர். எல்லா கல்லூரி, பள்ளி மாணவர்களும் எனக்குப் பிடித்த மான கீர்த்தனையாகிய ''கோவிந்தா, கோவிந்தா-புகை பிடிக்காதே கோவிந்தா''வை திருப்பித் திருப்பிப் பாடுகின்றனர். இந்த யாத்திரைகளின் பலன் நிரந்தரமானதாகவும் அதிசயிக்கத்தக்க தாகவும் இருந்தது.

ஆஸ்ரமத்தில் வேலை அதிகமாகவே நான் 1938ல் யாத்திரை வாழ்க்கையை விட்டுவிட்டேன். பல கேந்திரங்களுக்கு நான் என்னுடைய மாணக்கர்களை வெளியூர்களில் நடக்கும் ஆத்மீக மாநாடு களுக்கு அனுப்பி வந்தேன். பஞ்சாபிலுள்ள ஜனங்கள் பல சந்தர்ப்பங்களில் என்னைக் கட்டாயப் படுத்தி எனது குடீரில் சத்தியாக்கிரகமும் செய்து டிஸம்பரில் நடக்கும் வருடாந்தர சங்கீர்த்தன மாநாடுகளுக்கு வரும்படி பலவந்தப்படுத்தியும் விட்டனர்.

## மக்களிடையே சக்தி பொருந்திய மாற்றம்

1933 லிருந்து 1936 வரை என்னல் எழுதப் பட்ட கீழ்க்கண்ட சில கடிதங்கள், என்னுடைய யாத்திரைகளிலே செய்து முடிக்கப்பட்ட வேலைகளைப்பற்றி ஒரு அபிப்பிராயத்தைக் கொடுக்கும்.

I ''யாத்திரை செய்யும்போது நான் என்னுடைய சக்தி முழுவதையும் ஒரு வாரத் தளவில் கொட்டி விடுவேன். இப்பொழுது நான் களைத்திருக்கிறேன். ஆனுல் ஜனங்கள் என்னை மீரட் வரும்படி கட்டாயப் படுத்துகின்றனர். எல்லாம் அவன் அருள். அவனுடைய எண்ணம் பூர்த்தியாகட்டும். எனது கடிதங்களை என்னுடைய யாத்திரை ஸ்தலங்களுக்கு அனுப்ப வேண்டாம். அது இங்கு என்னுடைய வேலையில் குறுக்கிடும். ஜனங்கள் என்னை நாலா பக்கங்களிலிருந்தும் மொய்த்துக்கொண்டுவிடுகிருர்கள். எதுவும் நிச்சய மில்லை. நான் ஓரிரண்டு வாரங்களில் ரிஷிகேசம் திரும்பக் கூடும்.''

II ''என்னுடைய நேரம் பகலில் உணர்ச்சி மிக்க சொற்பொழிவுகளிலும் இரவில் கீர்த்தனைகள் செய்வதிலும் செலவழிக்கப்படுகிறது. நான் பக்தர்களுக்கு ஆனந்தத்தையும், சக்தியையும் பாய்ச்சுகிறேன். நான் சிங்கத்தைப்போல கர்ஜிக்கிறேன். ஜனங்கள் என்னை ஒரு விஞடிகூட விடுவதில்லை. இப்பொழுது சீதாப்பூரும், லக்கிம்பூர்-கேரியும் பூலோகத்திலுள்ள வைகுண்ட மாக இருக்கின்றன. 3000 ஜனங்களுடன் விராட் கீர்த்தனம் ஒன்று செய்தேன். அது லக்கிம்பூர் அதன் சரித்திரத்தில் கண்டிராத காட்சியாகும். இன்று ஹரிஜனங்களுடன் கீர்த்தனைகள் நடக்க விருக்கிறது. கீர்த்தனை இயக்கத்தின் மூலம் இந்தியாவை நாம் புரட்சிகரமாக்க முடியும். இது இந்தியாவிற்குத் தேவைப்படுகிறது. இப்பொழுது ஒரு மாபெரும் மறுமலர்ச்சி இருக்கிறது.''

III. விழாவிற்கு ஏற்பாடு செய்தவர்களிடம் இப்பொழுது அவர்களிடம் சிறிது சந்தோஷப் படுவதாகச் சொல்லவும். தனி மேடையில்

3 நாட்களுக்கு அகண்ட கீர்த்தனை நடப்பது மிக மிக அவசியம். அவ்வேலையில் இது ஒன்றுதான் பலனளிக்கக் கூடிய, உறுதியான, நீடித்திருக்கிற பாகமாகும். பல்வேறு கேந்திரங்களில் முழு சூழ் நிலையையும் உணர்ச்சியூட்டக் கூடியதாக, மின் சக்திப்பாயக் கூடியதாக ஆக்க சங்கீர்த்தனம் செய்வது மற்ருெரு வேலையாகும். உலக சமா தானத்திற்கு இந்த இரண்டும் முக்கியமா னவைகளாகும். ராம நாமத்திற்கு முன்பு உள்ளூர் கலவரமும், செக்ஷன் 144ம் எம்மாத்திரம். நீங்கள் அந்த ஊரடங்குச் சட்டத்தைக் கண்டு அஞ்ச வேண்டிய அவசியமில்லை.

## பல்வேறு கீர்த்தனைகளின் ரகங்கள்

இன்றுகூட, நான் அகட-பம் கீர்த்தனைகளைப் பாடியபொழுது ஆயிரக்கணக்கான மக்கள் எழுந்து நின்று நடனமாடிய காட்சியை மனக்கண்ணுல் பார்க்க முடிகிறது. ஒவ்வொரு பஜனையும் கீர்த்தனை யும் முடிந்த பிறகு சாதனையைப்பற்றிய மனதில் படும்படியான பாடங்களை நடத்துவதுண்டு. நான் பீஹாரில் லாரி கீர்த்தனைகள் செய்தேன். நான் ஒரு பக்த கோஷ்டியுடன் லாரியில் பல்வேறு இடங்களுக்குச் சென்று கீர்த்தனைகள் செய்தேன். ரிஷிகேசத்தில் நான் பல சமயங்களில் ''படகு கீர்த்தனைகள்'' செய்ததுண்டு.

மற்ருெரு மிகவும் ருசிகரமான அம்சம் என்ன வென்ருல்-கோஷ்டி கீர்த்தனம். மேடையிலிருந்து கீர்த்தனை செய்வதற்கு சபையோர்களிலிருந்து சர்க்கார் உத்தியோகஸ்தர்களாகப் பார்த்துத் தேர்ந்தெடுப்பதுண்டு. பிறகு எல்லா கல்லூரி ஆசிரியர்கள், டாக்டர்கள், மாணவர்கள், பெண் கள், சிறுமிகள் ஆகியோருக்கும் ஒரு சந்தர்ப்பம்

கொடுக்கப்பட்டது. அது மிகுந்த உற்சாகத்தை உண்டுபண்ணியது. அது ஒரு புது அம்சமாக இருந்தது. முதலில் அவர்களெல்லோரும் தயங்கியதோடு கூச்சமுமடைந்தனர். பிறகு அவர்கள் அதன் நன்மையை உணர்ந்தனர். சில மாதங்கள் கழித்து அவர்கள் எல்லோரும் தீவிர கீர்த்தன மணிகளாக மாறி பல நகரங்களில் கீர்த்தன மண்டலிகளை ஸ்தாபித்து விட்டனர்.

---

## அத்தியாயம் - 4

## தெய்வீக வேலை

### முதல் படி

### மாணுக்கர்கள் எவ்வாறு பயிற்சியளிக்கப்படுகிருர்கள்

நான் எப்பொழுதும் தனிமையில் மௌனமான சாதனையையே விரும்பினேன். பகலில் ஒரு சிறிது நேரம் நான் ஆத்மதாகம் உள்ளவர்களுக்கு சில கட்டுரைகளும் கடிதங்களும் எழுதுவேன். நான் மண்ணெண்ணெய் விளக்கை உபயோகிக்கவுமில்லை. அல்லது இரவில் எந்த நேரத்திலும் வேலை செய்ததுமில்லை. காலையில் ஒரு மணி நேரம் மட்டும் நோயாளிகளுக்கு மருந்து கொடுக்கவும், காம்பௌண்டில் சுறுசுறுப்பாக நடக்கவும், கங்கையில் நீராடவும் எனது ஆகாரத்தைப் பெற்று வருவதற்காக க்ஷேத்திரத்திற்குச் செல்லவும் நான் எனது குடிலை விட்டு வெளியே வருவது வழக்கம். இந்த முறையான தினசரி வேலையானது ரிஷிகேசத்தில் 35 வருஷ வாழ்க்கையில் என்னுடைய

பழக்கமாகிவிட்டது. நண்பர்களுடன் வீண் பேச்சுகளில் ஒருபோதும் ஈடுபடுவதில்லை. க்ஷேத்திரத்திற்குப் போகும்போது மௌனத்தை அனுஷ்டித்தேன். ஜனங்களைத் தவிர்ப்பான்கருதி வனத்திடையே ஒற்றையடிப் பாதை வழியாக நடந்து செல்வதுண்டு. க்ஷேத்திரத்திற்கு நடந்து செல்லும்பொழுது, ஆழ்ந்த சுவாசப் பயிற்சிகள், மானசீக ஜபம் இவற்றையும் சேர்த்துக்கொண்டேன். ஏதாவதொரு பரந்த பிரயாணத்தின் மூலமாகவோ, உணர்ச்சிமிக்க மேடைப் பிரசங்கங்களிலோ உலகப் புகழ் பெற வேண்டுமென்கிற விருப்பம் இருந்தது கிடையாது. நான் யாருக்கும் குருவாக இருக்கவேண்டுமென்று முயற்சித்ததே கிடையாது. ஜனங்கள் என்னை ''சத்குரு'' அல்லது ''அவதாரம்'' என்றழைக்கும்போது நான் மகிழ்வுறுவதில்லை. நான் ''குரு பதவி''க்குப் பரம விரோதி. அது ஒரு பெரும் தடை. ஆத்மீக பாதையில் இருந்த பல மகா புருஷர்களின் வீழ்ச்சிக்கு அது காரணமாக இருந்திருக்கிறது. ''குரு பதவி'' சமூகத்திற்கு ஒரு மிரட்டல் ஆகும். இப்பொழுதுகூட மக்களை எனக்கு மானசீகமாக நமஸ்காரம் செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன். **1931**ல் என்னுடைய சிஷ்யர்களிலொருவருக்கு நான் எழுதிய ஒருசில வரிகள் எனது மனப்பாங்கை தெளிவாகத் தெரிவிக்கும் :—

''நான் ஒரு சாதாரண சாதுதான். நான் உங்களுக்கு அதிகமாக உதவி செய்ய முடியாமல் போகக்கூடும். தவிர நான் சிஷ்யர்களை உண்டாக்குவதில்லை. நான் எனது வாழ்நாள் முழுதும் உம்முடைய மனமார்ந்த நண்பனாக இருக்கமுடியும். நான் என் பக்கத்தில் நீண்ட நாட்களுக்கு ஜனங்களை வைத்துக்கொள்ள விரும்பவில்லை. நான் ஒரு சிலமாதங்கள் பாடங்கள் கொடுத்து என்னுடைய

மாணுக்கர்களை காஷ்மீர் அல்லது உத்தர காசியிலுள்ள ஏகாந்தமான இடங்களில் தியானம் செய்யச் சொல்கிறேன்.''

## அழுத்தமும் பணிவும்

நான் ஒருபொழுதும், ஜனங்களிடம் ஒருதுளி கமண்டல ஜலத்திலிருந்து முக்தி அல்லது தொட்ட உடன் சமாதி போன்ற பலன்களுக்காக வாக்குறுதிகளைக் கொடுத்து மக்களைத் தூண்டும்படியாக எதையும் சொன்னதோ அல்லது செய்ததோ கிடையாது. நான் முறையான ஆத்மீக முன்னேற்றத்திற்காக மௌன சாதனை, ஜபம், தியானம் இவற்றின் முக்கியத்துவத்தை வற்புறுத்தினேன். அதேபோல் எல்லா சாதகர்களையும் மனித வர்க்கத்திற்குத் தன்னலமற்ற சேவையின் மூலம் உள்ளத்தைச் சுத்தி செய்யும்படியும் சொல்வதுண்டு.

1933ல் சென்னையிலேயுள்ள பிரசுரகர்த்தாக்கள் என் வாழ்க்கையைப்பற்றி கட்டுரைகள் எழுதி அதில் என்னை ''அவதாரம்'' என்று குறிப்பிட்டிருந்தார்கள். உடனே நான் கொடுத்த பதிலானது நான் எப்போதும் கடைப்பிடித்துவரும் என்னுடைய மனோ நிலையை விளக்கும் :—

தயவு செய்து சகல ''கிருஷ்ண அவதாரம்'' ''பகவான்'' வழக்கத்தை நீக்கிவிடவும். வெளியீட்டை இயற்கையானதாகவும் எளிமையானதாகவும் வைக்கவும். அப்பொழுது அது கவர்ச்சிகரமானதாக இருக்கும். என்னைப்பற்றி அடிக்கடி அதிகமாக மிகைப்படுத்தவேண்டாம். ரசம் ஆவியாகிவிடும். எனக்கு ''உலககுரு'' ''மண்டலேஸ்வர்'' ''பகவான்'' போன்ற பட்டங்களை கொடுக்க வேண்டாம். வெறும் உண்மையை வையுங்கள்.

உண்மை பிரகாசிக்கும். நான் எளிமையான, இயற்கையையொட்டிய வாழ்க்கையை நடத்துகிறேன். நான் சேவையில் அளவிலா ஆனந்தமடைகிறேன். சேவை என்னை உயர்த்தியிருக்கிறது. சேவை என்னை தூய்மையாக்கியிருக்கிறது. இந்த உடல் சேவைக்காக இருக்கிறது. நான் ஒவ்வொருவருக்கும் சேவை செய்வதற்காக, அதனால் உலகை சந்தோஷமும் உற்சாகமும் உடையதாகச் செய்வதற்காக வாழ்கிறேன்.''

கழுதைகள், மற்றும் இதர மிருகங்களுக்கு முன்னிலையிலும்கூட நான் மானஸீகமாக சாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறேன். நான் எல்லா பெயர்களுக்கும், உருவங்களுக்கும் பின்னால் ''சத்தை''க் காண்கிறேன். அதுவே தினசரி வாழ்க்கையில் உண்மையான வேதாந்தம்.

## பழக்கமில்லாதாருக்கு வழிகாட்டுதல்

1930லிருந்து, தங்கள் வாழ்க்கையை ஆத்மீகத் துறையில் செலுத்துவதற்காக கனல் கக்கும் ஆவலுடன் பல உண்மையான மாணாக்கர்கள் என்னிடம் வழிகாட்டச் சொல்லி வந்தனர். எனக்கும் இந்த உலகத்திற்குச் சேவை செய்ய வேண்டும் என்ற தகிக்கும் ஆவல் இருந்தது. அந்நாட்களிலெல்லாம் சாதுக்களும் மகாத்மாக்களும் போதிய சௌகரியங்களின்றி, வசதிகளின்றி, ஆத்மீக முன்னேற்றத்துக்கு சரியான வழிகாட்டியின்றி விசித்திரமான, பரிதாபப்படத்தக்க நிலையில் வசித்து வந்தனர். பலர் தகிக்கும் வெயிலிலும், இமயமலைக் கடுங் குளிரிலும் உடம்பை வதைத்துக் கொண்டனர். சிலர் சமாதி என்று சொல்லப் படுகிற அதைத் தூண்டிவிடுவதற்காக போதை

தரும் பானங்களைக் குடித்துப் பழக்கப் படுத்திக் கொண்டனர்.

சந்நியாசிகளும் யோகிகளும் உள்ள குழாம் ஒன்றை சரியான வழியில் பயிற்றுவிக்கும் பொருட்டு ஒரு சில சாதகர்களை பக்கத்திலுள்ள குடில்களில் இருக்க அனுமதித்தேன். நான் அவர்களுடைய உணவிற்கு க்ஷேத்திரத்தில் ஏற்பாடு செய்து அவர்களுக்கு உபதேசமும் செய்தேன். அவர்களுக்காக சகல செளகரியங்களுக்கும் வசதிகளுக்கும் ஏற்பாடு செய்தேன். அவர்களை ஊக்கப் படுத்தி அவர்களிடம் வைராக்யத்தைப் புகட்டினேன்.

அவர்களுடைய ஆரோக்கியத்தைப்பற்றி மிக்க கவனம் எடுத்துக்கொண்டேன். நான் அடிக்கடி அவர்களுடைய சாதனையைப்பற்றி விசாரித்து அவர்களுடைய தியானத்தில் ஏற்படுகின்ற இன்னல்களையும் தடைகளையும் நீக்க உபயோகமான குறிப்புகள் கொடுத்தேன். அவர்கள் தங்களுடைய சேவையை எனக்களிக்க முன்வரும்போது நான் அவர்களிடம் குடில் குடிலாகச் சென்று வயதான நோயுற்ற மகாத்மாக்களைக் கண்டுபிடித்து அவர்களுக்கு பக்தி சிரத்தையுடன் க்ஷேத்திரத்திலிருந்து உணவு கொண்டுவந்தும், அவர்கள் கால்களைப் பிடித்துவிட்டும், அவர்கள் துணிகளைத் துவைத்தும் அவர்களுக்குச் சேவை செய்யும்படி சொல்லுவேன்.

சில படித்த மாணுக்கர்களை என்னுடைய சிறு கட்டுரைகளைப் பிரதியெடுத்து பிரசுரத்திற்காக சஞ்சிகைகளுக்கும், செய்தித் தாள்களுக்கும் அவைகளை பிரசுரத்திற்காக அனுப்பும்படியும் அவர்களுடைய நேரத்தை படிப்பிலும், ஜபத்திலும்,

தியானத்திலும் செலவழிக்கும்படியும் சொல்லு வேன். அவர்கள் எல்லோரும் என்னுடைய கட்டுரைகளைப் பிரதியெடுப்பதில் மிக்க மகிழ்ச்சியைப் பெற்றனர். ஏனெனில் அவைகள் எல்லா சாதுக்களும் முனிவர்களும் போதித்த போதனைகளின் சாரமாகவும், உபநிஷத்துக்கள், கீதை இவற்றிலுள்ள கடினமான பகுதிகளுக்கு விளக்கமான விமரிசனமும் அடங்கியிருந்த காரணத்தினுல். என்னுடைய கட்டுரைகளில் கொந்தளிக்கும் புலன்களையும் மனதின் அலைச்சலையும் கட்டுப்படுத்துவதற்குரிய நடைமுறைப் பாடங்கள் அடங்கியிருந்தன.

பழங்கால புனித கிரந்தங்களை பல்லாண்டுகள் படிப்பதற்குப் பதிலாக மாணவர்கள் தினசரி ஒரு சில நிமிஷங்கள் எனது கட்டுரைகளைப் பிரதி யெடுப்பதன் மூலம் யோகத்தையும், தத்துவத்தை யும் குறைந்த காலத்தில் கற்றுக்கொண்டனர். நான் அவர்கள் அந்த வேலையை விரும்புகிருர்களா என்பதை அறிய அவர்கள் முகத்தை உன்னிப்பாக கவனித்துப் பிறகு எச்சரிக்கையாக அவரவர்கள் ருசிக்கும் மனப்போக்கிற்கும் தக்கபடி விஷயங்களைப் பொறுக்கி அவர்களிடம் அந்த வேலையை ஒப்படைத்தேன். சில சமயங்களில் நானே முழு வேலையையும் செய்ய வேண்டியதாயிருந்தது. நான் மாணவர்களை நேசித்தேன். கேட்காமலேயே அவர்களுடைய தேவைகளைக் கவனித்தேன்.

உலகில் பந்தமில்லாத வயதான பெரியவர் களைப் பொறுத்தமட்டில் நான் அவர்களை வரவேற்று அவர்கள் சாதனையைத் தொடர்ந்து செய்வதில் உற்சாகமூட்டி, கங்கையில் குளிக்கும்படியும், நிறைய ஜபமும், ஸ்ரவணமும் செய்யும்படியும்

கூறுவேன். நான் அவர்கள் முகத்தில் அமைதியையும் ஆனந்தத்தையும் காணும்பொழுது சந்தோஷத்தில் ஆனந்தக் கூத்தாடுவேன். இவ்வாறாக மேலும் மேலும் பக்தர்கள் என்னிடம் வந்தனர். ஸ்வர்க்காஸ்ரம நிர்வாகிகள் அதிகமாகிக் கொண்டு வரும் உண்மைநாடிகளை வைத்துப் பராமரிக்க முடியவில்லை. நான் அந்த இடத்தை விரும்பினேன். அந்த அமைதியை அனுபவித்தேன். ஆனால் அதிகமான படித்த சாதகர்களின் ஆத்மீக முன்னேற்றம் காரணமாக நான் ஸ்வர்க்காஸ்ரமத்தை விட்டு விலகுவது என்று முடிவு செய்தேன்.

## இரண்டாவது படி

## கருவாலிக்கன்றை நடுதல்

யுக்தி செய்தலும் திட்டம் தீட்டுதலும் எனது வழக்கத்தில் இல்லை. நான் இறைவன் கருணையை நம்பியிருந்தேன். நான் ஸ்வர்க்காஸ்ரமத்தை விட்டு விலகுவதென்று முடிவு செய்து இருந்தேன். நான் எங்கே செல்வது? அது பெரும் பிரச்சினையாக இருந்தது. சில நாட்கள் நான் ராம ஆஸ்ரம நூல் நிலையத்தில் ஒரு சிறு அறையில் தங்கினேன். என்னுடைய மாணுக்கர்களில் சிலபேர் பக்கத்திலுள்ள ஒரு சிறிய தர்மசாலையில் தங்கி ஆகாரத்திற்காக க்ஷேத்திரத்தை நம்பியிருந்தனர். சில நாட்கள் நானும் எனது பிக்ஷைக்காக க்ஷேத்திரத்திற்குச் சென்றேன். நேரத்தை மிச்சப் படுத்த நான் என்னுடைய பிக்ஷையை ஒரு முதிய சாதுமூலமாக க்ஷேத்திரத்திலிருந்து பெற்றேன். இவ்வாறு மாதங்கள் கழிந்தன.

பிறகு ஒரு குடிசை பாழடைந்த நிலையில் அருகாமையில் இருக்கக் கண்டேன். அது ஓரளவு கதவுகளும் ஜன்னல்களும் வைத்து அபிவிருத்தி செய்யப்பட்டது. நான் அந்த இடத்தைப் பிடித்துக்கொண்டு அங்கு 8 ஆண்டு காலத்திற்கு மேல் வசித்தேன். நான் வனத்தில் சுலபமாக ஒரு வேய்ந்த குடிலை நிர்மாணம் செய்திருக்க முடியும். அது மாபெரும் வேலைக்குகந்ததாக இல்லை. புத்தகங்களும், காகிதங்களும் கரையான்களால் பாதிக்கப்படக்கூடும். நான் ஒரு தர்மசாலையில் வரிசையாக பல அறைகள் ஒரு கடைக்காரனுல் மாட்டுக்கொட்டகையாக பயன்படுத்தப்பட்டு வருவதைக் கண்டேன். இந்த அறைகளுக்கு கதவுகள் இல்லை. படிப்படியாக, ஒவ்வொன்ருக எல்லா அறைகளும் மாணவர்களுக்காக குடியிருக்கும் இடமாக மாற்றப்பட்டன.

பக்தர்கள் என்னுடைய சொந்த உபயோகத் திற்காக கொஞ்சம் பணம் கொடுக்கும்போது நான் அதை ''இருபது முக்கிய ஆத்மீக சாதனைகள்,'' ''அமைதிக்கும் ஆனந்தத்திற்கும் வழி,'' ''நாற்பது பொன் மொழிகள்,'' போன்ற துண்டுப் பிரசுரங்களும், மற்றும் இதர சிறு பிரசுரங்களும் அச்சடிக்கப் பயன்படுத்தி அவற்றை, பார்க்க வருபவர்களுக்கு விநியோகித்தேன். நான் அந்தப் பணத்தை நோயுற்ற மகாத்மாக்களுக்குச் சிகிச்சை செய்ய சில உபயோகமான மருந்துகள் வாங்கவும் செய்தித் தாள்களுக்குக் கட்டுரைகள் அனுப்ப தபால் செலவுக்காகவும் ஆத்மீகதாகமுள்ளவர் களுக்கு கடிதங்கள் அனுப்பவும் பயன்படுத்தினேன். வேலை சீரான முறையில் வளர்ந்து வந்தது. மாணுக்கர்களைத் தேடிக்கொண்டு நான் வெளியில் போனதில்லை.

உண்மையான உண்மைநாடிகள் என்னுடைய உதவியையும் உபதேசத்தையும் நாடி பெருமளவில் வந்தனர். அவர்கள் எல்லோரும் என்னிடம் தீட்சை பெற்று தர்மசாலைக்குப் பக்கத்திலுள்ள அறைகளில் இருந்துகொண்டு இரவு பகலாக வேலை செய்தனர். வேலைப் பளுவை சமாளிக்கவேண்டி, நான் ஒரு பிரதியெடுக்கும் இயந்திரத்தையும், டைப்ரைட்டர் ஒன்றையும் வாங்கினேன். ஜனங்கள் உலகின் ஆத்மீக முன்னேற்றத்திற்காகச் செய்துவரும் இந்த தெய்வீக சேவையில் மிகுந்த உற்சாகம் காட்டினர். என்னிடம் அவர்கள் கொண்ட அன்பிற்காக அவர்களை நான் பாராட்டினேன். வேலையில், அவர்கள் கடந்ததை மறந்து சேவை, சாதனை மூலமாக பரிணமிக்க அவர்களாகவே குதித்தனர். பக்தர்கள் தாங்களாக மனமுவந்து இந்த நல்ல காரியத்திற்காக எனக்கு நன்கொடைகள் கொடுத்தனர். மாணவர்களை நிர்வகிப்பதற்காக, ஐந்து பேர்களுக்கான சமைக்காத பங்கீட்டு உணவை ரிஷிகேசத்திலுள்ள காலி கம்பளிவாலா க்ஷேத்திரத்திலிருந்து பெற்று வந்தேன். மிகுதியுள்ள மாணவர்களுக்கும், அதிதிகளுக்கும் ஒரு சில ஆதரவாளர்களிடமிருந்து கிடைத்த சிறு நன்கொடையைப் பயன்படுத்திக் கொண்டேன். அது எனக்கு சில புத்தகங்கள் விற்பனைக்கு வெளியிடவும் பயன் பட்டது.

## திறமைகள் நல்ல பயனைக் காண்கின்றன

புதிய திறமைமிக்கவர்கள் வந்து சேரவே நான் அவர்களுடைய விருப்பத்திற்கும் குணத்திற்கும் பிடித்தமான பலவித வேலைகளை ஆரம்பித்தேன். நான் அவர்களிடமுள்ள திறமைகளையும் மறைந்து கிடந்த சாமர்த்தியங்களையும் கண்டுபிடித்து அவர்களை மிகவும் உற்சாகப்படுத்தினேன். பிறகு க்ஷேத்திரத்திலிருந்து பிக்ஷை பெற முடியாத கடின

உழைப்பாளிகளுக்கும் அதிதிகளுக்கும் ஆதரவற்ற வர்களுக்கும் உணவளிப்பதற்காக ஒரு சிறிய சமையலறை ஆரம்பிக்கப்பட்டது. நான் பலவித மான பக்தர்கள், உயர்நிலைப் பள்ளிகள், நூல் நிலையங்கள், நன்கொடையாளர்கள், சந்நியாச மார்க்கத்தில் தாகமுள்ளவர்கள், (நிவ்ரித்தி மார்க்கம்) ஆகியவர்களுடைய விலாசங்களை வைத்துக்கொண்டு அறிவைப் பரப்புவதற்காக முறையாக என்னுடைய புத்தகங்களை அனுப்பி வந்தேன். சுலபமாகப் பார்ப்பதற்காக அந்த விலாசங்கள் எல்லாம் நன்ருக பல தலைப்புகளில் பகுக்கப்பட்டிருந்தன. இங்கு ஒரு சில விலாசப் புத்தகங்களிலுள்ள தலைப்புகளைக் கொடுக்கிறேன்:—

ஆஸ்ரமங்கள், சங்கங்கள், வக்கீல்கள், நீதிபதி கள், பட்டதாரிகள், புத்தக வியாபாரிகள், பிரசுர கர்த்தாக்கள், கம்பெனிகள், டாக்டர்கள், கடிதப் போக்குவரத்து மாணுக்கர்கள், திவ்ய ஜீவன சங்கக் கிளைகள், நூல் நிலையங்கள், பெண்கள் பகுதி, பிரம்மச்சாரிகள், சந்நியாசி மாணவர்கள், சஞ்சிகைகள், குறிப்பிட்ட காலங்களில் வரும் பத்திரிகைகள், மகாராஜாக்கள், ஜமீன்தார்கள், தீட்சை பெற்ற மாணுக்கர்கள், மாதாந்திர நன்கொடையாளர்கள், இல்லற சிஷ்யர்கள், உத்தியோகஸ்தர்கள், ஆதரவாளர்கள், பேராசிரியர்கள், அதிசயமான உலோபிகள். இப்பொழுது பல விலாசப் புத்தகங்கள் இருக் கின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் தனித்தனிப் புத்தகம். நானே சரியான விலாசங்களைப் பூர்த்தி செய்து அதில் ஏற்படும் மாற்றங்களை மிகவும் ஜாக்கிரதையாகக் குறிப்பது வழக்கம். இன்றுகூட முக்கியமான விலாசங்களை நானே குறித்து மாணவர் களை எல்லா விலாசப் புத்தகங்களையும் தவறில்லாத முறையிலே கவனித்து வர அனுமதிக்கிறேன்.

## மூன்றும் படி
## ஒரு மாபெரும் ஸ்தாபனத்தின் பிறப்பு

முறையாக பரந்த அளவில் இந்த தெய்வீக இயக்கத்தை நடத்திச் செல்லுமுகத்தான் நான் இந்த திவ்ய ஜீவன பந்தோபஸ்து சங்கத்தை 1936ல் ஸ்தாபித்து பந்தோபஸ்துச் சாஸனத்தை அம்பாலாவில் பதிவு செய்தேன். 1936ல் லாகூரி லிருந்து நான் ஒரு கீர்த்தனை மகாநாட்டைத் தலைமைதாங்கி நடத்திக் கொடுத்துவிட்டுத் திரும்பி வருகையில்தான் ஒரு பாதுகாப்புச் சங்கத்தைப் பற்றி எண்ணி அம்பாலாவில் இரங்கி ஒரு வக்கீலைக் கலந்து பாதுகாப்புச் சாஸனத்தைத் தயாரித்தேன். பிறகு உலக முழுவதும் ஆத்மீக அறிவைப் பரப்பு வதற்காக திவ்ய ஜீவன சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அதன் பிறகு எல்லா முக்கிய நகரங்களிலும் சுமார் 300 கிளைகள் திறக்கப்பட்டன. ஆயிரக்கணக்கான மாணவர்கள் என்னிடமிருந்து சந்நியாச ஆஸ்ரமத் திற்கு தீட்சை பெற்றனர். பயிற்சி பெறும் வரையிலும் அவர்கள் என்னுடன் இருந்து வேலை செய்கின்றனர். முன்னேறிய மாணவர்கள் தங்கள் சொந்த இயக்கத்தை பெரிய நகரங்களில் ஆரம்பிக்கவோ அல்லது இமயமலைக் குகைகளிலே தங்கள் சொந்த சாதனையிலீடுபடவோ செய்தனர்.

ஆத்மீக வேட்கை மிக்கவர்கள் உலகின் எல்லா பாகங்களிலிருந்தும் தபால் மூலமாக உபதேசம் பெறுகின்றனர். யோகம், பக்தி, வேதாந்தம், ஆரோக்கியம் ஆகிய துறைகளில் அனுஷ்டான முறைகளைப்பற்றித் தொடர்ச்சியாக கட்டுரைகள் பல மொழிகளில், துண்டுப் பிரசுரங்கள், சிறு புத்தகங்கள், பெரிய வெளியீடுகள் மூலமாக வெளி வந்துகொண்டிருக்கின்றன. எல்லா தேசங்களிலு முள்ள முன்னணியிலிருக்கும் பத்திரிகைகளும்

யோகம், ஆரோக்கியம், மற்றும் பொதுவான ஆத்மார்த்த விஷயங்களைப் பற்றிய கட்டுரைகளைப் பிரசுரிக்கின்றன.

உலக முழுவதும் அனுப்புவதற்காக ஆஸ்ரமத்தில் ஆங்கிலத்திலும், ஹிந்தியிலுமாக அரைடஜன் சஞ்சிகைகள் வெளியிடப்படுகின்றன. இப்பொழுது ஆஸ்ரமம் சுமார் 400 பேர்களை வைத்துச் சமாளிக்கக்கூடிய நிலையிலிருக்கிறது. இவர்களுள் கற்றறிந்த அறிவாளிகள், மகாத்மாக்கள், யோகிகள், பக்தர்கள், ஏழை மக்கள், நோயாளிகள் இவர்களைத்தவிர பக்கத்துக் கிராமங்களிலுள்ள பள்ளி மாணவர்களும் உள்ளனர்.

## சக்தி பொருந்திய ஆத்மீகப் புத்துயிரூட்டுமொரு கேந்திரம்

வெளிநாட்டுக்காரரர்கள் பலர் ஆஸ்ரமத்திற்கு வந்து சில வாரங்களோ அல்லது மாதங்களோ தங்கிவிட்டு ஆஸ்ரமத்தில் செய்யப்படுகிற அதிசயிக்கத்தக்க வேலையினைப் பாராட்டுகின்றனர். சிவானந்தநகர் வாசிகள், இளையோர் முதியோர், ஆண்கள் பெண்கள், இந்தப் புனிதமான கேந்திரத்தின் அமைதியையும் ஆனந்தத்தையும் அனுபவிப்பதோடு உலகிற்குப் பல வழிகளில் உதவியும் செய்கின்றனர். அவர்கள் எல்லோரும் என்னுடைய நேர்முகமான கவனிப்பைப் பெறுகின்றனர். நான் அவர்களுக்கு எல்லா சௌகரியங்களும், வசதிகளும், செய்துகொடுப்பதோடு அவர்களுடைய பரிணமத்திற்கும் உதவுகின்றேன்.

அவர்கள் தங்குவதற்குப் பல கட்டடங்களும், குடில்களும், அதிதி விடுதிகளும் இருக்கின்றன. கடிதப் போக்குவரத்து, புத்தக வேலைகள்

இவற்றைக் கவனிப்பதற்காக முப்பது டைப் ரைட்டர் மிஷின்கள் இராப்பகலாக வேலை செய் கின்றன. யோக வேதாந்த ஆரண்ய சர்வ கலா சாலையானது திறமைமிக்க தகுதி வாய்ந்த பேராசிரியர்கள், ஆசிரியர்களைக்கொண்டு ஏராள மான மாணவர்களைப் பயிற்றுவிக்கின்றது. மாணுக்கர்கள் எல்லா தர்ம சாஸ்திரங்களிலும் வல்லுநர்களாக இருக்கிறுர்கள். சர்வ கலாசாலை அச்சகம் இப்பொழுது மின் சக்தியால் தானே இயங்குகின்ற அச்சுக் கோக்கும், அச்சடிக்கும், மடிக்கும், தைக்கும் இயந்திரங்களுடன் அமைக்கப் பட்டிருக்கிறது. இளைஞரிடையே அறிவைப் பரப்பு வதற்காக கட்டுரைப் போட்டிகள் நடத்தி அவர் களுடைய கல்லூரிகளிலும் உயர்நிலைப்பள்ளி களிலும் மேல்கொண்டு படிப்பதற்காக உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்படுகின்றன.

சிவானந்தா ஆஸ்பத்திரி மகாத்மாக்களுக்கும் யோகிகளுக்கும், யாத்திரீகர்களுக்கும், பக்கத்துக் கிராமங்களிலுள்ள ஏழை மக்களுக்கும் ஒரு வரப் பிரசாதமாகும். பலவித துறை மருந்துகளில் அனுபவப்பட்ட டாக்டர்கள் ஆஸ்பத்திரி வேலையைக் கவனிக்கின்றனர். பொது ஆஸ்பத்திரி யானது எக்ஸ்ரே, டயாதெர்மி, காது, மூக்கு, தொண்டை, மற்றும் கண் நோய், கேஸ்களைக் கவனிக்க ஒரு துரிதகதி இயந்திரம் ஆகிய வற்றுடன் இருக்கிறது.

விஸ்வநாதர் ஆலயத்தில் செய்யும் விசேஷ வழிபாடானது உலக முழுதுமுள்ள நோயாளி களுக்கு ஒரு புத்துயிரளித்திருக்கிறது. ஜனங்கள் பக்தர்களின் பெயரில் செய்யும் இதுபோன்ற வழிபாடுகளால் அமைதியையும், வளத்தையும் பெறுகின்றனர். ஆஸ்ரமத்திலுள்ள சகல

மதத்தாருடைய கோயிலில் செய்த விசேஷ பிரார்த்தனைகளால் தங்கள் உயிர் காப்பாற்றப் பட்டது என்று பக்தர்களிடமிருந்து நூற்றுக்கணக் கான கடிதங்கள் வரும்போது நான் பேரானந்தக் களிப்பால் பூரிப்படைகிறேன். அவர்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட அதிசயமான பாதுகாப்புக் களைப்பற்றி புத்தகம் புத்தகங்களாக எழுது கிறார்கள்.

இதர மதஸ்தர்களும் மதத் தலைவர்களும்கூட வந்து ஆஸ்ரமத்தில் தங்கி உலகத்திற்குச் சேவை செய்ய இது எடுத்துக்காட்டான — ஒரு பொது மேடை — ஒரு கேந்திரம் என்பதைக் கண்ணுறு கின்றனர். நான் எனக்கு முன்பாக, களிப்பும் பேரானந்தமும் ஒவ்வொருவர் முகத்திலும் தவழுகின்றவர்கள் இருக்கின்ற ஒரு பெரிய குடி யேற்றத்தைக் காண்கின்றேன். ஜனங்கள் பல நோக்கங்களோடு வருகிறார்கள். (உலகாயத, ஆத்மீக நன்மைகள் போன்றவைகளைப் பெறு வதற்கு). அவர்கள் எல்லோரும் தங்கள் அபிலாஷைகள் பெருமளவிற்குப் பூர்த்தியடைந்து விடுவதைக் கண்டு திகைக்க வைக்கப்படுகின்றனர். எல்லா ரகமான உண்மைநாடி வருவோர்களுக்கும் இந்த எடுத்துக்காட்டான கேந்திரத்தை அளித் தமைக்காக இறைவனுக்குப் பெருமை பாராட்டுவோமாக.

வழக்கமான நடவடிக்கைகளுடன் அவ்வப் போது குருடர் நிவாரண முகாம்களும் ஆஸ்ரமத் திலும், வெளியிடங்களிலும் ஏற்பாடு செய்யப் படுகின்றன. இந்தியாவிலுள்ள முக்கிய நகரங் களில் மாகாண திவ்ய ஜீவன மாநாடுகள் கூட்டப் படுகின்றன. பக்தர்களும் மாணவர்களும் கோஷ்டி கோஷ்டியாக அவர்களுடைய விடுமுறை நாட்களில்

வந்து தினசரி அலுவல்களிலும் சத்சங்கத்திலும் கலந்துகொண்டு கணக்கிலா ஆத்மீக நன்மைகளைப் பெறுகின்றனர்.

## நான்காம் படி
## கூட்டு சாதனை

இளம் பக்தர்கள் அவர்களுடைய பழைய வழக்கம் காரணமாக குளிர்.காலக் குளிரில் சூரியோதயம் வரையிலும் அல்லது காலை 6 அல்லது 7 மணி வரையிலும் தூங்கிவிடுவது வழக்கம். விடியற்காலை 4 மணி முதல் 6 மணி வரையிலான பிரம்ம முகூர்த்த நேரத்தில் தூங்கி அவர்களுடைய பொன்னான வாழ்வை வீணாக்கக் கூடாது. அந்த நேரமானது ஆழ்ந்த தியானத்திற்கு மிகவும் உகந்த நேரமாகும். ஆகாயமும் அப்பொழுது சத்துவ அலைகளால் சக்தியூட்டப்பட்டிருக்கிறது. அதிக சிரமமில்லாமல் ஒருவனுக்கு அதிசயிக்கத்தக்க மன ஒருமைப்பாடு கிடைக்கும்.

என்னுடைய குடீரத்திலிருந்து, உரக்கப் பல தடவை இந்த மந்திரங்களைச் சொல்வதுண்டு:— ''ஓம் ஓம் ஓம், ஷ்யாம் ஷ்யாம் ஷ்யாம், ராதே ஷ்யாம் ராதேஷ்யாம் ராதேஷ்யாம்'' இவ்வாறு என்னுடைய மாணவர்களை பிரார்த்தனைக்காகவும், தியானத்திற்காகவும் எழுந்திருக்கும்படிச் செய்வேன். இதனால் தாமஸ குணம் படைத்த சாதகர்கள் மீது ஒரு பயனும் ஏற்படவில்லை. நான் அவர்களுடைய இரவு சாப்பாட்டை சூரியன் மறையுமுன்னமேயே ஏற்பாடு செய்தேன். அது சிலர் விடியற்காலம் எழுந்திருக்க உதவியாக இருந்தது. இரவில் அதிகமாக வயிற்றை யார் நிரப்புகிறார்களோ அவர்களுக்குத்தான் விடியற் காலையில் எழுந்திருப்பது கடினமாகத் தோன்று கிறது.

சாதனையில் ஆரம்ப காலங்களில் ஒரு அறையில் தனிப்பட ஜனங்கள் தியானம் செய்தபோதிலும், அவர்கள் காலையில் எழுந்ததும் தூக்கம் அவர்களையும் மீறி அழுத்துவதைப்பார்த்து அந்த நேரம் முழுவதும் உட்கார்ந்த நிலையிலேயே தூங்குகின்றனர். இதனால் எனக்கு பிரம்ம முகூர்த்தத்தில் கூட்டுப் பிரார்த்தனையும், தியானமும் செய்யச் சொல்ல வேண்டுமென்ற யோசனை உதித்தது. ஒரு மாணவன் ஒவ்வொரு குடீருக்கும் முன்னால் உள்ள மணியை அடித்து எல்லோரையும் சேர்த்துக் கொண்டு கூட்டு சாதனைக்கான ஒரு பொது இடத்திற்கு வந்து சேருவான். நான் தினந்தோறும் அவர்களோடு சில மாதங்களும், வருஷங்களும் சேர்ந்துகொண்டேன்.

## பிரார்த்தனையும் அத்யயன வகுப்புக்களும்

நிகழ்ச்சி விநாயகர் ஸ்துதி, குரு ஸ்தோத்திரம், மகா மந்திரக் கீர்த்தனைகளுடன் ஆரம்பமாகும். ஒரு மாணவன் கீதையில் ஒரு அத்தியாயத்தைப் படித்து ஒரு ஸ்லோகத்திற்கு அர்த்தம் சொல்லுவான். மற்றொரு மாணவன் மன ஒருமைப் பாட்டைப் பற்றியும், தியானத்தைப்பற்றியும் சில சிறு குறிப்புக்கள் கொடுப்பான். முடிவில் நான் அரை மணி நேரம், சீக்கிரம் எப்படி ஆத்மீக முன்னேற்றம் அடைவது என்பதைப்பற்றிச் சொல்லி மனதின் கெட்ட குணங்களை எவ்வாறு அழிப்பது என்பதற்கும் பாய்ந்தோடும் உணர்ச்சிகளை எவ்வாறு கட்டுப் படுத்துவது என்பதற்கும் பல விதமான வழிகளைக் கூறுவேன். நான் தார்மீக பூரணத்துவத்தை அதிகம் வற்புறுத்தினேன். நிகழ்ச்சியானது எல்லோரும் சேர்ந்து பத்து சாந்தி மந்திரங்களைச் சொல்வதோடு முடிவுறும். மாணவர்கள் அந்த

இறையுணர்வை பகலில் அவர்கள் வேலையின்போது கூட உடையவர்களாக இருந்தனர்.

சில மாணவர்கள் என்னுடைய குடீரிலிருந்து ஒரு பர்லாங் தூரத்திலுள்ள பிரம்மானந்த ஆஸ்ரமத்தில் வசித்து வந்தனர். பல சமயங்களில் நான் விடியற்காலை 4 மணிக்குத் திடீரென்று குடீர்களுக்குச் சென்று 'ஓம்' பல தடவை உச்சரித்து பிரார்த்தனைக்காக எழும்படிச் செய்வதுண்டு. நான் எல்லா மாணவர்களையும் கூட்டு தியானத்தில் சேரும்படி வற்புறுத்துவதில்லை. நான் அவர்களை அவர்கள் சாதனையை அவர்களுடைய குடீரிலேயே செய்ய அனுமதித்தேன். இவ்வாறுக எனது கவனம் முழுவதையும் என்னுடைய மாணுக்கர்களுடைய ஆத்மீக முன்னேற்றத்திலேயே செலுத்தினேன். இப்பொழுது கூட அந்நாட்களில் கூட்டுப் பிரார்த்தனையிலும், தியானத்திலும் கலந்து கொண்ட பல மாணவர்கள் தாங்கள் எவ்வாறு என்னுடைய சுருக்கமான சாதனையைப்பற்றிய சொற்பொழிவுகளால் ஊக்குவிக்கப்பட்டனர் என்பதைப்பற்றிச் சொல்கின்றனர்.

மாலையில் கூட நான் 3 மணியிலிருந்து 4 மணி வரை ''படிக்கும் வகுப்பு'' ஒன்றிற்கு ஏற்பாடு செய்தேன். ஒரு மாணவனை நான் எழுதிய புத்தகங்கள் ஏதாவது ஒன்றிலிருந்து ஒரு அத்தியாயத்தைப் படிக்கச் சொல்லுவேன். அடுத்தநாள் முக்கியமான விஷயங்களில் கேள்விகள் கேட்பேன். நான் சாதகர்களைப் பல வழிகளில் பயிற்றுவித்தேன். அவர்கள் எல்லோரும் சாஸ்திரங்களிலுள்ள மந்திரங்களைச் சொல்வதிலும், கீர்த்தனைகள் செய்வதிலும், சிறு சொற்பொழிவுகள் செய்வதிலும் தனித்தேர்ச்சி பெற்றிருந்தனர். நான் ஒரு மாணவனைக் கேள்வி கேட்கச் சொல்லி மற்ற

வர்களை பதில் சொல்லும்படிச் சொல்லுவேன். மாலை வகுப்பில் நான் லிகித ஜபத்தையும், விடியற் காலையில் ''த்ராடக்'' மற்றும் இதர யோகப் பயிற்சிகளையும் புகுத்தினேன். பகலில் அவர்கள் எல்லோரும் யோகத்தைப்பற்றியும் தத்துவத்தைப் பற்றியும் கட்டுரைகள் எழுதி தங்கள் சொந்த அனுபவங்களைப்பற்றியும் எழுதியாக வேண்டும். இன்றுகூட பள்ளி மாணவர்களும் சிறு குழந்தை களும் ஆஸ்ரமத்திற்கு வரும்பொழுது அவர்களுக்கு ஆங்கிலத்தில் ஒருசில சிறு வாக்கியங்களைச் சொல்லிக் கொடுத்து ஒரு சக்தி வாய்ந்த சொற்பொழிவு நிகழ்த்தச்சொல்வதுண்டு. பலர் என்னுடைய ''குறைவாகச் சாப்பிடு'' போன்ற ஆங்கிலக் கீர்த்தனைகளைக் கற்றுக் கொண்டனர்.

நான் எனது மாணவர்களை கூட்டு வேலை, டைப் அடித்தல், சரியாகக் கணக்கு வைத்தல், சங்கத்தின் நடவடிக்கைகளை நிர்வகித்தல், பக்தர்கள், அதிதிகள் நோயாளிகள் ஆகியவர்களைக் கவனித்தல் ஆகிய இவ்வேலைகளில் பயிற்றுவித்தேன். இவ்வாறாக ஆரம்ப நிலையில் கூட, யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகமானது அதனுடைய வேலையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தது.

## அதிதிகளைக் கவனித்தல்

அதிதிகள் என்னிடம் வரும்பொழுது நான் அவர்களிடம் அவர்களுடைய வீட்டுவிவகாரங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிராமல், கடந்ததை மறந்து என்னோடு சேர்ந்து கீர்த்தனங்கள் பாடும்படி சொல்லுவேன். நான் அவர்களுக்கு சங்கீதம், பஜனை, கீர்த்தனம், தத்துவம் இவைகளைச் சொல்லிக்கொடுத்தேன். இன்றுகூட பக்தர்கள்

ஆஸ்ரமத்திற்கு வரும்பொழுது நான் அவர்கள் படிப்பதற்கு ஒரு புஸ்தகத்தைக் குறித்துக் கொடுத்து அடுத்த நாள் அவர்களைக் கேள்விகள் கேட்பதுண்டு. நான் அவர்களுடைய சந்தேகங்கள் அனைத்தையும் தீர்த்து அவர்களுடைய இன்னல்களையும் இடையூறு களையும் நீக்குவதற்கு உதவும்படியான அபிப்பிராயங்களையும் சொல்லுவேன்.

அவர்கள் எல்லோரும் என்னுடைய நேரடியான கவனிப்பைப் பெறுவதில் மகிழ்ச்சியடைகின்றார்கள். இமயமலையில், கங்கை நதிக்கரையில் அமைந் திருக்கும் இந்த கேந்திரத்தில் நடக்கின்ற முறை யான வேலையானது இந்தியாவிலும், மற்ற நாடு களிலுமுள்ள தொலைவிலுள்ள இடங்களிலிருந்து ஆயிரக்கணக்கில் உண்மைநாடிகளைக் கவர்கின்றது. திவ்ய ஜீவன சங்கம், யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகம், சிவானந்தா ஆஸ்ரமம் ஆகிய வைகள் எல்லா பக்தர்களுக்கும் எடுத்துக்காட்டாக ஆகிவிட்டன. அதே போன்ற வேலையானது இப்பொழுது முறையாக பல்வேறு கேந்திரங்களில் பல்கலைக் கழகக் கிளைகள் திவ்ய ஜீவன சங்கம், சிவானந்த ஆஸ்ரமம், சிவானந்த யோகப்பள்ளி இவற்றின் கிளைகள் ஸ்தாபித்ததின் மூலமாக முறை யாக ஏற்பாடு செய்யப்பட்டு வருகின்றன.

நான் ஆஸ்ரமத்தில் சாதகர்களுடைய உணவைப்பற்றி அதிக கவனம் செலுத்துகிறேன். இங்கு அவர்களுக்கு அவர்களை நல்ல முறையில் தகுதியுள்ளவர்களாக வைத்துக்கொள்ளப் போதிய அளவு எல்லாம் இருக்கின்றன — ஆடம்பரத் திற்காகவோ அல்லது இந்திரிய சுகங்களுக்கானவை களோ அல்ல, ஆனால் சாதனையில் முன்னேறுவதற்கு உதவியானவைகள் உள்ளன.

ஞாயிற்றுக் கிழமைகளில் உப்பில்லாத உணவு, ஏகாதசி நாட்களில் சாதாரணமான, வேகவைத்த உருளைக் கிழங்குகளும், ரொட்டியும் அல்லது சில மாணுக்கர்களுக்கு பாலும் பழமும் மட்டும் உணவு வகையில் புகுத்தினேன்.

சிறிது காலத்திலேயே விடுமுறை நாட்களில் டில்லி, சென்னை, கல்கத்தா, மற்றும் இந்தியா விலுள்ள முக்கிய பட்டணங்களிலிருந்தும் ஏராள மான பக்தர்கள் என்னிடம் வந்தனர். பிறகு நான் ஒரு கூட்டு சாதனையை — சாதனையின் முக்கியமான அம்சங்கள் அடங்கிய நிகழ்ச்சி — யோகத்தின் அனுஷ்ட்டான முறையாகிய ஒரு ரகமான ஆத்மீக மாநாட்டைப் புகுத்தினேன். இது ஈஸ்ட்டர், கிருஸ்துமஸ் விடுமுறை நாட்களில் சாதனை வாரங் களாக உருவாகின. இப்பொழுது இது ஒரு வழக்க மான அம்சமாக கடந்த இருபது ஆண்டுகளாக ஆகிவிட்டது.

இந்தியாவிலுள்ள பல்வேறு திவ்ய ஜீவன சங்கக் கிளைகள் ஆஸ்ரமத்திலுள்ள சாதனை வாரங்களைப் போன்ற நிகழ்ச்சிகளுடன் மகாநாடுகளை நடத்தின. இந்த மாநாடுகளில் சொற்பொழிவுகள் நிகழ்த்து வதற்காக பெரிய மனிதர்களை அழைத்தன. அந்தச் சமயத்தில் விநியோகத்திற்காக பல துண்டுப் பிரசுரங்களையும், சிறு புத்தகங்களையும், புத்தகங் களையும் அச்சடிக்கின்றனர். இவ்வாருக உலக முழுதும் ஆத்மீக எழுச்சிக்காக சக்திபொருந்திய தொரு வேலை நடந்து வருகிறது.

## அத்தியாயம் ஐந்து

# என்னுடைய மதமும் அதன் செய்முறையும் பரப்புதலும்

நான் தனிமையை விரும்புகிறேன். நான் சில வேளைகளில் என்னை மறைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது. நான் பெயருக்கும் புகழுக்கும் ஆசை படுவதில்லை. உணர்ச்சிமிக்க சொற் பெருக்காற்று வதற்காக உலகிலுள்ள கிரந்தங்களையும் மதங்களை யும் அலசி ஆராய்ந்து கொண்டிருப்பதில் அதிகமான நேரத்தைச் செலவழிப்பதில்லை. புத்தகங்கள், செய்தித்தாள்கள் ஆகியவைகள் மூலமாக பிரசுரிப் பதற்காக அழகான கட்டுரைகள் எழுதுவதற்காக நேரத்தைச் செலவழிப்பதை ஒரு போதும் நான் விரும்புவதில்லை. ஜனங்கள் என்னை ''மகாத்மா, குரு மஹராஜ்'' என்று அழைக்கும்போது நான் மகிழ்ச்சியடைவதில்லை. என்னுடைய பெயரை நிரந்தரமாக்க நான் எந்த ஒரு ஸ்தாபனத்திற் காகவும் திட்டமிட்டது கிடையாது. ஆனால் தெய்வத்தின் விருப்பம் வேறாக இருந்தது. அனைத் துலகும் தெய்வீக மகிமையுடனும், சிறப்புடனும் என்னிடம் வந்தது. அதற்கு உண்மையை நாடிச் செல்லும் ஆயிரக்கணக்கானவர்களின் தீவிரமான பிரார்த்தனைகளும் அத்துடன், என்னிடமிருப்பதை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும், ஒளி, அமைதி, அறிவு, சக்தி ஆகியவற்றையடைய பெருமளவில் சரியான வழியில் உலகிற்குச் சேவை செய்ய வேண்டும் என்கின்ற என்னுடன் பிறந்த குணங்களும் சேர்ந்ததே காரணமாக இருக்கலாம்.

நான் சில வசதிகளையும், வேலைகளை நடத்து வதற்கு உபயோககரமான சில நபர்களையும் பெற்ற பொழுது இந்த தெய்வ நெறிக் கழகத்தை

ஆரம்பிக்கத் தூண்டப்பட்டேன். நான் சாதுக்கள், மகரிஷிகள் ஆகியவர்களின் செய்தியை எடுத்துக் கொண்டு உலகிற்கு அமைதிக்கும் ஆனந்தத்திற்கு மான வழியை போதித்தேன். தெய்வ நெறிக் கழகத்தின் பெருமை காரணமாக பல படித்த, பக்தியுள்ள ஆத்மாக்கள் வெகு தொலேவிலுள்ள தேசங்களிலிருந்து என்னேப்பார்க்க வந்து தன்னல மற்ற சேவை செய்யவேண்டுமென்கின்ற அவாவில் என்னேடு பங்கு கொண்டு, நிரந்தரமான அமைதி யையும் ஆனந்தத்தையும் அளிக்கவல்ல ஒரே வழியான சரியான அறிவைப்பரப்புகின்ற அந்த மதிப்பு மிக்க வேலேயையும் செய்து கொண்டிருக் கின்றனர். தெய்வ நெறிக் கழகத்தின் வெளி நாட்டுக் கிளேகள் பல நான் எழுதியவைகளின் பகுதிகளே மறுபதிப்பு செய்து அதனதன் வட்டாரங் களில் இலவசமாக விநியோகித்துக் கொண்டு வருகின்றன.

## இப்போது தேவைப்படுவது

மனிதன், சுயநலம், பேராசை, சிற்றின்ப இச்சை, கோபம் இவைகளிலே சிக்கிக் கொண்டி ருக்கும்பொழுது அவன் சகஜமாக கடவுளேப்பற்றி முற்றிலும் மறந்து விடுகின்ருன். அவன் எப் பொழுதும் தன்னுடைய உடலேப்பற்றியும், குடும்பத்தைப்பற்றியும், குழந்தைகளேப்பற்றியும், எண்ணிக்கொண்டே இருக்கிருன். அவன் இடை விடாது தன்னுடைய அன்ன பாஞதிகள், சுக சௌகரியங்கள் இவைகளேயே கவனித்துக்கொண்டி ருக்கிருன். அவன் சம்சார சாகரத்தில் மூழ்கடிக்கப் படுகிருன். உலகாயதமும் அவநம்பிக்கையும் சர்வ வல்லமையுடன் அரசாட்சி புரிகிறது. அவன் சிறு விஷயங்களால் ஆத்திர மூட்டப்பட்டு போராட ஆரம்பிக்கிருன். எங்கு பார்த்தாலும் அமைதி

யின்மை, துன்பம், பீதி, அழிவு ஆகியவைகள் காணப்படுகின்றன. இப்பொழுது அகில உலகமும் உலகாயதத்தின் பிடிப்பில் சிக்கிக்கொண்டிருப்ப தாகத்தெரிகிறது. புது வகையான வெடிகுண்டுகள் எங்கணும் பயங்கரத்தை உண்டுபண்ணுகின்றன. ஜனங்கள் புனித கிரந்தங்களிலும், சாது, சந்நியாசி களின் வாக்குகளிலும் நம்பிக்கை இழந்துவிட்டனர். தவறுதலான கல்வி காரணமாகவும் கெட்ட சக்தி கள் காரணமாகவும் மதஆசாரம் தவறியவர்களாகி விட்டார்கள்.

இருபதாம் நூற்றுண்டு பிறந்ததிலிருந்து மனதைத் தூண்டும்படியான சம்பவங்கள் சகல ஆத்மீக மனம் படைத்தவர்கள், சந்நியாசிகள், சாதுக்கள், இறை மனிதர்கள் ஆகியோர்கள் மீது அதன் பலன்களைக் காட்டத் தவறவில்லை. உலக யுத்தங்களின் பயங்கரங்கள் அவர்களைப் பெரிதும் கலக்கிவிட்டன. விதியின் கொடுமையாகிய கொள்ளை நோய்கள் அதையொட்டி ஏற்பட்ட அகில உலக சோர்வும் அவர்களுடைய இளகிய மனதைத் தொட்டன. மனித வர்க்கத்தின் துயரங்கள் பெரும்பாலும் அதனுடைய செய்கை களினுலேயே கொண்டு வரப்படுகின்றன என்பதை அவர்கள் கண்டனர். மனிதனை அவனுடைய தவறு களையும், அறியாமையையும் உணரச் செய்து அவனுடைய வழிகளை செம்மைப்படுத்தி அதன் மூலமாக அவன் தன்னுடைய வாழ்க்கையை பயனுள்ள முடிவுகளை அடைவதற்காக ஊக்கத் துடன் ஈடுபடுத்தச் செய்ய வேண்டுவதே அப்போதைய அவசரத் தேவை என்பது உணரப்பட்டது.

லட்சக்கணக்கானவர்கள் அப்பேர்ப்பட்ட ஒரு வழியை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டி ருந்தனர். இந்த மௌனப் பிரார்த்தனை காதில்

விழுந்தது; மனிதனை மிருகத்தனத்திலிருந்தும், விலங்குத் தன்மையிலிருந்தும் விடுவித்து அவனுடைய வாழ்க்கையை இப்பூவுலகில் தெய்வ மணம் கமழும்படியாக ஆக்குகின்ற வேலையை மேற்கொண்டுள்ள இந்த தெய்வநெறிக் கழகத்தின் பிறப்பை நான் கண்ணுற்றேன்.

இந்த நெருக்கடியான நிலையில்தான் நான் தெய்வநெறிக் கழகத்தை ஆரம்பித்தேன். இப்பொழுது மக்கள் இதை உலகிற்கு ஒரு ஆசியாகக் கருதுகின்றனர். அது உலகின் எல்லா மதங்களின், எல்லா முனிவர்களின், தீர்க்க தரிசிகளின் உபதேசங்களின் சாராம்சத்தை தன்னுடைய அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அதன் கொள்கைகள் பரந்தவை; சர்வ தேசமயமானவை; சகலத்தையும் அணைத்துக்கொண்டிருப்பவை; விஞ்ஞானத்திற்கும் பகுத்தறிவுக்கும் ஒத்தவை. அது மனிதனை இவ்வுலக வாழ்வின் துன்பங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் அவனை எல்லா புறத்தோற்றங்களுக்கும் பின்னுல் மறைந்து கிடக்கும் ஆனந்த மயமான தெய்வத்தன்மையை பார்க்கும்படிச் செய்து உயர் நிலைக்குக்கொண்டு வருகின்ற வேலையை தனதாக்கிக் கொண்டிருக்கிறது.

நல்ல எண்ணங்கள் எல்லா நல்ல மனிதர்களிடமும் வியாபித்து தன் வயப்படுத்துகின்றன. தெய்வநெறிக்கழகத்தால் உற்பத்தி செய்யப்படுகின்ற எண்ண அலைகளானவை ஐரோப்பிய, அமெரிக்க மக்களிடையே அதன் பயனை அளித்திருக்கின்றன. இப்பொழுது உலக முழுவதும் பெரியதொரு சமாதானத்தாகம் இருக்கிறது. அணு ஆயுதப் போட்டியை விரைவில் முடித்துக்கட்ட வேண்டுமென்று லட்சக்கணக்கானவர்கள் பீதியடைந்து வருகின்றனர்.

## ஆத்மீக பூர்ணத்துவத்திற்கு சர்வ சாமானிய கொள்கைகள்

தெய்வநெறிக் கழகம் எல்லாவற்றையும் அணைத்திருக்கும், எல்லாம் அடங்கியிருக்கும் ஒரு ஸ்தாபனம். அதனுடைய நோக்கங்கள், கொள்கைகள், குறிக்கோள்கள் எல்லாம் மிகவும் பரந்தவை; சர்வ சாமானியமானவை. அது எந்த மதத்தினுடைய கொள்கைகளையோ, சட்டதிட்டங்களையோ, வழிபாட்டு முறைகளையோ கண்டிப்பதில்லை. அது எல்லா மதங்களின், வழிபாட்டு முறைகளின் அடிப்படைத் தத்துவங்களை தன்னகத்தே கொண்டுள்ளது. பிடிவாதமான நிபந்தனைகளோ, அல்லது வகுப்புவாதக் கொள்கைகளோ கிடையா. இது மக்களை ஆத்மீக வழிக்கு அழைத்துச் செல்கிறது. இது மக்களை அவர்கள் இவ்வுலகில் இருந்துகொண்டு சில குறிப்பிட்ட வழிபாட்டு முறையையோ அல்லது மதத்தையோ பின்பற்றிக்கொண்டே தெய்வீக வாழ்க்கையை மேற்கொள்ள வழிசெய்கிறது.

இக்கழகமானது உலக முழுவதும் ஒரு சக்தி பொருந்திய விழிப்புணர்ச்சியைக் கொண்டு வந்துள்ளது. செயலிலே சுதந்தர வாழ்க்கைக்குப் பெரிதும் உதவியிருக்கிறது. இவ்வுலகத் துன்பங்களுக்கு மத்தியில் ஆனந்தமயமான வாழ்க்கையையும், மானஸீக பற்றற்ற தன்மை, மானஸீகமான ஆசைகள், ஆணவம், தனது என்ற தன்மை ஆகியவைகளை துறத்தல் மூலம் இன்பமயமான வாழ்க்கையையும் கொண்டுவந்திருக்கிறது. சங்கத்தின் கொள்கைகள், நோக்கங்கள், குறிக்கோள்கள், அதன் வேலை முறைகள் ஆகியவற்றை உலகமே பாராட்டுகிறது. அது சாதனையின்

நடைமுறைப் பகுதிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது. கூட்டுயோகத்தை இது புத்திக்குகந்த, விஞ்ஞான முறைப்படி விளக்கிச் சொல்கிறது. உலகின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள பல்வேறு ஸ்தாபனங்கள், சங்கங்கள் ஆகியவற்றின் அங்கத்தினர்கள் இந்த தெய்வநெறிக் கழகத்தின் அங்கத்தினர்களாகி ஆத்மீகத் துறையில் வழி காட்டும்படி எனக்கு எழுதுகின்றனர். நான் அவர் களைப் பிரத்தியேகமாக கவனித்து அவர்களுடைய ஆத்மீக முன்னேற்றத்திற்காகவும் நன்மைக்காகவும் தபால் மூலம் பாடங்கள் கொடுக்கிறேன். தெய்வ நெறிக்கழகம் எந்த மனிதனும், பிரம்மச்சாரி யானாலும், கிரஹஸ்தனானாலும், வானப்பிரஸ்த னானாலும், சந்நியாசியானாலும், தெருக்கூட்டு பவனானாலும், பிராமணனானாலும், சூத்திரனானாலும், க்ஷத்திரியனானாலும் அல்லது உலகத்தில் ஒரு சுறு சுறுப்பாகச் சுற்றிக் கொண்டிருப்பவனானாலும் அல்லது இமயமலையிலிருக்கும் அமைதியான சாதகனானாலும் அவனவன் வாழ்க்கையில் தனது சொந்த இடத்திலிருந்துகொண்டே மெய்யறிவை யடைய முடியும் என்று பிரகடனப் படுத்துகிறது. தெய்வீக அறிவு என்பது சந்நியாசிகள், துறவிகள் ஆகியோரின் ஏகபோகச் சொத்தல்ல.

இது, முக்கியமான அடிப்படை ஞானயோகம், வேதாந்தமாக இருந்த போதிலும் ஒருவன் அறிவையும் உள்ளத்தையும் தூய்மைப்படுத்த கர்ம யோகத்தையும், நல்லாரோக்கியத்திற்கும், பலத் திற்கும், பிராணனைச் சுத்தப்படுத்துவதற்கும் மனதை திடப்படுத்துவதற்கும் ஹதயோகத்தையும், சங்கல்பங்களை ஒழித்து தியானத்தில் மனத்தை ஒரு நிலைப்படுத்த ராஜயோகத்தையும் அறியாமை என்னும் திரையைக் கிழித்து முடிவில் தன்னுடைய சொந்த சச்சிதானந்த சொரூபத்தில் நிலைத்திருப்

பதற்கு ஞானயோகத்தையும் பயில வேண்டுவது எப்படி அவசியம் என்பதை விளக்கிக்கூறுகின்றது.

## நெருக்கடியான சந்தர்ப்பம்

மாணவர்கள் மதாசாரம் தவறியவர்களாகி விட்டனர், அவர்கள் மதத்தில் நம்பிக்கை இழந்து விட்டனர், விஞ்ஞானத்தின் கவர்ச்சி காரணமாக, தர்மத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டனர், அவர்கள் புகை பிடிக்கவும் சூதாடவும் ஆரம்பித்து விட்டனர், சிறுமிகள் நாகரிக நாரீமணிகளாகி விட்டனர், உத்தியோகஸ்தர்கள் உலகாயதவாதிகளாகி விட்டனர், ஜனங்களின் ஆரோக்கியம் குன்றி விட்டது, ஜனங்கள் வேதாகமங்களை ஒதுக்கி விட்டனர். உலகாயதம் அதன் அரசாட்சியை செலுத்துகிறது.

இந்த நெருக்கடியான நிலையில், இறை மகிமையை புதுப்பிக்க, யோக அறிவைப் பரப்ப, கூட்டு யோகத்தை உபதேசிக்க, மக்களிடை சிறிது சிறிதாக பக்தியையும் நம்பிக்கையையும் ஊட்ட, மனித வர்க்கத்தின் ஆத்மீக முன்னேற்றத்திற்கு வேலை செய்ய, ஒவ்வொரு வீட்டிற்கும் அமைதியையும் ஆனந்தத்தையும் கொண்டு வர, நான் இந்த தெய்வநெறி இயக்கத்தை ஸ்தாபித்தேன். யோக வேதாந்த ஆரண்ய விஸ்வ வித்யாலயத்தை நிறுவினேன், இமயமலையில் புனிதமான கவர்ச்சிகரமானதொரு இடத்தில், ரிஷிகேசத்தில் புனித கங்கா நதிக்கரையில்.

## இயக்கத்தின் துரித வளர்ச்சி

மனித வர்க்கத்தின் ஆத்மீக முன்னேற்றத்திற்காக நான் 1936ல் தெய்வநெறிக் கழகத்தை

ஆரம்பித்தேன். நான் பல மாணுக்கர்களை யோகத்தில் பயிற்றுவித்தேன். அவர்களுடைய துரிதமான ஆத்ம பரிணுமத்திற்காக காலை கூட்டுப் பிரார்த்தனை வகுப்புக்களையும் அத்துடன் கோஷ்டி ஆசன வகுப்பையும் புகுத்தினேன். உள்ளூர் ஏழை மக்களுக்கும் ஆயிரக்கணக்கான யாத்திரீகர் களுக்கும் ஒரு இலவச வைத்தியசாலை திறந்து மருத்துவ உதவி அளித்தேன். தேர்ச்சி பெற்ற வர்கள் பல இடங்களுக்கும் பக்தி, யோகம், வேதாந்தம் ஆகியவற்றைப்பற்றிச் சொற்பெருக் காற்ற அனுப்பப்பட்டனர். பிரார்த்தனைகள், வழிபாடு ஆகியவற்றிற்காக ஒரு சிறு ஆலயம் அமைக்கப்பட்டது. பெருமளவில் மாணவர்கள் பயிற்சிக்காக வந்த பொழுது எல்லா மாணவர் களுக்கும், விருந்தாளிகளுக்கும் இருக்கைவசதிகளும் உணவு வசதிகளும் செய்து கொடுக்க வேண்டிய தாயிற்று. இவ்வாருக சிவானந்தாஸ்ரமம் ஏற்பட்டது.

யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகம் யோகத்தின் எல்லா கிளைகளிலும் ஒழுங்காக வகுப்புக்கள் நடக்க ஆரம்பிக்கவும் ஏற்படுத்தப் பட்டது. உலகின் எல்லா பகுதிகளிலுமுள்ள மாணவர்களுக்கு உதவியாக இருக்கும் பொருட்டு நடைமுறைப் பகுதியில் தேவையான நூல்களையும் அரை டஜன் சஞ்சிகைகளையும், அச்சிடுவதற்கும் அவ்வேலைகளைத் தாணுகவே செய்யக்கூடிய பல இயந்திரங்களோடு கூடிய பல்கலைக் கழக அச்சகம் ஸ்தாபிக்கப்பட்டது. அந்தச் சிறிய மருத்துவவிடுதி யானது ஒரு பெரிய சிவானந்த மருத்துவ ஸ்தாபன மாக, ஒரு பொது ஆஸ்பத்திரியுடனும் தனது சொந்தக் கட்டிடத்துடனும் வளர்ந்தது. இந்தக் கூட்டு வேலையைக் கவனிக்கப் பரிணமித்துள்ள பல் வேறு காரியங்களையும் பூர்த்தி செய்ய தெய்வநெறிக்

கழகமே மத்திய ஸ்தாபனமாக இயங்கி வந்த போதிலும் பல் வேறு ஸ்தாபனங்களும் ஏற்பட லாயின. இப்பொழுது ஆஸ்ரமம், ஒரு மாபெரும் ஆத்மீகக் குடியேற்றம், அதிசயிக்கத்தக்க, வர்ணிக்க முடியாத இமயமலையின் அமைதியில் திகழ்ந்து விளங்கும் ஒரு மாபெரும் தொழிற்சாலையைப்போல் தோன்றுகிறது. ஆஸ்ரமத்திற்கு வந்து மாதங்களோ வருஷங்களோ தங்குகின்ற ஆத்மீக அன்பர்கள், ஆஸ்ரமத்தின் பல்வேறு ஸ்தாபனங்களின் வேலைக் காரர்களாகவும், ஆலயத்தின் பிராகாரத்தில் அல்லது அருகிலுள்ள வனப்பிரதேசங்களில் அமைதி யாக தியானம் செய்பவர்களாகவும் அவரவருக்குப் பிடித்த முறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு ஆத்மீக முன்னேற்றம் அடைய வழியிருப்பதைக் காண்கின்றனர்.

## அடிப்படை வழி

இந்த வாழ்க்கைக்குப்பிறகு ஒரு ஸ்வர்க்கத்தை அடைய பாடுபடுவதைக் காட்டிலும் தெய்வ நெறியை பின்பற்றுபவர்கள் இப்பூவுலகிலேயே ஸ்வர்க்கத்தின் நிலையை ஏற்படுத்த முயற்சிக் கின்றனர். தெய்வநெறிக் கழகத்தின் கொள்கைகள் முற்றிலும் வகுப்புவாத மற்றதும் சகலருக்கும் பொருந்துவதுமாகும். இவ்வியக்கத்தின் அடிப்படை உலக முழுதுமுள்ள எல்லா மதங்களின் பொதுவான அடிப்படைக் கொள்கைகளாகிய உண்மை, அஹிம்சை, தூய்மை ஆகிய மூன்று கொள்கைகளையும் அனுசரிக்க வேண்டுமென்பதே. ஆகவே தெய்வநெறி இயக்கத்திற்கு சகல மதத் தினரின் மனமுவந்த கூட்டுறவும், ஒரு வாழ்க்கைத் திட்டமும், துன்பத்தினின்று விடுபட்டு பேரானந் தத்தை அனுபவிக்க விரும்பும் உலகிலுள்ள அனைவருக்கும் பொதுவான, எல்லோராலும் ஒப்புக்

கொள்ளக்கூடிய ஒரு லக்ஷியமும் உண்டு. இதுதான் பிறகு தெய்வநெறி இயக்கமாகும்.

## இரகசியக் கொள்கைகள் இல்லை

தெய்வீக வாழ்க்கைச் சாதனை என்பது எல்லா யோகங்களின் சாரத்தையும், எல்லா மதங்களின் ஜீவாதாரத்தையும் தவிர வேறொன்றுமில்லை. இங்கு ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த நம்பிக்கையை பாதிக்கக்கூடிய, தனக்குப் பொருத்தமான அம்சங்கள் இருப்பதைக் காண்கிறான். இதனுடைய கொள்கைகளை தீவிரமாகவும் சக்தியுடனும் வேலை செய்ய வேண்டிய ஒரு பெரிய நிர்ப்பந்தம் மற்றெப்பொழுதையும்விட இப்பொழுது அதிகமாக இருக்கிறது; ஏனெனில் விஞ்ஞானம், அரசியல், சமூகத்துறை ஆகியவைகளில் ஏற்பட்டுள்ள சமீபகால அபிவிருத்திகள் மனித வர்க்கத்தை முழு நாஸ்திகமாகிய அபாயத்தின் எல்லைக்கும் கொடுமையான ஆத்ம அழிவிற்கும் சமீபத்தில் கொண்டுசெல்ல பக்குவப் படுத்தியிருக்கின்றன. வெறுப்பும் ஹிம்சையும், பொய்யும் ஏமாற்றுதலும், தீயகுணங்களும் கெட்ட எண்ணங்களும் இந்நாள் வழக்கங்களாக விரைவில் வளர்ந்து கொண்டிருக்கின்றன.

இந்த இறங்குமுகமான நிலவரத்தை ஓரளவு சமாளிக்க ஒரு சரியான பலம்பொருந்திய எதிர்ப்பு சக்தியால்தான் முடியும். இவ்வாறு இந்நாட்களில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் இந்த தீயசக்திகளை எதிர்த்துநின்று மனிதன் அழிவை நோக்கி வேகமாகச் சென்றுகொண்டிருக்கும் சுழற்சியைத் தடுத்து நிறுத்துவான் கருதியே தெய்வ நெறிக் கழகம் ஸ்தாபிக்கப்பட்டது. நான் சமாதானம், நல்லெண்ணம், ஆத்மீக சகோதரத்துவம்,

ஆத்மாவின் ஒருமையை உணர்தல் ஆகிய செய்திகளை தாங்கி நிற்கிறேன். இந்த தெய்வநெறி இயக்கத்தில் அல்பமான நிரந்தரக் கோட்பாடு களோ, இரகசியக் கொள்கைகளோ அல்லது ஒரு சிலருக்கு மட்டும் சொந்தமான பகுதிகளோ கிடையா. உண்மையை நேசிப்பவர்கள் அதனுடைய பூரணத்துவத்தை, முடிவிலா அழகை, காம்பீர்யத்தை, சிறப்பை உணர்கின்றனர். இது சகலருக்கும் இடம் கொடுக்கிறது. இது ஒருவனை மனதின் மதத்தை, ஒருமையாகிய மதத்தை உணரச் செய்கிறது.

## எது உண்மை மதம்

வெறும் வாக்குவாதத்தாலும், தர்க்கத்தாலும் மதத்தைக் கற்றுக்கொடுத்துவிடமுடியாது, ஆத்மீக சட்டதிட்டங்களைப்போட்டு நீ ஒருவனை மதாச்சாரம் உடையவனுக மாற்ற முடியாது. உன்னுடைய புனித இலக்கிய மூட்டை களைக் காட்டியோ அல்லது உன்னுடைய தலைவரின் அற்புத சக்திகளைக் காட்டியோ ஒரு அபிலாஷியை வென்றுவிட முடியாது. நீ பரிணமிக்க வேண்டுமாஞல் — வாழ்க்கையின் இலக்ஷியத்தை அடைய விரும்பிஞல் மதத்தைக் கடைப்பிடி. அது சொல்கிறபடி வாழ்ந்துகாட்டு. உன்னுடைய மதம் எது வேண்டுமாஞலும் இருக்கட்டும், உன்னுடைய தீர்க்கதரிசி யாராக வேண்டுமாஞலும் இருக்கட்டும், உன்னுடைய மொழியும் தேசமும் எதுவாக வேண்டுமாஞலும் இருக்கட்டும், உன்னுடைய வயதோ அல்லது பாலோ எதுவாக வேண்டுமாஞலும் இருக்கட்டும், நீ ஆணவத்தை நசுக்கும், மனதின் கீழ்த்தரமான குணத்தை அழிக்கும், உன்னுடைய உடல், இந்திரி யங்கள், மனது ஆகியவற்றின்மீது ஆணைசெலுத்தும்

வழியைக் கற்றுக்கொண்டாயானால் நீ சுலபமாக வளரலாம். இதுதான் உண்மையான சமாதானத் திற்கும், அழிவற்ற ஆனந்தத்திற்குமான வழி என்பதை நான் கண்டுபிடித்தேன். ஆகவேதான் காரசாரமான விவாதங்களின் மூலமாகவும், தர்க்கங்களின் மூலமாகவும் மக்களை சமாதானப் படுத்த நான் முயற்சிக்கவில்லை.

உண்மை மதம் என்பது உள்ளத்தின் மதமே. உள்ளம் முதலில் தூய்மையாக்கப்பட வேண்டும். உண்மை, அன்பு, தூய்மை ஆகியவைகளே உண்மை யான மதத்தின் ஆதாரங்கள். மனிதனின் கீழ்த்தர குணத்தை வெல்லுதல், மனதைக்கட்டுப்படுத்துதல், நற்குணங்களை வளர்த்தல், மனித வர்க்கத்திற்குச் சேவை செய்தல், நல்லெண்ணம், சகோதர பாவம், பரஸ்பர ஒற்றுமை ஆகியவைகள் உண்மை மதத்தின் அடிப்படைகளாக அமைகின்றன. இக்கொள்கைகள் தெய்வநெறிக் கழகத்தின் கொள்கைகளில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. நான் இக்கொள்கைகளை பரந்த அளவில் பரப்புவதில் மிகவும் கண்ணும் கருத்துமாக இருக்கிறேன்.

அபிலாஷிகளினுடைய ஆவலைத் திருப்திப் படுத்துவதற்காக நான் வேதாகமங்களிலிருந்து பொருத்தமான ஆதாரபூர்வமான பகுதிகளைக் கண்டு பிடிப்பதில் நேரத்தை வீணுக்குவதில்லை. நான் நடைமுறை வாழ்க்கையை நடத்திக்காட்டி மாணவர்கள் அவர்களுடைய வாழ்க்கைகளை உருவாக்கிக்கொள்ள ஒரு உதாரணமாக இருக்க முயற்சிக்கிறேன். நீ உடலுணர்ச்சிகளை விட்டு மேலெழும்போதுதான் உண்மை மதம் ஆரம்ப மாகிறது என்பதை உணர். எல்லா முனிவர்கள், சாதுக்கள் ஆகியோரின் உபதேசங்களின் சாரமும் எல்லா மதங்களின் அடிப்படைத் தத்துவங்களும்

ஒன்றே. ஜனங்கள் அனுவசியமாக தேவையற்ற வைகளின் மீது சண்டை போட்டு இலக்ஷியத்தைத் தவற விட்டுவிடுகிறார்கள். சமாதானம், ஒற்றுமை, உயர்ந்த வாழ்க்கை ஆகியவற்றின் முன்னோடியான தெய்வநெறிக் கழகம் அதன் ஒளியையும், மகிமையையும் உலக முழுதும் சொரிவதாக !

## தெய்வ நெறியின் சுப செய்தி

பகவான் புத்தர் பல்லாண்டுகள் உறுதியான, திடமான போராட்டத்திற்குப் பின்பு அடைந்த அந்த (நிர்வாண) இலக்ஷியத்தை அடைய நாம் கடைபிடிக்கும் ஒவ்வொரு படியிலும் இப்பொய் யான உலகமானது பல இன்னல்களால் சூழப்பட்டி ருக்கிறது. நவயுக சிந்தனையாளனுக்கு போதுமான அளவு நேரமோ, அல்லது கடுமையான தவங்களை யும், கடுமையான மதச்சடங்குகளைச் செய்வதற்கும் பொறுமையோ கிடையாது. இவர்களிலும் சிலர் மூடநம்பிக்கை அளவிற்கு ஒதுக்கித்தள்ளப் படுகின்றனர். தற்போதைய தலைமுறைக்கு மதசம்பந்தமான பழக்க வழக்கங்களினால் ஏற்படுகின்ற பலன்களை கொடுக்கவும், அவர்களுக்கு அவர்களின் உண்மை முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டவும் அவர்களுடைய சக்தியையும், பயனையும் நன்றாக உணரச் செய்யவும் நான் என்னுடைய தெய்வீக வாழ்வின் சுபச்செய்தியை கற்பித்தேன். அது சகலருக்கும் பொருத்தமானதும், அதை சாதாரணமாக அலுவலகத்திற்குச் செல்பவனும் ஒளியிழந்த தொழிலாளியும் அவர்கள் தினசரி வாழ்க்கை முறைக்கு இடையூறு நேராவண்ணம் கடைப்பிடிக்கக் கூடியதுமான ஒரு முறையாகும். '' தெய்வீக வாழ்க்கையில் '' உள்ள அழகு என்ன வெனில் அதனுடைய எளிமையும் சாதாரண மனிதனின் தினசரி வாழ்க்கையில் அதை செயல்

முறையில் பயன் படுத்தக்கூடியதன்மையுமேயாம். ஒரு மனிதன் தன்னுடைய சொந்த மதத்தைப் பின்பற்றிக்கொண்டே தெய்வீக வாழ்க்கையின் தத்துவங்களைக் கடைப்பிடித்து விரைவான ஆத்ம பரிணமம் அடைய முடியும்.

## செய்முறை அம்சம்

சாதாரண உண்மைநாடியானவன் மனதின் திடீர் மாற்றங்களினுல் அடிக்கடி ஏமாற்றப் படுகின்முன். ஆத்மீக வாழ்க்கையைக் கடைப் பிடிக்கும் ஒரு மனிதன் அவனுடைய யாத்திரையின் முடிவை அடைவதற்கு முன்பே குழப்பமடைகிமுன். சகஜமாக அவனுடைய முயற்சிகளை பாதிவழியில் தளர்த்தத் தூண்டப்படுகின்முன். படுகுழிகள்பல; ஆனல் யார் தெய்வீக வாழ்க்கையை நடத்திக் கொண்டு உறுதியாகச் செல்கிமுர்களோ அவர்கள் தங்களுடைய மதவிருப்பமாகிய அதாவது ஆத்மானுபூதியாகிய இலட்சியத்தை அடைவது திண்ணம். நான் என்னுடைய எல்லா நூல்களிலும் பாய்ந்தோடும் இந்திரியங்களை ஒழுங்குபடுத்துதலையும், மனதை வெல்வதையும், உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதையும் அகத்திலே அமைதி பெறுவதையும், ஆத்மபலம் பெறுவதையும் பற்றி பரிணமத்தின் பல்வேறு படிகளுக்கேற்ப, ஒவ்வொரு தனிப்பட்டவனுடைய ருசிக்கும் குணத்திற்குமேற்ப வற்புறுத்தி வந்திருக்கிறேன்.

## தெய்வ நெறிக்கிளைகளின் வேலையும் ஆத்மீக அபிலாஷிகளின் வேலையும்

தனிப்பட்ட ஆத்மீக அபிலாஷிகட்கும், தெய்வ நெறிக்கழகக் கிளைகட்கும் எனது செய்தி பின்வருமாறு:—

''நீங்கள் ஆத்மீகப் பூரணத்துவம் அடைய இவ்வுலகிற்கு வந்திருக்கிறீர்கள். நீங்கள் மேலான, கலப்பற்ற பேரானந்தத்தை அனுபவிக்க இங்கு வந்திருக்கிறீர்கள். தெய்வீக உணர்வை அடைவதே மனித ஜன்மம் எடுத்ததின் நோக்கம். வாழ்க்கையின் லட்சியம் தன்னை அறிதல் (ஆத்மானுபூதி). மனிதன் காமாந்தகார மிருகமல்ல. மனிதன், அவனுடைய ஆதார பூர்வமான இயற்கையில், சதா சுதந்தரமுள்ள, சதா தூய்மையான, சதா பூர்ணத்துவமுள்ள, அழியாத, ஒரு ஆத்மீக ஜந்து (ஆத்மா). நீயே அழியாத ஆத்மா என்பதை உணர். நீ சச்சிதானந்தா. "அஜோ நித்யஹ ஸஸ்வதோயம் புராணஹ''– நீ பிறக்காதவன், நிரந்தரமானவன், அழிக்க முடியாதவன், பழமையானவன் என்பதை ஞாபகத்தில் வை. இந்த உன்னதமான உணர்வில் இருப்பது என்பது உன்னுடைய வாழ்வின் ஒவ்வொரு விநாடியிலும் வர்ணிக்க முடியாத ஆனந்தத்தை அனுபவித்தலாகும்; ஆத்மாவில் எல்லையற்ற சுதந்தரத்தை அனுபவிப்பதாகும். இது உனது பிறப்புரிமை. இதுவே உன் வாழ்க்கையின் இலட்சியம். இதுவே முடிவு. இதை உண்மை, தூய்மை, சேவை, பக்தி ஆகியவற்றோடு கூடிய வாழ்க்கையின் மூலமாக உணர்வதே தெய்வநெறி இயக்கத்தின் முக்கியமான குறிக்கோள்.

''பெருமளவில் அழிக்கக்கூடிய இந்த அணு ஆயுத யுகத்தில் பயம் மேலோங்கியிருக்கிறது. அறிவு விளக்கமடைந்த நாகரீகமடைந்த மனித இனம் என்று சொல்லிக்கொள்ளுகின்ற இனத்தின் பெரும் பகுதியினரின் கொள்கைகளை வெறுப்பு அரசாட்சி புரிகிறது. இந்த முன்னேற்றகாலம் உண்மையில் மனித இனத்தின் பெரும்பான்மையினரின் அபிப்

பிராயத்திலும், மதிப்பிலும், கொள்கைகளிலும் நீதிகளிலும் ஒரு அழிவுக்காலமாகவே தென்படுகிறது. இந்நிலையில், உலக முழுதுமுள்ள அறிவிற்சிறந்த ஆண்களும் பெண்களும் புனித பூமியாகிய இப்பரத கண்டத்தை, ஒளியையும் அறிவையும் பெறுவதற்காக நோக்கி நிற்கின்றனர். இக்கோளத்தின் எல்லா மூலை முடுக்குகளிலும் இந்த ஆத்மீக அறிவாகிய ஒளியையும், ஆத்மீக தத்துவத்தையும் பரப்புகின்ற இப்புனிதவேலை உங்களுடையது.''

## மனிதவர்கத்தின் ஒருமைப்பாடு

உபநிஷத்துக்கள் சொல்கின்றன:— ''இவை எல்லாம் ஆத்மனே தவிர வேறில்லை. அந்த ஒன்று ஆனந்தமயமான ஆத்மா சகல ஜீவராசிகளிலும் வசிக்கிறது.'' இன்று மனிதனுக்குத் தேவையான பெரியதொரு பாடம் என்னவெனில் இந்த எல்லா மனிதவர்க்கத்தின் ஆத்மீக ஒருமைப்பாடே. இதுவரை இருந்ததெவையோ, இனி இருக்கப் போவதெவையோ, எல்லாம் இந்த ஒன்றே, அழியாத ஆத்மா மட்டுமே. தெய்வீக வாழ்க்கையின் செய்தி என்னவெனில்:— ''எல்லா முகங்களிலும் இறைவனைக்காண். எல்லோருக்கும் சேவை செய். எல்லோரையும் நேசி. எல்லோரிடமும் அன்பாயிரு. பொறுமையுடனிரு. ஒவ்வொருவரையும் உன்னுடையவராகக்கருது. உன்னுடைய சகஜீவன்களுக்கு அவர்களிடம் குடியிருக்கும், இறைவனுக்கு செய்யும் வழிபாடாகக் கருதி சேவைசெய். மனித சேவை உண்மையிலேயே இறைவழிபாடாகும்.'' இச்செய்தியானது ஒவ்வொரு நாட்டிலும் மூலைக்குமூலை சுதந்தரத்தை ஒலிக்கட்டும். இச்செய்தி ஒவ்வொரு வீட்டிற்

குள்ளும், ஒவ்வொருவர் உள்ளத்திற்குள்ளும் புகட்டும்.

உலகின் எல்லாப் பெருமதங்களும் மனித வாழ்க்கையின் ஆத்மீக அடிப்படையாகிய இந்த தெய்வீகச் செய்தியையே பிரகடனப்படுத்து கின்றன. சர்வ வல்லமை பொருந்திய இறைவனின் தந்தைத் தன்மையின் கீழ் சர்வதேச சகோதரத்துவத்தையே அவைகள் பிரகடனப் படுத்துகின்றன. வேதங்களின் உட்பொருளும், புனித பைபிள், புனித கொரான், புனித காதைகள் மற்றும் உலக கிரந்தங்கள் உண்மையில் ஒன்று என்பதையும் அவைகள் ஒருசேர அன்பு, ஒருமைப்பாடு, நன்மை, இரக்கம், சேவை, வழிபாடு ஆகியவற்றின் இனிய செய்தியைப் பாடுகின்றன என்பதையும் நன்ருக அறிந்துகொள். பெயர், உருவம் ஆகியவற் ருலாகிய தடைகளை ஒதுக்கித்தள்ளு. எல்லா ஜீவன்களின் உள்ளத்திலும் ஒருமையைத்தேடு. ஆத்மீக அரவணைப்பிற்குள்ளே மனிதவர்க்கம் முழுவதையும் சேர்த்துக்கொள். சமாதானத் திற்காக வாழ். அகில உலக அன்பிற்காக வாழ். தெய்வீக வாழ்க்கையில் வாழ்.

## தெய்வீக வாழ்க்கையின் அறைகூவல்

''தற்கால மனிதனுக்கு தெய்வநெறிக் கழகத்தின் கிளை ஒரு பெரும் வரப்பிரசாதமாகும். அது தெய்வீகத்திடமிருந்து கிடைக்கப்பெற்ற உண்மையான வரமாகும். அது சக்திபொருந்திய யோகக்களம்; நடைமுறை வேதாந்தகளம். தெய்வீக வாழ்க்கையின் மூலம் மனிதன் தன்னை அறியாமை, வலி, துன்பம் ஆகியவற்றிலிருந்து விடுவித்துக்கொண்டு துன்பத்திற்கப்பால்

அமைதியும் பேரானந்தமும் நிலவும் ராஜ்யத்திற்குள் இங்கேயே இப்பொழுதே இந்த வாழ்நாளிலேயே சென்றடைய முடியும். தெய்வநெறி மனித வர்க்கத்திற்கு அமைதியையும் சகோதரத்துவத்தையும் அளிக்கிறது. இது மனிதனை சுத்தப்படுத்தி அவன் இயற்கைக் குணங்களை பெருந்தன்மையுடையதாக்கி அவனிடம் உள்ள கீர்த்தி பொருந்திய, மறைந்துகிடக்கின்ற தெய்வீகத் தன்மைகளைப் பிரித்துக்காட்டுகிறது. தெய்வநெறி இந்தியாவிற்கு, பொதுவாக பெருமளவில் உலகிற்கு ஒரு பரிசாகும்.

''உபநிஷத்துக்களின் அறைகூவல் ஒவ்வொரு கிராமத்திலும், பட்டணத்திலும், நகரத்திலும் ஒலிக்கட்டும். பெருமைபொருந்திய இறைவன் நாமத்தின் உச்சாடனம் நானுபக்கங்களிலும் நிரம்பட்டும். ஒவ்வொரு உள்ளத்திலும் நற்குணங்கள் பதிக்கப்படட்டும். நல்வாழ்வு வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் காணப்படட்டும். தெய்வீக வாழ்க்கை நடைமுறையில் இருக்கவேண்டும். தெய்வநெறிக் கொள்கைகள் நடைமுறை உண்மையாக்கப்படவேண்டும். மக்களின் வாழ்க்கையில் தெய்வநெறி தீவிர சக்தியுடன் காணச் செய்ய வேண்டும். இது முக்கியம். மனப்பூர்வமாக இரு. மனதோடு ஒன்று சேர்ந்து வேலை செய். தகுதியுடனிரு. அனுசரி, தகுதி கொள், இடங்கொடு. வேலையே முக்கியம். தனிப்பட்டவர் கருத்துகளும் சொந்த அபிப்பிராயங்களுமல்ல என்பதை எப்போதும் ஞாபகத்தில் வை. ஆகவே எல்லா வேற்றுமைகளையும் களைந்துவிட்டு தூயவாழ்க்கைக்காகவும், ஆத்மீக பூரணத்துவத்திற்காகவும் சேர்ந்து வேலை செய்.

தனிப்பட்டவரின் பூரணத்துவம் முடிவில் மனிதவர்க்கத்தின் பூரணத்துவத்திற்கு அழைத்துச் செல்கிறது. தன்னலமற்ற சேவைக் கொள்கையை பரப்பு. எல்லோரையும் யோக மார்க்கத்தைப் பின்பற்றி வாழ்க்கையின் இலக்ஷியத்தையும், நல்ல ஆரோக்கியத்தையும், நீண்ட ஆயுளையும் அடையும் படி தூண்டு.'' நான் உண்மைநாடிகளுக்கு சட்ட திட்டங்கள், கட்டுப்பாடுகள் மூலமாக உதவிசெய்ய முயற்சிக்கவில்லை. படிப்படியாக, கடிதங்கள் மூலமாக, சஞ்சிகைகள் மூலமாக, மதிப்புள்ள வெளியீடுகள் மூலமாக உபதேசங்களை எல்லா மாணவர்களுக்கும் கூட்டுப் பிரார்த்தனைகள் மூலமாகவும், பொதுவான தியானம், பஜனை, கீர்த்தனைகள் மூலமாகவும், ஓரளவு ஆத்மீக அலைகளை உற்பத்தி செய்வதற்காகக் கொடுத்தேன். ஆத்மீக முன்னேற்றத்திற்கு எண்ணிக்கை முக்கிய மல்ல. ஒரே ஒரு மனப்பூர்வமான மாணவன் உலகத் தையே ஆட்டிவைத்து உலகத்துக்கு ஒளியையும் அறிவையும் பரப்ப முடியும்.

1936 — 1940 க்கிடையே என்னுடைய மாணுக்கர்களுக்கு எழுதிய கீழ்க்கண்ட கடிதங்கள் நான் எவ்வாறு உலகம் முழுவதும் சக்திபொருந்திய தொரு இயக்கத்தை ஆரம்பித்து தெய்வ நெறிக் கழகத்தின் 300க்கு மேற்பட்ட கிளைகளை ஸ்தாபித் தேன் என்பதை தெள்ளத் தெளிவாக்கும்.

## 1. கூட்டுசாதனையின் முக்கியத்துவம்

கூட்டு சாதனை, கூட்டுப் பிரார்த்தனை, பொதுத் தியானம் ஆகியவற்றின் மூலம் பரிணமம் விரைவில் ஏற்படுகின்றது. தெய்வ நெறிக் கழகக் கிளைகளின் நோக்கம் செல்வம் சேர்ப்பதோ, பெயரும் புகழும் சம்பாதிப்பதோ அல்ல. பல்வேறு கேந்திரங்களில்

ஆத்மீக அலைகளை உண்டுபண்ணி உலகிற்கு அமைதியையும், ஒருமைப்பாட்டையும் கொண்டு வருவதற்காகவே இது இருக்கிறது. வாராந்திரக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய். ஆத்மீகத்தில் பற்றுள்ள நண்பர்களை அழை. பக்தர்களின் சந்தேகங்களை நிவர்த்தி செய். தத்துவப் புத்தகங்கள் நிறைந்த நூல் நிலையம் ஒன்று உனக்கு இருக்கலாம். உன்னுடைய ஊரிலுள்ள படித்த மனிதர்களை சொற்பொழிவுகள் செய்ய அழை. அவ்வப்போது என்னுடைய ''இருபது ஆத்மார்த்த போதனைகள்'' மற்றும் இதர துண்டுப் பிரசுரங்களை இலவச விநியோகத்திற்கு அச்சிடு. இவ்வாறாக தெய்வீக இயக்கத்திற்கு நீ வித்திடலாம். அது மெதுவாக வளர்ந்து உலகிற்கு ஆத்மீக நன்மையைப் பயக்கும். இது உன்னுடைய சொந்த பரிணாமத்திற்கும் கூடவே மனித வர்க்கத்தின் முன்னேற்றத்திற்கும் பெரிதும் பயன்தரும்.

## 2. தெய்வ நெறிக் கழகக் கிளையை ஆரம்பிப்பது எப்படி

''சரியான ஆரம்பம் பாதி முடிந்த மாதிரி.'' நல்லதொரு ஆரம்பமிருந்து வேலை செய்பவர்களுக்கு மனப்பூர்வமும், நம்பிக்கையும் பக்தியும் இருக்குமாகில் வெற்றி நிச்சயம். நான் மனப்பூர்வமான மாணாக்கர்களுக்கு எழுதியது :—

''நீ அதிசயிக்கத்தக்க நல்லதொரு ஆரம்பத்தை ஏற்படுத்தியிருக்கிறாய். இது விரைவில் வேரூன்றி பூத்துக் குலுங்கப்போகிறது. யோக வகுப்பை ஒரு வீட்டில் ஒரு அறையில் வைத்துக்கொள்ளலாம். ஒரு விளம்பரப் பலகையும் செய்து கொள். வாரம் ஒரு முறை கூட்டங்களை நடத்து. உன்னுடைய

நண்பர்களிடமிருந்து சில புத்தகங்களைச் சேர்த்து ஒரு நூல் நிலையத்தை அபிவிருத்தி செய். நான் என்னுடைய வெளியீடுகள் அனைத்தையும் அனுப்பி வைக்கிறேன். சாதாரண செலவுகளுக்காக அங்கத்தினர்களிடமிருந்து ஒரு சிறு தொகை சந்தாவாக வசூல் செய். கீழ்க்கண்ட நோக்கங்களையும், குறிக்கோள்களையும் கொள் :—

(அ) யோகத்தின் மூலமாக ஆத்மாநுபூதியைப் பெறுதல்.

(ஆ) யோக ஆசனங்கள், பிராணயாமம், நன்னடத்தைப் பயிற்சி ஆகியவை மூலம் இளைஞர்களுக்குப் புத்துயிரூட்டல்.

(இ) ரிஷிகள், யோகிகள் ஆகியோரின் ஞானத்தை எங்கணும் பரப்புதல்.

(ஈ) சர்வதேச சகோதரத்துவத்தையும், ஒழுங்கான தெய்வீக அன்பையும் வளர்த்தல்.

''ஒருபோதும் மனத்தளர்ச்சியோ, அவநம்பிக்கையோ கொள்ளாதே. தங்களுடைய வீடுகளிலேயே தெய்வநெறிக் கழகக் கிளையை ஆரம்பித்தவர்கள் பலர் இருக்கின்றனர். குடும்பத்தின் அங்கத்தினர்கள் காலை மாலைப் பொதுப் பிரார்த்தனைகளில் கலந்துகொள்வதுடன் பஜனையும், கீர்த்தனையும் நடத்துகிறார்கள். அவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட ஆத்மீக அலைகள் குடும்பம் முழுவதற்கும் அமைதியையும் முன்னேற்றத்தையும் கொண்டுவருகிறது. உன்னுடைய பொறுக்கியெடுத்த நண்பர்களிடையிலேயே இரண்டு அங்கத்தினர்களோடுகூட ஏதாவது செய்.''

இறை ஞானத்தைப் பரப்ப விருப்பம் கொண்ட ஆர்வமுள்ள அபிலாஷிகளுக்கு விவரமாக விளக்கங்கள் தர நான் எப்பொழுதும் தயாராக இருக்கிறேன் :—

சில அங்கத்தினர்களைச் சேர். என்னுடைய புத்தகங்களில் சில பக்கங்களைப் படி. சாதகர்களின் சந்தேகங்களை நிவர்த்தி செய். அவர்களை சில ஜபம், கீர்த்தனை, தியானம், கீதைபாராயணம் செய்யும் படிச் செய். அவர்களை ஆத்மீக நாட் குறிப்புப் புத்தகத்தையும் லிகித ஜப நோட்டுப்புத்தகத்தையும் எழுதச் செய். உனக்கு போதிய அளவு அதில் நம்பிக்கை ஏற்படாத அல்லது அறிந்து கொள்ளாமல் கூட இருக்கும் சில அபூர்வ வஸ்துக்களும், ஞானமும் திறமைகளும் உன்னிடம் இருக்கின்றன. உன்னிடம் மறைந்து கிடக்கும் அந்த சக்திகளை வெளிப்படுத்து. உன்னிடம் இருப்பவற்றைக் கொடு. உலகம் பயனடையும். உன் சொந்த இடத்தில் ஒரு கோஷ்டியை ஏற்படுத்து. அதேபோன்று நடவடிக்கைகளை நகரின் மற்ற பகுதிகளிலும் ஆரம்பித்து வை. நிலைதடுமாருதே, நம்பிக்கையுடனிரு. நீ அதிசயங்களைச்செய்யலாம். ஆனந்தத்தையும் அமைதியையும் ஜொலிக்கச்செய். ஒரு தீர்மானமான வழியில் வேலையைக் கொள். கொஞ்சம் வேலை செய். இது போதுமானது. நீ நேரத்தை நன்ருக உபயோகமாக செலவிடமுடியும். புஷ்பம் மலரட்டும். ஈக்கள் தாஞகவே வந்தடையும். அதிக முயற்சி தேவையில்லை. முயற்சி அவசியமில்லை. பொத்தானை அழுத்திஞல் போதும். அது பாயும். நான் உனக்கு வெற்றியும், சுதந்தரமும், பூர்ணத்துவமும் வேண்டுகிறேன்.

திறந்த வெளியில் பொறுக்கியெடுத்த நண்பர்களுடன் தியானம் செய். கோஷ்டி யோகாசனப் பயிற்சிக்கு ஏற்பாடு செய். 5 நிமிடங்கள் ஓம்

என்ற பிரணவத்திலோ அல்லது ஏதாவது ஒரு இறைவனுடைய படத்திலோ த்ராடக் பயிற்சி செய். ஏகாதசி நாட்களில் விரதமோ அல்லது பழாகாரமோ புகுத்து. பல்வேறு சக்கரங்களைப் பற்றி பாடங்கள் கொடு.

முதல்நாள் இரவு பாடங்களைத் தயார் செய். ஒரு முகப்படுத்தி கருத்துக்களைச் சேர். அவற்றை ஒரு காகிதத்திலோ அல்லது நோட்டுப் புத்தகத் திலோ பதிவு செய். உன்னால் பிரசங்கம் செய்ய முடியவில்லையென்றால் ஒரு காகிதத்தைப்படி. மெதுவாகப் பேசு. இலேசான கும்பகம், ஜபம் இவற்றின்மூலம் உன்னை மறுசக்தியூட்டிக்கொள். நல்ல சத்துள்ள ஆகாரத்தையும் பழங்களையும் எடுத்துக் கொள்.

உன்னால் அழகான சொற்பொழிவாற்ற இயலவில்லையானால் ஒரு கட்டுரையை எழுதி அந்தக் காகிதத்தை அழுத்தம் திருத்தமாக உள்ளத்தின் அடித்தளத்தின் பெரும்சக்தியுடன் படித்துக்காட்டு மெதுவாக நீ வாக்கு வன்மையைப்பெறுவாய். நீ நல்ல ஆர்வமுள்ள (தாகமுள்ள) ஆத்மாக்களை சந்திக்கும்பொழுது அவர்களுக்கு நல்ல கருத்துக் களைக் கொடுத்து அவர்களுடைய ஊர்களில் இது போன்ற, கோஷ்டிகளை ஏற்படுத்தும்படிச் சொல். அது உன்னுடைய எதிர்கால வேலையை சுலப மாக்கும். நீ யார் யாருடன் தொடர்பு கொள் கிறாயோ அவர்கள் ஒவ்வொருவரையும் கீதையிலி ருந்து தினசரி சில ஸ்லோகங்களைப்படிக்கும்படியும் காயத்ரி மந்திரத்தைத் திருப்பிச் சொல்லும்படியும் சொல். பலருக்கும் தீக்ஷை கொடு. மந்திரம், ஜபம் இவற்றின் உபயோகத்தைப் புகழ். ஜபத் திற்கு மாலைகளைப் புகுத்து.

## 3. ஆத்மீக சக்தியை உயிரோடு வைத்திருக்க வேண்டும்

நான் கிளைகளின் நடவடிக்கைகளை ஜாக்கிரதையாக கவனித்து அவைகளுக்கு அவ்வப்போது ஊக்கமும் உற்சாகமும் தொடர்ந்து ஊட்டி வருகிறேன். நான் திறமை வாய்ந்த கைதேர்ந்த சாதகர்களை கிளைகளினுடைய நடவடிக்கைகளை மேற்கொண்டும் துரிதப்படுத்தவும் அந்த மின்னோட்டத்தை உயிருடன் வைத்திருக்கவும் அனுப்பி வைக்கிறேன்.

கேந்திரம் இப்பொழுது எப்படி இருக்கிறது? இறந்து விட்டதா அல்லது திணறிக்கொண்டிருக்கிறதா அல்லது உயிர் நிரம்பி இருக்கிறதா? எல்லா உயர்நிலைப் பள்ளிகளின் தலைமையாசிரியர்களையும் அணுகி யோகாசனப் படக்காட்சிக்கு ஏற்பாடு செய்யவும். நான் என்னுடைய யாத்திரையின்போது இவ்வேலையை பஞ்சாப், உ. பி. யிலுள்ள எல்லா பள்ளிகளிலும் செய்தேன். எனக்கு அவ்வப்போது உங்களுடைய நடவடிக்கைகளைப்பற்றி ஒரு அறிக்கை தயவுசெய்து அனுப்பவும். பொய்யான சமாதானங்களை ஒருபோதும் சொல்ல வேண்டாம். தன்னம்பிக்கை இழந்து இருக்க வேண்டாம். திண்ணைப் பேச்சு வேதாந்தியாக ஆகிவிடவேண்டாம். நீ பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் செய்யும் வேலையின் மூலமாக ஆத்மீக சம்ஸ்காரங்கள் ஆயிரக்கணக்கான உள்ளங்களில் பதிய வைக்கப்படுகின்றன. சமயம் வரும்போது அது வெடித்துத் தெறிக்கும்.

தைரியமாக இரு. எம். ஏ. க்களும், நீதிபதிகளும், ரண வைத்தியர்களும்கூட உலகாயதமாகத்தான் இருக்கிறார்கள். உணர்ச்சிவசப்பட்டவர்

களுக்கு முன்பு நீ ஒரு அவதாரம் ஆவாய். தைரியத்துடன் இரு. பெருந்தன்மையாக, பணிவாக, மனப்பூர்வமாகப் பேசு. நீ அவையோர்களை மின் சக்தி பாய்ச்சி வாயடைக்க வைக்க முடியும். மேடையின் மீது பலம் பொருந்திய வேற்றுருவத்தைக் கொள். அக்னியை, ஆர்வத்தை, உற்சாகத்தை உன்னுடைய பேச்சுக்களில் வீசி எறி. எந்த சந்தர்ப்பத்தையும் நழுவ விடாதே. இப்பொழுது நீ என்ன செய்து கொண்டிருக்கிறாயோ அது இவ்வுலகத்தை உயர்த்தப் போதுமானது. இவ்வேலையைச் செய்ய பண்டிதராகும் வரை காத்திருக்க வேண்டாம்.

நீ சென்றிருந்து, சலனப்படங்களைக் காட்டிய பல கிளைகளிலிருந்தும் எண்ணற்ற புகழ் மாலைகளுடன் பல கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. இதற்கு முன் யாரும் இதுபோன்றதொரு வேலையை செய்ததில்லை. இது அபூர்வமானதாகும். வேலைப் பளு சிரமத்தைக் கொடுக்கும்பொழுது நீ உன்னை உன்னுடைய அறையில் ஒளித்துக்கொள், அல்லது மாற்றத்திற்காக ஏகாந்தமானதொரு இடத்திற்குச் சென்றுவிடு. தனிமையில் மௌன தியானத்தின் மூலமாக மின்கலத்திற்கு புதுசக்தியூட்டிக்கொண்டு இரட்டை சக்தியுடன் வெளியில் வா. உன் சக்தியை ஒழுங்குபடுத்து. எல்லாவற்றையும் ஒரேயடியாகக் கொட்டிவிடாதே. போதிய ஓய்வு எடுத்துக்கொள். உடலிற்கு ஓய்வு கொடுக்கக் கற்றுக்கொள். உன்னை மறைத்துக்கொள்.

## 4. தியானத்தைவிட சேவையே பெரிது

இப்பொழுது நீ செய்துவரும் வேலையானது இக்காலத்திய வேதாந்திகளால் செய்யப்பட்டுவரும் முக்கியமான தியானம் (தூக்கமும் ஆகாயக்

கோட்டை கட்டுதலும் சேர்ந்தது) என்று சொல்லப் படுகிறதைக் காட்டிலும் பெரியதொரு யோக மாகும். இது ஒரு பெரிய யக்ஞம். சிங்கத்தைப் போல் வேலை செய். சிங்கத்தைப்போல் கர்ஜனை செய். பல கேந்திரங்களில் நீ செய்திருக்கும் வேலைகளுக்கு எனது வாழ்த்துக்கள். இவை யாவும் அவன் அருளே. இதை உணர். அவனுடைய விருப்பமே உன்னுடைய உள்ளம், அறிவு, உடல் மூலமாக வேலைசெய்திருக்கிறது. எப்பொழுதும் அவனுக்கு நன்றியுள்ளவனுக இரு. அவனுடைய ஆசிக்காகவும் கருணைக்காகவும் பிரார்த்தி. உனக்கு பக்தர்களாலும், ஆதரவாளர் களாலும் ஏதாவது கொடுக்கப்பட்டால் நீ அவற்றை வீணை வைராக்ய உணர்வோடு மறுத்து விடவேண்டாம். வேலை செய்யவும், நோயுற் ருேருக்கு மருந்து வாங்கவும், வெளியீட்டு வேலைக்கும் பணம் தேவைப்படுகிறது. மஹா தியாகியாகவும் மஹா போகியாகவும் ஆகு. ஓய்வெடுத்துக்கொள். அதிக வேலை செய்யாதே. உன் சக்தியை ஒழுங்குபடுத்து. ஏராளமான ஓஜோன் ($O_3$ பிராணவாயுவை குடி; உள்ளுக்கு இழு. (உட் சுவாசி). மக்களுடன் கலக்காதே. முக்கிய மான விஷயங்களில் மட்டும் சிறிதளவு பேசு. நீ கடினமாக உழைப்பதால் உனது ஆரோக்கியத்தை மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக்கொள். ஏராளமாக பால், பழங்கள், பாதாம் இவைகளை எடுத்துக்கொள். ஒரு வாரம் ஓய்வு எடுத்துக்கொள். ஓய்வு என்ருல் வேலை மாற்றமே தவிர தூங்கிக் கொண்டும் உதவாக்கரை நண்பர்களோடு நேரத்தை வீணுக்கிக்கொண்டும் அல்லது நோக்கமின்றி அலைந்து கொண்டிருப்பதோ அல்ல.

மக்களுக்கு மனப்பூர்வமாக, விருப்பத்தோடு, களைப்பில்லாமல், முணுமுணுக்காமல், அசாதாரண

மான ஞாயிற்றுக்கிழமை விளக்கெண்ணெய் குடித்த முகத்தைக்காட்டாமலும் சேவை செய். இது சற்று சிரமம். உன்னால் முடிந்தவரை முயற்சி செய். பிறகு அது தூய்மையான யோகமாகும். நீ தியானிக்க வேண்டியதில்லை. நீ ஜபம் செய்ய வேண்டியதில்லை. பிராணாயாமத்திற்கு நாசித் துவாரங்களை மூட வேண்டியதில்லை. ஒவ்வொரு சைகையையும், ஒவ்வொரு மூச்சையும், ஒவ்வொரு அங்க அசைவையும் மேற்கூறியபடி தூய யோகமாக மாற்று. இது இறைவனுக்குச் செய்யும் சேவையாகும். நீ அவனுக்காகவே வேலை செய்கிறாய், வாழ்கிறாய், சுவாசிக்கிறாய். இந்த பாவத்தை மனதிலிருத்து. உனக்கு விரைவில் சமாதி கிட்டும். இந்தக் கருத்தை ஞாபகத்தில் வை வேலையே வழிபாடு. வேலையே தியானம். இதை மறக்காதே. நீ வேலை, தியானம் இவற்றின்மூலம் பரிணமிக்க வேண்டியிருக்கிறது. சரியான பாவத்துடன் செய்யும்போது தெருக்கூட்டுவதும் யோகமே. நீ செய்ய வேண்டிய முதல் வேலை உன்னுடைய தலையை மூத்தவர்கள், ஸ்வாமிகள் ஆஸ்ரமத்திலுள்ள ஒவ்வொருவருடைய, (தெருக்கூட்டுபவனானாலும் சரி, ஜமீன்தாராக இருப்பினும் சரி,) பாதங்களில் வைத்துவிட வேண்டும். ஒருமையை உணர். உற்சாகமாக இரு. அனுசரித்துச் செல். இன்னல்களையும் அவமானங்களையும் தாங்கிக் கொள். மனதை எல்லாச் சூழ்நிலைகளிலும் எல்லா இடங்களிலும் ஒரே சீராக வைத்திருக்கப் பயிற்சி செய். அப்பொழுதுதான் நீ உண்மையாகவே பலசாலியாக இருக்க முடியும்.

## 5. சம்பூர்ண யோகம்

நான் ஒரு பக்க வளர்ச்சியை ஊக்குவிப்பதில்லை. ஆனால் எனது மாணாக்கர்களை யோகத்தின் முக்கியமான பிரிவுகளைச் சேர்த்து குறிப்பாக சக்தி

பொருந்திய தன்னலமற்ற சேவை, நற்குணங்களை வளர்த்தல், ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் அளித்து ஊக்குவித்த போதிலும் சாதகனுக்கு தனிப்பட்ட அபிப்பிராயத்திற்கும் முழு வாய்ப்பையும் கொடுப்ப துண்டு.

நான் உன்னை பட்டணங்களில் தங்கியிருக்க வற்புறுத்தவில்லை. உன்னுடைய ஆரோக்கியமும் ஆத்மீக முன்னேற்றமும் மிகவும் முக்கியம். நீ இவ்வளவு குறுகிய காலத்தில் உருப்படியான வேலையை எப்படி செய்திருக்கிறாய் என்பதைப்பார். நீ இன்னும் தெம்புடன் இருந்தால், நீ இந்த வேலையை மேற்கொண்டும் சிரமமில்லாமல் செய்ய முடியுமென்று எண்ணினால் நீ அங்கு இன்னும் சில காலம் தங்கியிருக்கலாம். இல்லாவிடில் நகர வாழ்க்கைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிடலாம். இது உன் கைகளில் இருக்கிறது.

நீ இம்மாதக் கடைசியில் வரலாம். நகரங் களில் நீண்ட நாட்கள் தங்க வேண்டாம். இது உன்னுடைய நன்மைக்கும், முன்னேற்றத்திற்கும் ஊறு விளைவிக்கும். உனக்கு இப்பொழுது தனிமை தேவை. நீண்ட காலம் படிப்பிலும் செலவிடு. உன்னுடைய தற்போதைய அறிவு குறுகியிருக்கிறது. உன்னுடைய உட்குணமும் புதுப்பிக்கப்படவில்லை. சாதனை தேவைப்படுகிறது. இப்பொழுது உனக்கு மின்கலத்திற்கு புதுசக்தி யூட்டவும், சக்தி பொருந்திய வேலையை இரட்டை மடங்கு உற்சாகத் துடனும், சக்தியுடனும் செய்யவும், இமயமலை—கங்கைப் பிரதேச சூழ்நிலையில் ஓய்வும், அமைதி யான வாழ்க்கையும் தேவை. நீண்ட நாள் நகர வாசம் தனிப்பட்ட இடங்களுக்கு அடிக்கடி செல்வதைத் தொடர்ந்து இருக்கவேண்டும். அது உனக்கு லாபம் பயக்கும். தயவு செய்து அவசியம்

வந்து இங்கு நீண்ட நாட்கள் தங்கியிரு. பறக்கும் விஜயங்களால் அவ்வளவு பயனில்லே.

நீ ஆசீர்வதிக்கப்பட்டவன். கடவுள் இருக்கிருர். கடவுள் ஒவ்வொரு பொருளிலும் ஊடுருவி வசிக்கிருர். கடவுள்தான் அந்தரங்க ஆட்சியாளன். கடவுள் உணரப்பட வேண்டும். தர்மம் கடவுட் பார்வைக்கு அழைத்துச் செல்கிறது. நன்மை கடவுளிடம் அழைத்துச் செல்கிறது. அன்பு கடவுளிடம் அழைத்துச் செல்கிறது. அழியாததும், உன்னுடைய உள்ளுக்கு உள்ளே உள்ள ஆத்மாவை தியானி. சாதனேயை விடாமல் செய்துகொண்டிரு. சாதனே, தியானம் ஆகியவற்றில் குதி. அமைதியில் நுழை. கடவுட்பிழம்பாக ஆகு. அழியாப் பேரானந்தத்தை தெய்வ நெறியின் மூலம் அடை. எவன் மற்றவர்கள் சேவைக்காக வாழ்கிருனே அவன் மிகவும் மகிழ்வுடனிருக்கிருன். அவன் ஆசீர்வதிக்கப்பட்டவன். அவன் இறையுணர்வை அடைகிருன். சேவை உள்ளத்தைத் தூய்மைப் படுத்தி இறை ஒளியை கொடுக்கிறது. ஆத்மாவில் ஊன்றியிரு. இது உண்மையான சாதனே. உன்னுடைய பிறப்புரிமையை, தட்டெழுத்து, புத்தகப்பிரசுரம், கட்டுரை எழுதுதல் இவற்றிற்கு மத்தியிலிருந்துகொண்டே அடை. இது ஒரு குகை வாழ்க்கையைவிட மேலானது. இது பலம் பொருந்திய சம்பூர்ண யோகமாகும். நீ நகரத்தி லிருந்த போதிலும் இமயமலேயிலுள்ள இந்த ஆஸ்ரமத்திலிருப்பதாக உணர். இது யோகம். இது ஸ்ரீசுகனுக்கு ஜனகன் வைத்த பரீட்சை.

## 6. வேலேக்கு நாளுவித முறையையும் பயன்படுத்துதல்

நான் எனது மாளுக்கர்களே என்னேப்போலவே அவர்களே நாளுவித முறையிலும் இறைவனுடைய

செய்தியைப் பரப்புவதிலும் அவர்களிடம் தெய்வீக குணங்களை வளர்த்துக்கொள்ளவும் அவற்றை மற்றவர்களிடம் வளரச் செய்யவும் ஈடுபடுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

நீ போகுமிடமெல்லாம் உன்னுடைய அபிப் பிராயங்களை, கருத்துக்களை, கொள்கைகளை கொடு, விநியோகம் செய், பரப்பு. உன்னுடைய ஆத்மீக உணர்ச்சிகளை ஒலிபரப்பு. மற்றவர்களுடன் பகிர்ந்துகொள். எப்பொழுதும் கொடு, கொடு, கொடுத்துக்கொண்டே இரு. எல்லாவற்றையும் கொடுத்துவிடு. ஒன்றையும் கேட்காதே. உன் னுடைய வழக்கமான தியானம், படிப்பு நிலைக்கச் செய்யவேண்டும். பிரம்மன் மட்டுமே உண்மை. இந்திரியங்களைக் கழித்தால் நீ பிரம்மன் ஆவாய். ''தத் த்வம் அஸி''. நான் இந்த மூன்று கருத்துக் களையும் திரும்பத் திரும்பச் சொல்வதில் சலிப்படை வதில்லை. அவைகள் உன்னுடைய நரம்புகள், கண்ணறைகள், இரத்தம், எலும்பு இவைகளினூடே நுழைய வேண்டும். இக்கருத்துக்களை எல்லோருடைய உள்ளத்திலும் பக்தியுடனும், நிஷ்காம்ய கர்மத்துடனும் அடித்துப் பதிய வை. இந்த மூன்று கருத்துக்களையும் உன்னுடைய சித்த மாகிய ஜேபியில் சுமந்து செல். இவ்வுலகம், உடல் ஆகியவை ஆழமற்றவை, ஜாலம், ஸ்வப்னம்.

ஆயிரக்கணக்கானவருக்கு ஆசனம் சொல்லிக் கொடு. என்னுடைய பிரம்மச்சர்யத்தைப் பற்றிய கட்டுரைகளை எல்லா பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், ஆசன, பிராணயாம செய்கையுடன் படித்துக் காட்டு. 5 அல்லது 10 நிமிட மௌன தியானத்திற்குப் பிறகு கீர்த்தனமும் ஓம் பிரணவ உச்சாடனமும் இருக்கட்டும்.

அங்கத்தினர்களுக்கு யோக, வேதாந்த வார்த்தைகளை விளக்கு. நகர் முழுதும் ஆத்மீக அலைகளால் சக்தியூட்டப்பெறும். நான் எழுதியுள்ள புத்தகங்களை சிறிதளவு யோகப் பத விளக்கத்துடன் படித்தால் அதுவே உனது யோக வகுப்பாக அமையும். நான் கீழ்க்கண்டவைகளைப் பற்றி உனக்கு ஞாபகமூட்டவேண்டி இருக்கிறது :—

(அ) எத்தனை ஆயிரம் முடியுமோ அத்தனை ஆயிரம் மாணவர்களுக்கு மந்திர தீட்சை கொடுத்தல்.

(ஆ) ஜபமாலையைப் புகுத்தல்.

(இ) இரவில் கீர்த்தனையும் பஜனையும்.

(ஈ) கீதா, ஆத்மபோதம், விவேகசூடாமணி உபநிஷத்துக்கள் பாராயணம்.

(உ) இலவச விநியோகத்திற்கு சில துண்டுப் பிரசுரங்கள் அச்சிடுதல்.

ஏகாதசி நாட்களில் ஒரு பெரிய மண்டபத்திலோ, அல்லது கோவிலிலோ பெரிய அளவு ஹரி கீர்த்தனைக்கு ஏற்பாடு செய். பேரறிஞர்களைக் கொண்டு சிறு சொற்பொழிவு நிகழ்ச்சிகளை ஏற்படுத்து. முடிவில் பிரசாதம் வழங்கு. ஏழுநாட்களுக்கு முன்னதாகவே தேவையான ஏற்பாடுகளைச் செய். உலகை பிரமிக்க வை. இது நீ செல்லுமிடமெல்லாம் ஒரு முக்கியமான, புனிதமான வேலையாகும். உன்னால் இதைச் செய்ய முடியும். நான் அறிவேன்.

நீ உண்மையிலேயே அதிசயிக்கத்தக்க வேலையைச் செய்து கொண்டிருக்கிறாய். இவ்விதமான ஜபம், கீர்த்தனம், யோகாசனங்கள், படிப்பு,

சொற்பொழிவு ஆகியவற்றின் கலவையே தேவைப் படுகிறது. உன்னுடைய ஜேபியில் குறிப்புப் புத்தகம் ஒன்றை வைத்துக்கொள். நீ கவனிக்க வேண்டிய எல்லா வேலைகளையும் குறித்து வைத்துக் கொள். இம்மாதிரி வேலையால் நீயே முன்னேறு வாய். நீ சிந்தனுசக்தியை வளர்த்துக் கொள்வாய். நீ இயற்கையன்னையை, அவளுடைய வழிகளை அறிவாய். மனது பூரணமாக ஈடுபடுத்தப்பட்டி ருக்கும்போது நீ இன்னும் அதிகமாக ஏகாக்கிர சக்தியுடனிருப்பாய். ஏதாவது ஒரு வகையான மதச்சடங்குகளைச் செய்யும்படி ஆயிரக்கணக்கான வர்கள் ஊக்குவிக்கப்படுவர், இவையனைத்தும் உனக்கு உள்ளத்தூய்மைப் படுத்துதலும் யோகமு மாகும்.

நீ உண்மையான, அமைதியான, உருப்படி யான வேலையை தனித்தனி நபருடன் பேசுவதன் மூலம் செய்ய முடியும். இது உன்னைத் தயார் செய்து கொள்ளவும், அறிவு விளக்கம் பெறவும் ஒரு களமாகும். நகரத்தின் பல்வேறு பகுதிகளில் வேலை எடுத்து செய்யப்பட வேண்டும். இது குருட்டு வேலையல்ல. இது வியாபாரமல்ல. இது உன்னுடைய உடல், உள்ளம் இவற்றின் மூலமாகச் செய்யப்படும் அவன் வேலை. ஐந்து வருஷத்தளவில் நீ பேராசிரியர்கள், கீர்த்தி வாய்ந்த மதாசாரி யார்கள், பலரையும் மிஞ்சிவிட முடியும், நீ மனப் பூர்வமாகவும், உறுதியான சக்தி பொருந்திய வேலையைச் செய்து வந்தால்.

---

# அத்தியாயம் ஆறு

# சிவானந்த ஆஸ்ரமம்

## ஆத்மீக ஸ்தாபனங்களின் பிரச்சனைகள்

உயர்ந்த நோக்கங்களும் கொள்கைகளும் கொண்டுள்ள ஆத்மீக ஸ்தாபனங்கள் முற்றிலும் சுதந்தரமான, பூரணத்துவமடைந்த, தன்னலமற்ற மஹாத்மாக்களால்தான் ஆரம்பிக்கப்படவேண்டும். மத ஸ்தாபனங்கள் சுயநலவாதிகளால் ஆரம்பிக்கப் பட்டால் அவைகள் யுத்த கேந்திரங்களாகவும், சமூகத்திற்கு ஒரு அதட்டலாகவும் ஆவதுடன் அதில் வேலை செய்வோருடன் தொடர்பு கொண் டுள்ளோருக்கு அழிவையும் கொண்டு சேர்க்கும். நாளடைவில் சரியாக நிர்வகிக்கப்படாத ஸ்தாபனங்கள், ஆஸ்ரமங்கள் மூலமாக ஜனங்கள் கடவுளிடமும் மதத்திலும் நம்பிக்கை இழந்து எல்லா மகாத்மாக்களையும் வேஷதாரிகள் என்று தூற்ற ஆரம்பிக்கின்றனர். சில சமயங்களில் சுய நலவாதிகள் ஆத்மீக ஸ்தாபனங்களை வியாபார ஸ்தலங்களாக ஆரம்பிக்கின்றனர். அவர்கள் ஜனங்களை தவறான வழிக்கு அழைத்துச் செல்கின்றனர்.

ஆத்மானுபூதியடைந்த ஒருவரால் முதலில் உயர்ந்த கொள்கைகளோடும், நோக்கங்களோடும் ஆரம்பிக்கப்பட்ட ஆஸ்ரமம்கூட, பின்னால் பணம் சேர்க்கும் நோக்கங்களால் கெடுக்கப்பட்டு விடுகிறது. ஸ்தாபகர்களுக்கு மனித வர்கத்திற்குச் சேவை செய்யக்கூடிய அசாதாரண திறமை இருக்க வேண்டும். அப்பொழுதுதான் எல்லா சமயங் களிலும் உண்மையான சேவை செய்ய முடியும். இல்லறத்தார்களிடம் ஊக்கமும் சிரத்தையும்

குறைந்தால் ஒழுங்காக வேலையை நடத்திச் செல்வது கஷ்டமாகிவிடுகிறது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக திறமையும் பக்தியும் பொருந்திய சேவையாளர்களைப் பெறுவது அரிதிலும் அரிது. இந்நாட்களில் அபிலாஷிகள் தன்னலமற்ற சேவையின் மதிப்பை அவ்வளவாகப் பாராட்டுவதில்லை. ஆஸ்ரமங்களில் பல திறமையான சேவையாளர்கள் இல்லாத காரணத்தால் அவதிப்படுகின்றன.

## இந்த ஆஸ்ரமம் தானாகவே வளர்ந்தது

நான் ஒரு ஆஸ்ரமத்தை ஆரம்பிப்பது பற்றி ஒருபோதும் எண்ணவே கிடையாது மாணாக்கர்கள், பக்தர்கள் ஆகியோரின் பெருங்கூட்டம் என்னிடம் ஆத்மீக வழிக்காக, வந்தபொழுது அவர்களுக்கு உதவி செய்யவும், அவர்களை உலகிற்குப் பயன்படும்படிச் செய்யவும் கருதி அவர்களுடைய பரிணாமத்திற்காகவும், பொதுஜன நன்மைக்காகவும், சில சேவா மார்க்கங்களை ஏற்படுத்தி அவர்களுடைய படிப்பிலும், அவர்களுடைய சாதனையிலும் அதிகம் ஊக்குவித்து அவர்களுடைய இருக்கைக்கும், உணவுக்கும் தேவையான வசதிகளையும் சௌகரியங்களையும் எனது சொந்த உபயோகத்திற்காக சில ஆதரவாளர்களிடமிருந்து பெற்ற நன்கொடைகளை உபயோகித்து செய்து கொடுத்தேன். இவ்வாறாக நாளடைவில், என்னைச் சுற்றிலும் ஒரு பெரிய ஆஸ்ரமும்—பிடித்தமான சூழ்நிலையில் ஒரு எடுத்துக்காட்டான ஸ்தாபனமும்-ஒரு பெரிய ஆத்மீகக் குடியேற்றம்—சிவானந்த நகர் இருப்பதைக் கண்டேன்.

நான் பெரும் திட்டங்கள் அல்லது யோசனைகள் செய்து வேலை செய்யவில்லை. நான் எந்த ஒரு பெரிய மனிதரையோ அல்லது மஹாராஜாவையோ

அணுகி பணம் கேட்கவில்லை. இங்கு சரியான வழியில் செய்யும் சேவையை உலகம் பாராட்டியது. தெய்வீக வழியிலிருந்து ஒரு சிறு உதவி வந்தது; நான் அதன் ஒவ்வொரு காசையும் உலகிற்கு உச்ச அளவு ஆத்மீக நன்மையைக் கொண்டு வருவதற்காக ஜாக்கிரதையாகப் பயன் படுத்தினேன். ஆண்டுதோறும் அரண்மனை போன்ற பெரும் கட்டிடங்கள் முளைத்துக்கொண்டிருந்த போதிலும் ஆஸ்ரம வாசிகளுக்கும் இடைவிடாது வந்து போய்க் கொண்டிருப்பவர்களுக்கும் இடவசதி பற்றுக்குறை இருந்தவண்ணமிருக்கிறது. ஒவ்வொரு படியிலும் அபாரமான அபிவிருத்தி வேலை இருந்து வந்தது. பல சந்தர்ப்பங்களில் பக்தர்கள் என்னை பணம் திரட்டுவதற்காக பிரச்சார யாத்திரையை மேற்கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். அது என்னால் முடியாததாயிருந்தது. நான் எல்லோருக்கும் கொடுப்பதிலும் சேவை செய்வதிலும் ஆனந்தத்தைப் பெறுகிறேன். 1940ல் பஞ்சாபில் பரந்த அளவில் யாத்திரை செய்வதற்கான பிரமாதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. நான் உடனே ஒரு தந்தி கொடுத்து அந்நிகழ்ச்சியை ரத்து செய்து விட்டேன். அந்த தந்திச் செய்தி நான் எந்த முறையில் ஆஸ்ரம வேலைகளை நிர்வகித்து வந்தேன் என்பதை எடுத்துக் கூறும் :—

''தெய்வ நெறிக்கழகம் வளருகிறதோ இல்லையோ; அதைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை. இறைவனின் கருணை இதுவானால், நாம் நமது சாதனையையும் சேவையையும் நேரான வழியிலும், பாவத்துடனும், சிரத்தையுடனும் தொடர்ந்து செய்து வருவோமாகில் தெய்வீக வழியில் உதவி கிட்டித்தீர வேண்டும். கங்கை நதிக்கரையில் உள்ள என்னுடைய சொந்த குடீருக்குள்ளிருந்து கொண்டே எவ்வளவு முடியுமோ அவ்வளவு நான்

செய்யக்கடவேனுக. தேனுள்ள இடத்திற்கு ஈக்கள் தாஞகவே வரும். பணத்தாசையை ஈவிரக்கமின்றி ஒதுக்கித்தள்ளுங்கள்''.

குறுகிய காலத்தில் வேலே வளர்ச்சியடைந்தது. யோகம், பக்தி, வேதாந்தம், ஆரோக்கியம் இவைகளேப்பற்றி இப்பொழுது முறையான வகுப்புக்கள் நடத்தப்பட்டு வருகின்றன. இன்று 300 மாணுக்கர்கள் எனக்குப் பக்கத்தில் சகல சுக சௌகரியங்களுடன் இருந்து கொண்டு யோக வழியில் சென்று கொண்டு, பல்வேறு வகைகளில் உலகிற்குச் சேவை செய்துகொண்டு இருக்கின்றனர். இறைவனின் பெருமை பெருகுக. அபிலாஷிகள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். பல்வேறு மதங்களேச் சார்ந்த மாணுக்கர்கள் பல்வேறு தேசங்களிலிருந்து வந்து, என்னுடன் வாரக்கணக்கிலும் மாதக் கணக்கிலும் தங்கியிருக்கின்றனர். இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும் பக்தர்கள் அடிக்கடி ஆஸ்ரமத்திற்கு வந்து கூட்டு சாதனேயிலும் சத்சங் கத்திலும் கலந்து கொள்கின்றனர்.

## அங்கு ஒவ்வொருவருக்கும் வரவேற்புண்டு

வேதங்களில் முதல்தர சாதகனுக்கு யோக்கிய தாம்சங்களாக விவேகம், வைராக்யம், ஷட்சம்பத்து முமுக்ஷுத்துவம் ஆகியவைகள் சொல்லப்பட்டிருக் கின்றன. சில வைதீக மதக்கிளேகள் ஜாதிக்கட்டுப் பாடுகளே வைத்துக்கொண்டு மாணுக்கர்களே வாழ்க் கையின் நான்கு படிகளேயும், அதாவது, பிரம்மச் சர்யம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் கடந்து வரும்படி வற்புறுத்துகின்றன. என்னிடம் மாணுக்கர்கள் வரும்போது நான் அவர்களுடைய யோக்கியதாம்சம், அந்தஸ்து, தாய் தந்தையர் வழி, ஜாதி அல்லது திறமை ஆகிய எதைப்பற்றியும்

ஒன்றும் விசாரிப்பதில்லை. நான் திருடர்களையும், போக்கிரிகளையும், இளவயதுடையோர்களையும், நோயுற்றோரையும், முதியோரையும் கூட வரவேற்கிறேன். அவர்கள் எல்லோரும், சாதுக்கள், சந்நியாசிகளின் கூட்டத்தில் சேரும் பொழுது அல்லது அதிசயிக்கத்தக்க ஆத்மீக அலைகளால் நிரப்பப்பட்டிருக்கும் ஒரு இடத்தில் தங்க அனுமதிக்கப்படும்பொழுது சக்தி பொருந்திய யோகிகளாகத் திகழ்வர் என்பதை நான் மிக நன்றாக அறிந்திருக்கிறேன்.

## பூர்ண சுதந்தரம்

ஆஸ்ரமத்தின் ஆத்மீக அலைகளுக்கு யோகப் பாதையில் உள்ளவர்களை உருவாக்குவதில் மாபெரும் நன்மையாக்கும் சக்தி இருக்கின்றன. ஆயிரமாயிரம் பேர் இதை உணர்ந்திருக்கின்றனர். நான் ஆஸ்ரமத்தில் தங்க விரும்பும் அபிலாஷிகள் மீது எந்த விதமான சட்டதிட்டங்களோ, கட்டுப்பாடுகளோ விதிப்பதில்லை. எத்தனை பேர்கள் வேண்டுமானாலும், அவர்கள் விரும்புகின்றபடி எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்குவதோடு அவர்கள் எந்த வினாடி வெளியேபோக விரும்பினாலும் அப்பொழுதே போய்விடலாம். நான் அவர்களிடமிருந்து எந்த வேலையோ, சேவையோ, உதவியோ கேட்பதில்லை. நான் அவர்களுடைய சொந்த படிப்பையும் சாதனையையும் தொடர்ந்து செய்து கொண்டிருக்க அனுமதிப்பதுடன் அவர்களுக்கு முடிந்தவரையில் எல்லா வகையிலும் உதவியும் செய்கிறேன்.

தங்களுடைய சொந்த பரிணாமத்திற்காக தன்னலமற்ற சேவையை விரும்பும் ஆழ்ந்த பக்தியுள்ள சாதகர்கள் அவர்களுடைய நேரம்

முழுவதையும் பயனுள்ள வேலைகளைச் செய்வதிலும், கழகத்தின் நடவடிக்கைகளை ஒழுங்காக நிர்வகித்துச் செல்வதிலும் செலவழிக்கிறார்கள். இவையாவும் அவர்களுக்கு யோகமே. அவர்கள் அனைவரும் யோக ப்ரஷ்ட்டர்களே. உலகிற்கு கண்கண்ட மாதிரிகளும் எடுத்துக்காட்டுகளுமாவர். ஆயிரக் கணக்கான அபிலாஷிகள் ஆஸ்ரமத்திற்கு வந்திருக் கிறார்கள். பல நூறு பேர்கள் தனிமையாக கடுமை யான சாதனை செய்யவோ அல்லது நகரங்களில் சக்தி பொருந்திய வேலைகளைச் செய்யவோ நல்ல பயிற்சி பெற்று வெளியே சென்றிருக்கின்றனர். இருந்தபோதிலும் ஆஸ்ரமம் எப்பொழுதும் நிரம்பிய வண்ணமாகத்தான் இருக்கிறது. நாள் தோறும் குறைந்தது உயர்ந்த படிப்பாளிகள் ஒரு டஜன் பேர்களாவது ஆஸ்ரமத்தில் தங்கியிருக்க அனுமதி வேண்டி நிற்கின்றனர். மாணுக்கர்கள் சத்சங்கத்தில் கலந்துகொள்வதன் மூலமும், புனித கங்கையில் நீராடுவதன் மூலமும் யாரும் புரிந்து கொள்ள முடியாத வகையில் உதவி செய்யப் படுகிறார்கள். சில வேலைகள் மூலமாக அவர்கள் அனைவரும் என்னுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு குறுகிய காலத்தில் ஏராளமான விஷயங் களை கற்றுக் கொள்கின்றனர். சீக்கிரமாக அதிக முயற்சியின்றி அவர்கள் சகலவிதமான தெய்வீக குணங்களையும் வளர்த்துக்கொண்டு பெரும் யோகிகளாகத் திகழ்கின்றனர்.

## அதிசயத்திலும் அதிசயம்

மேற்கூறிய சூழ்நிலைகளில் ஒரு எடுத்துக்காட் டான ஆஸ்ரமத்தை எவ்வாறு நடத்தமுடிகிறது? இது பலருக்குப் பெரும் புதிராக இருக்கிறது. இது உலகிற்கு ஒரு அதிசயம்போல் தோன்றுகிறது. மக்கள் திகைக்க வைக்கப்படுகின்றனர். ஆஸ்ரம

காரியதரிசிகளும், நிர்வாகிகளும் லட்சக்கணக்கான ரூபாய் அளவுக்குச் செல்லும் நீண்டதொரு கடன் பட்டியலை எடுத்துக்கொண்டு வந்து அடிக்கடி என்னிடம் காட்டியபோதிலும் நான் இம்மியளவும் கவலைப்படுவதில்லை. இவ்வளவு கடன் இருந்தும் நான் பல்கலைக்கழக அச்சகத்திற்காக பல தானாக இயங்கும் அச்சு இயந்திரங்களையோ அல்லது சமீப காலத்திய மாதிரியில் உயர்ந்த ரக புகைப்படப் பெட்டிகளையோ, பெரிதுபடுத்தும் கருவிகளோ, ஸ்டுடியோவிற்கு சினிமாப்படக் காட்சி கருவிகளோ அல்லது பெரும் மண்டபங்களோ, கோயில்களோ, கங்கைக் கரையில் ஸ்நானகட்டங்கள் கட்டவோ அனுமதி கொடுக்கும்போது மக்களுக்கேற்படும் ஆச்சரியத்திற்கோர் எல்லை காண இயலாது.

மக்கள் அவர்கள் ஜீவியத்திற்குத் தேவையான அளவைவிட அதிகமாக உணவும் வசதிகளும் இங்கே அவர்களுக்கு கிடைப்பதாக புகார் செய்கிறார்கள். ஆஸ்ரமவாசிகள் செல்வமும் சந்தோஷமும் கூடியவர்களாக உணர்கின்றனர். சிலர் சாதாரண கிராம வாசிகள்போல் தோன்றலாம்; ஒரு சிலருக்கு அதிக கல்வி இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனால் ஆஸ்ரமத்தில் வசிக்கும் ஒவ்வொருவரும் அதிசயிக்கத் தக்க மறைத்து வைக்கப்பட்டுள்ள இயற்கைச் சக்திகளும் திறமைகளும் கூடிய ஒரு பெரிய முனிவராக இருப்பதை நான் காண்கிறேன். ஆஸ்ரமத்திற்கு வரும் பிரபலஸ்தர்கள் ஆஸ்ரமவாசிகளிடம் காணப்படும் அபிவிருத்தியைக் கண்டு திகைத்து நிற்கின்றனர். அவர்கள் திறமையை மெச்சுவதுடன் "அன்பார்ந்த ஸ்வாமிஜி மஹராஜ், திறமையுள்ள இத்தனை பேர்களை எப்படிக்கண்டு பிடிக்கிறீர்கள்?" என்று விசாரிக்கவும் செய்கின்றனர்.

ஆஸ்ரமவாசிகளில் யாரையாவது வெளியே செல்லும்படி சொன்ன, அல்லது வெறுப்புணர்ச்சியைக்காட்டிய அல்லது அவரிடம் கடுஞ் சொல்லை உபயோகித்த சம்பவம் ஏதாவது ஒன்று உண்டா? ஒரு குறிப்பிட்ட சாதகன் ஆஸ்ரமத்தின் அமைதிக்கு ஊறு விளைவிக்கின்றான் அல்லது ஸ்தாபனத்தின் அமைதியான வேலையில் குறுக்கிடுகின்றான் என்று மோசமான புகார்கள் என்னிடம் வரும்பொழுது நான் அந்த மனிதனை வெளியில் வேறு தகுதியான இடத்தில் சுதந்தரமாக இருக்கும்படிச் சொல்வேன். நான் அவனுடைய பிரயாணச் செலவுகளுக்குப் போதுமான பணமும், அவனுக்கு உதவி செய்யும் படி பக்தர்களுக்கு ஒரு அறிமுகக் கடிதமும் கொடுத்தனுப்புவேன். அவன் பிரிந்து செல்லுகையில் நான் அவனுக்கு ஆத்மீக உபதேசங்களைக் கொடுத்து அவனுடைய நன்மைக்காகவும் அறிவு விளக்கத்திற்காகவும் பிரார்த்திப்பேன். ஒரு சில நாட்கள் அல்லது வாரங்களில் அம்மனிதன் ஆஸ்ரமமே தன்னுடைய சொந்த இனிமையான வீடாக உணர்ந்து மாறுபட்ட பார்வைக்கோணத்துடனும் உள்ளத்துடனும் திரும்பி வந்துவிடுகிறான். நான் அவனை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். நான் கடந்ததை சுலபத்தில் மறந்து விடுகிறேன். என்னிடம் பழி வாங்கும் குணம் இல்லை. நான் உபயோகமற்றவர்களையும், குற்றமே கண்டு பிடித்துக் கொண்டிருப்பவர்களையும், என்னையே குறை கூறுபவனையும், நிர்வாகத்தை தாக்குபவர்களையும் கூட ஆஸ்ரமத்தில் தங்கியிருக்க அனுமதிக்கிறேன். குறுகிய காலம் தங்கின பிறகு அவர்கள் ஆச்சரியகரமாக மாற்றப்படுகின்றனர். நான் அவர்கள் முகத்தில் சந்தோஷத்தையும் பேரானந்தத்தையும் காண்கிறேன்.

## அபிலாஷிகள் எவ்வாறு கவனிக்கப்பட வேண்டும்?

எனக்கு எல்லா யோக மாணுக்கர்களிடமும் அவர்களுடைய வயது, பால், யோக்கியதாம்சங்கள் திறமைகள் ஆகிய பாகுபாடின்றி, அளவு கடந்த, கட்டுப்படுத்தப்படாத உதார குணமும், அன்பும், பிரேமையும் உண்டு. நான் ஜபம் அல்லது சிறிது தியானம், அல்லது கழகத்திற்கும் நோயாளி களுக்கும், ஏழைகளுக்கும் ஏதாவதொரு வகை சேவை செய்பவர்களிடம் மிகவும் மகிழ்வுறு கின்றேன். நான் எல்லா ரகமான மக்களுக்கும் ஆஸ்ரமத்தில் தங்கி சாதனை அல்லது மனித வர்க்கத்தின் ஆத்மீக முன்னேற்றத்திற்காக சேவை யின்மூலமாக பரிணமிக்க போதிய அளவு வாய்ப் பைக்கொடுக்கிறேன். நான் முதியோர், இளம் அபிலாஷிகள், ஆதரவற்ற நோயாளிகள் இவர் களை விசேஷ ஜாக்கிரதையுடன் கவனித்துக் கொள் கிறேன். நான் தித்திப்புப் பண்டங்களையும் பழங் களையும் முதலில் அவர்கள் எல்லோருக்கும் விநியோ கித்துவிட்டுப் பிறகு ஒரு சிறு பகுதியை எடுத்துக் கொள்கிறேன்.

நான் எவ்வாறு ஸ்வர்க்காஸ்ரமத்திலிருந்த முதிய சாதுக்களுக்கு பால், தயிர் ஆகியவற்றைக் கொண்டு சென்று அவர்கள் கால்களைத் தடவிக் கொடுத்து அவர்கள் நோயுற்ற பொழுது மருந்து கொடுத்து வந்தேன் என்பது இப்பொழுதும் ஞாபக மிருக்கிறது. இப்பொழுது கூட என்னுடைய சொந்த உணவில் ஒரு பகுதியை சில சந்நியாசி மாணவர்களுக்கும் ஆஸ்ரமத்திற்கு வந்திருப்போ ருக்கும் அனுப்புகிறேன். சில ஆண்டுகள் எனது சொந்த உணவின் ஒரு பகுதியை நானே குறைந்த ஆகாரம் சாப்பிட்டு, மோசமான

ஆரோக்கிய நிலையிலுள்ள ஒருசில கடின உழைப் பாளிகட்கு கொண்டு கொடுத்து வந்தேன். பிறகு நாலாபக்கங்களிலும் வேலை அதிகரிக்கவே நான் என் பக்கத்தில் எப்பொழுதும் இரண்டு இளம் பிரம்மச் சாரிகளை எல்லா ஆஸ்ரம வாசிகளுக்கும் பழங்களும் பிஸ்கோத்துகளும் விநியோகிப்பதற்காக வைத்திருந் தேன். இவைகள் உலகாயத மக்கள் கர்வத்தோடு தானம் கொடுக்கின்ற மாதிரி அறைகளில் வீசி எறியப்படுவதில்லை. அந்த தோற்றத்தில் இறை வனுக்குச் சேவை செய்த பாவம் எனக்கு இருந்தது. நான் முதலில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டுப் பிறகு அவர்களுக்குக் கொடுத்தேன்.

சில சமயங்களில் வெளியூர்களிலுள்ள எனது மாணுக்கர்களுக்கு பணமோ அல்லது புத்தகங்களோ அல்லது தின்பண்டங்களோ நான் அனுப்பும் பொழுது நான் தவருமல் ''இது அன்பாக ஏற்றுக் கொள்ளப்படுவதாக'' என்று சொல்வதுண்டு. ஆத்மீக சித்திகளுக்கு இந்த பாவம் அந்தரங்க உணர்ச்சி, உத்தேசம் ஆகியவைகள் மிக முக்கியம். இது என்னிடம் இயற்கையாக வந்தது. எந்த ஒரு முயற்சியாலும் மானசீகமாக உற்பத்தி செய்யப் பட்டதல்ல. பெயருக்காகவும், புகழுக்காகவும் இது ஆணவம் படைத்த மக்களால் செய்யப்படும் சேவை போன்றதல்ல. தாளுக, நோயுற்ளுே ருக்கும், ஏழைகளுக்கும், ஆதரவற்ளுேருக்கும் பூரண பணிவோடு சேவை செய்கின்ற இந்த ஒரு நற்பண்பே என்னுடைய பிரதான யோகமாகும். இந்த ஒரு நற்பண்பே சகல தெய்வீக குணங்களையும் அபிவிருத்தி செய்துகொள்ளவும் எல்லா பெயர் களுக்கும் உருவங்களுக்கும் பின்ளுல் இறைவனைக் காணவும் எனக்கு உதவி செய்தது.

## எல்லோருக்கும் உதவுதலும் அன்புகாட்டுதலும்

பிராரப்தம் அல்லது மனதின் விக்ஷேபம், அல்லது இந்திரிய சுகங்களை அனுபவிக்கும் ஆசை அல்லது ஏதாவது ஒரு வகை படாடோபம் அல்லது பல்வேறு இடங்களைப் பார்க்க வேண்டுமென்கின்ற ஆவல் காரணமாக மக்கள் ஆஸ்ரமத்தைவிட்டுப் போய்விடப் பார்க்கின்றனர். சில முன்னேறிய மாணுக்கர்கள் ஆஸ்ரமத்தில் சில ஆண்டுகள் தங்கிய பிறகு இமாலயத்தின் உட்பாகங்களில் தியானம் செய்வதின் மூலம் சில அனுபவத்தைப்பெற விரும்புகின்றனர். நான் அவர்களைப் பாராட்டி அவர்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களும் செய்து கொடுக்கிறேன். அவர்கள் எல்லோரும் அவர்கள் ஆகாரத்திற்காக பிக்ஷையை நம்பி இருக்கின்றனர். ஆனல் நானும் அவர்களுடைய விசேஷ பாலுக்கும் பழங்களுக்கும் போதிய பணம் அனுப்புகிறேன். முன்னேறும் சுபாவம் உள்ள சில மாணவர்கள் மனிதவர்க்கத்திற்கு உதவிசெய்ய விரும்பி சொற்பொழிவு யாத்திரை செய்ய விரும்புகின்றனர். நான் ஆத்மீக மாநாடுகளை ஏற்படுத்தி அப்பேர்ப்பட்ட மாணுக்கர்களை பல்வேறு கேந்திரங்களுக்கு அனுப்பிவைக்கிறேன்.

ஆஸ்ரமத்தில், முன்பு, சக்திபொருந்திய உணர்ச்சிகளையும், ஆசைகளையும் கொண்ட ஒருசில மாணுக்கர்கள் என்னைக் குறை கூறிவிட்டு ஆஸ்ரமத்தையும் இமயமலை முழுவதையும் திட்டிவிட்டு ஆத்திரத்துடன் இந்த இடத்தைவிட்டுச் சென்றனர். நான் அவர்களை ஆசீர்வதித்து அவர்களுக்கு ஒளி, ஞானம், சரியான புரிந்துகொள்ளும் தன்மை, உள் ஆத்மீக சக்தி இவற்றிற்காகப் பிரார்த்தித்தேன். ஆனல் அவர்கள் எல்லோரும் முற்றிலும் மாறுபட்ட

மனத்துடன் திரும்பிவரவே வெளிக்கிளம்பினுர்கள். நான் அவர்களை மிகுந்த அன்போடும் நேசத்தோடும் வரவேற்கிறேன். நான் சீக்கிரத்தில், கடந்ததை மறந்துவிடுகிறேன். இவ்வாறு ஒரு மனிதன் ஒரு நூறு தடவை வெளியே போய்விட்டுத் திரும்பி வரலாம். அந்த மனிதனுக்கு என்னுடைய அன்பு ஒருபடி அதிகமே. கட்டாயத்தின் மூலமாகவோ, அல்லது சட்டதிட்டங்களின் மூலமாகவோ தெய்வீக ஜீவன்களாக மனிதர்கள் மாற்றப்பட முடியாது. அவர்கள் எல்லோருக்கும் மனம் சமாதானம் அடையும்படியான அவர்களுடைய சொந்த அனுபவங்கள் வேண்டும்.

ஆஸ்ரமத்தில் ஒவ்வொருவரும் சில முக்கிய வேலை பகுதிக்கோ அல்லது மற்றவற்றிற்கோ பொறுப்பாளியாக இருக்கின்றனர். அவர்கள் திடீரென்று வெளியே கிளம்பிவிடும் பொழுது இயற்கையாகவே வேலை பாதிக்கப்படும். புது ஆட்கள் அவ்வேலையைக் கையாளும்பொழுது ஏராளமான தவறுதல்கள் ஏற்படும். அது பெருத்த நஷ்டத்திலும் போய் முடியும். நான் தனிப்பட்டவருடைய முன்னேற்றம், செழிப்பு, அறிவு, அமைதி ஆகியவற்றைப்பற்றியே கவனிக்கின்ற காரணத்தால் வெளியில் செல்ல விரும்பும் யாருடைய வழியிலும் குறுக்கே நிற்பதில்லை.

## தனிப்பட்டவர் கவனிப்பும் முக்கியத்துவமும்

பல வருஷங்களுக்கு முன்பு வெளியூர்களிலுள்ள எனது மாணுக்கர்களுக்கு எழுதிய கடிதங்களில் சில நான் எவ்வாறு எனது மாணுக்கர்களைப் பற்றி அக்கறை கொள்கிறேன் என்பதை தெளிவு படுத்தும் :—

I. "A", அதிசயிக்கத்தக்க வகையில் முன்னேறிக் கொண்டிருக்கிறுர். அவர்தான் இப்போதெல்லாம் சமையல் கட்டின் முதிய ஆச்சாரியார். அவரே முதிய தட்டெழுத்துக் காரருமாவார். தயை கூர்ந்து அவருக்கு உபநிஷத் துக்களின் ஒரு தொகுப்பையும், ஒரு பேனுவும் என்னுடைய வேதாந்தத்தைக் கடைப்பிடித்தல்" நூலின் பிரதியொன்றையும் என்னுடைய கணக்கில் கொடுக்கவும்.

II. ஸ்ரீ S. R. C. அவர்களை தயவு செய்து ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ளவும். ஏற்கனவே அவர் உடல்நிலை மோசமாக இருக்கிறது. இப்பொழுது அவருக்கு சில நோய்கள் இருக் கின்றன. அவருடைய ஆகாரம் மிகவும் குறை வானது. தயவுசெய்து அவருக்கு உவர்ப்பு ரொட்டி களையும் பழங்களையும் கொடுக்கவும். அவருக்கு இனிப்பு பிடிப்பதில்லை. நீ சதா இறைவனில் வசிப்பாயாக.

III. உனக்கு எப்பொழுதெல்லாம் பணம் தேவைப்படுகிறதோ உடனே எனக்கு எழுது. தபஸின் பெயரால் உன்னுடைய ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொள்ளாதே. நீ உன் இஷ்டம்போல் செய்யலாம் இருப்பினும் நேரத்தைப் பயனுள்ள வகையில் செலவழி. இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக.

IV. உனது உடல்நிலை எப்படி இருக்கிறது? உன்னுடைய அனுபவங்கள் அனைத்தையும் பதிவு செய்து, நீ 24 மணி நேரத்தையும் எப்படிச் செலவழிக்கிறுய் என்பதைப்பற்றி எனக்கு ஒரு அறிக்கை அனுப்பு. எனதன்பார்ந்த யோகிராஜ், நீ எந்த க்ஷணத்திலும் ஆஸ்ரமத்திற்குத் திரும்பி

வரலாம். இது உன்னுடைய சொந்த ஆத்மீக இல்லம். இடையூறற்ற சாதனைக்கும் பூர்ணத்துவத் திற்கும் கீழ்க்கண்டவைகள் அவசியம் :—

(அ) பிரார்த்தனைகள், ஓய்வு ஆகியவை மூலமாக நல்லாரோக்கியம், ஒத்துக் கொள்ளும்படியான ஆகாரம், சாதனை மூலமாக ஓய்வு.

(ஆ) ஆத்மீக அலைகளுடன் கூடிய அமைதி யான குளிர்ந்ததொரு இடம்.

(இ) குறித்த இடைவேளைகளில் எளிய ஆகாரம்.

(ஈ) வயது முதிர்ந்தோரின் உதவி, முன்னேறிய யோக மாணுக்கர்கள் அல்லது குருவினிடமிருந்துவழிகாட்டல்.

(உ) தேவைப்படும்பொழுது மருத்துவ உதவிக்கான சௌகரியம்.

இவைகள் துரிதமான ஆத்மீக முன்னேற்றத்தை உறுதிப்படுத்துகின்றன. கவலைகள், விசாரம் இன்றி, பிறகு நீ நன்ருக யோகத்தை அப்பியசிப் பதில் முன்னேற முடியும். உனக்கு இங்கு ஆஸ்ர மத்தில் மேற்கூறிய எல்லா வசதிகளும் இருக்கின் றன. நான் உனது ரயில்வே கட்டணத்திற்குப் பணம் அனுப்பட்டுமா? மனமார்ந்த வாழ்த்துக்கள்.

## ஊக்கமும் உபதேசமும்

தெய்வீக இயக்கத்திற்கு சேவை செய்தவர் களுக்கு நான் எப்பொழுதும் நன்றியுள்ளவனுக இருக்கிறேன். நான் அவர்களுடைய சேவையை பெரிதும் மதிக்கிறேன். புகழ்ச்சிகளைச் சொரிவதில் தாராளமாக இருக்கிறேன். நான் என்னுடைய

மாணுக்கர்களின் சொந்த தேவைகளையும் அதாவது —அவர்கள் ஆரோக்கியம், ஆத்மீக பரிணுமம் ஆகியவற்றையும் கவனிக்கிறேன். சில ஆண்டுகட்கு முன் நான் என்னுடைய மாணுக்கர்களில் ஒருவருக்கு எழுதினேன் :—

I. உன்னுடைய உடல் நலத்தை மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நீ புல், தண்ணீர், காற்று இவைகளைக் கொண்டு மட்டும் ஜீவித்துவிட முடியாது. இந்த எண்ணத்தை உடனே விட்டுவிடு. சத்துள்ள ஆகாரத்தையும் ஏராளமாக புஷ்டிதரும் பழங்களையும் எடுத்துக் கொள். இளக்கக் கற்றுக்கொள். இது மிகவும் முக்கியம். நீண்ட, சுறுசுறுப்பான நடைப்பயணம் செய். அச்சடிக்கும் வழியிலே இவ்வாண்டு நல்ல அளவு வேலை செய்திருக்கிருய் இது போதும். இது எல்லாம் அவனுடைய வேலை. இது எல்லாம் அவன் கருணை. இதை உணர். நீ அங்கு சௌகரிய மாய் இருக்கிருயா? உன் சொந்த செலவிற்கு நான் பணம் அனுப்பட்டுமா? மக்கள் அறிவைப் பரப்பும் துறையிலே வேலை செய்யும்போதும் தனிமையில் கடுமையான சாதனை செய்யும்போதும் பாலும் சத்துள்ள ஆகாரமும் தேவை.

II நீ அதிசயங்களைச் செய்திருக்கிருய். இது முகஸ்துதி (புகழ்ச்சி) அல்ல. நான் உன்னிட மிருந்து ஒரு போதும் இவ்வளவு எதிர்பார்க்கவே இல்லை. அதிக வேலை செய்யாதே. உன் சக்திகளை ஒழுங்குபடுத்து. களைத்திருக்கும்போது எல்லைப்புறங் களுக்குச் சென்று ஓய்வெடு. ஏகாதசியில் பல்வேறு கேந்திரங்களில் கீர்த்தனம் செய். வாராந்திர வகுப்புகளை நடத்து. அமைதியான தனிப்பட்ட பேச்சுக்களை வைத்துக்கொள். இம்முறையில் மக்களை அதிகமாகக் கவரலாம். இல்லறத்தார்கள்

வீட்டில் ஒரு போதும் உறங்காதே. பெண்களிடமிருந்து தூரமாக ஓடி விடு. அவர்களோடு விளையாட்டும் கேலிப்பேச்சும் வேண்டாம்.

III. ரிஷிகேசத்துக் குளிரைப்பற்றிப் பயப்பட வேண்டாம். அனுவசியமாக திடுக்கிடவேண்டாம். நீ என்னுடைய கம்பளத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கடையிலிருந்து என் கணக்கில் பாலும் டீயும் வாங்கிக் கொள்ளலாம். நிரந்தர அமைதியை நீ அனுபவிப்பாயாக.

IV. ஓய்வெடுத்துக் கொள். கஷ்டப்பட்டு வேலை செய்யாதே. குளிர்ச்சி தரும் தைலத்தை தலைக்குத் தடவு. குளிர்ச்சியாக இருக்கும்போது விடியற்காலையில் பிராணயாமம் செய். இது உன்னை அளவு கடந்த சக்தியுடன் புதுப்பிக்கும். பழங்களையும் எடுத்துக்கொள். காலை தியானத்தையும் மாலை தியானத்தையும் ஒரு போதும் ஒதுக்கி விடாதே. ஒரு சந்நியாசியின் லட்சியம் வேதாந்த உணர்வு—அஹம் பிரம்மாஸ்மி பிரம்ம—நிஷ்டை, உனது ஆகாரம், பானம், சகலமும். இது கர்ம யோகத்துடன் வைத்துக்கொள்ளப்பட வேண்டும்.

எனக்கு சமஸ்கிருத மொழியிடம் மிகுந்த மரியாதை உண்டு. நான் எனது மாணக்கர்களை. அதற்கு விருப்பமுள்ளவர் யாராக இருப்பினும்-சமஸ்கிருதம் படிக்கச்சொல்லி ஊக்குவிக்கிறேன்-அது ஆஸ்ரமச் செலவிலேயே ஆனாலும் சரி. நான் ஒரு சமயம் எனது மாணக்கருக்கு எழுதினேன் :—

என்னிடம் ரூபாய் நோட்டுக்களையும் காசுகளையும் பழங்களாகக் கொடுக்கக் கூடியதொரு பூதமோ அல்லது மரமோ இருந்தால் நான் சுலபமாக இந்த சமஸ்கிருத

மாணுக்கர்களை திருப்தி செய்துவிட முடியும். அவர்கள் தேவைகள் முடிவில்லாதவை. நான் அவர்களுக்கு உதவும் பொருட்டு ஏதாவது செய்தாக வேண்டும். அவர்கள் அதிசயிக்கத்தக்க ஆராய்ச்சி வேலையையும் ஆழ்ந்த அத்யயனத்தையும் செய்திருக்கின்றனர். புத்தகங்கள் சரிவர கொடுக்கப்படாவிட்டால் அவர்களுடைய படிப்பு மிகவும் பாதிக்கத்தக்க நிலையில் குறுக்கிடப்படும். நான் ஏராளமான மாணவர்களுடன் ஒரு சமஸ்கிருதக் கல்லூரியை ஆரம்பித்து சம்ஸ்கிருத இலக்கியத்தில் ஆராய்ச்சி செய்யும் சந்நியாசி மாணுக்கர்களுக்கு எல்லா வசதிகளையும் செய்து தர விரும்புகின்றேன். நமக்கு தயை தேவை; நம்முடைய தேவைகளைக்கூட தியாகம் செய்துவிட்டு மற்றவர்களுக்கு சேவை செய்தல் வேண்டும். இது என்னுடன் பிறந்த குணமாகும். இதுவே ஒரு முனிவனின் தர்மம்.

## அனுசரித்துச்செல்லும் தன்மை

ஒருசில காரணத்திற்காக எனது மாணுக்கர்களில் ஒருவர் ஆஸ்ரமத்தை விட்டுச் சென்ற பொழுது நான் உடனே இந்த மதிப்புமிக்க அனுபவங்களும் திறமைகளும் மனித சேவையிலிருந்து இழந்துவிடப்படக் கூடாதே என்று உணர்ந்தேன். ஆகவே இவ்வாறு எழுதினேன்:—

''நான் உங்களுடைய கைச்செலவிற்காக உங்களுக்கு பணம் அனுப்பியிருந்தேன். பணம் ''இடத்தை விட்டுச் சென்றுவிட்டார்'' என்று திரும்பி வந்து விட்டது. நான் எல்லா நேரத்திலும் தங்களுக்குச் சேவை செய்ய தங்கள் பாதங்களில் எப்பொழுதும் இருக்கிறேன். நீரே அதை மறுத்து விட்டீர். நான் உங்களுக்கு எல்லா வழிகளிலும் சேவை செய்ய இங்கு இருக்கும்பொழுது நீங்கள்

ஏன் வேறு ஒருவரை நம்பியிருக்கவேண்டும்? நீங்கள் ஏன் நகரங்களில் உலகாயத மக்களுடன் வசிக்க வேண்டும்? இங்கு நீங்கள் மிருதுவாக, லேசாக, மெதுவாக, கொஞ்சமாக மற்றவரோடு கலக்காது, சுதந்தரமாக என்னிடம் மட்டும் தொடர்பு கொண்டு வேலை செய்யக்கூடிய மாதிரி பல்வேறு பிரிவுகள் இருக்கின்றன.''

''ஆட்களும் சரியானமேற்பார்வையும் இல்லாத காரணத்தால் எல்லா பிரிவு வேலைகளும் தடைப் படுகின்றன. நீங்கள் கடிதப் போக்குவரத்துப் பிரிவில் ஒரு சிறிது வேலை செய்யினும் உலகிற்கு அது ஒரு மாபெரும் உதவியாக இருக்கும். நீங்கள் எனக்கு ஒரு நூறு வழிகளில் உதவி புரியலாம். முன்பு மாதிரி அதிகமாக உழைக்காதீர்கள். எந்த பொறுப்புமின்றி நீங்கள் ஒரு சிறிது வேலை செய் கிறீர்கள். இது இறைவனின் ஆசியும் கருணையு மாகும். நிறைய ஓய்வெடுத்துக்கொண்டு சிறிதே வேலை செய்யுங்கள். நீங்கள் ஆஸ்ரமத்தை விட்டு விலகியிருக்கலாம். உங்கள் உணவு உங்கள் அறையில் கொண்டு வந்து வைக்கப்படும். நான் உங்கள் செலவிற்குப் பணம் கொடுக்கிறேன்.''

''இங்கு உங்களுக்கு உணவிற்குக் குறைவு ஒன்றும் இல்லை. நான் யாருக்கும் ஆகாரம் கொடுக்க மறுப்பதில்லை. நீங்கள் ஏன் நகரங்களில் வசிக்க வேண்டும்? வேலையில் தொடர்பு இல்லாமல் போனால் நாளடைவில் நீங்கள் உங்கள் திறமைகள் அனைத்தையும் இழந்துவிடுவீர்கள். இந்த உலகாயத சூழ்நிலை ஆத்மீக முன்னேற்றத்திற்கு உகந்ததாக இல்லை. ஆகவே உடனே ரிஷிகேசம் வந்து விடவும். ரயில் கட்டணம் அனுப்பி வைக்கட் டுமா? விரும்பினால் இங்கு ஆறு மாதங்களும் நகரங் களில் ஆறு மாதங்களும் வசிக்கலாம்.''

''நீங்கள் உங்களுடைய நோக்கம், பார்வை, கற்பனை, எண்ணம் ஆகியவைகளை ஒருசிறிது மாற்றிக் கொண்டால் நீங்கள் இங்கும் எங்கும் ஆனந்தமாக இருக்க முடியும். மனிதன் தன்னுடைய சொந்தக் கற்பனையாலும் அவனுடைய பழைய முறையில் எண்ணுகின்ற வழக்கத்தினாலுமே துன்பப்படு கின்றான். அவன் தன்னை ஒருபோதும் மாற்றப்பட அனுமதிப்பதில்லை. இது மாயை. அனுசரித்துச் செல்லுங்கள். தகுதியாக்கிக்கொள்ளுங்கள். எக் காலத்திலும் சந்தோஷத்துடனும் உற்சாகத் துடனும் இருங்கள். சீக்கிரத்தில் பரிணமமடைந்து சக்தி பொருந்திய யோகியாகத் திகழ்ந்து அகில உலகிற்கும் ஒளியையும் ஞானத்தையும் கொண்டு வாருங்கள்.''

## ஆஸ்ரமங்களை யார் ஆரம்பிக்கலாம்?

ஒரு ஆஸ்ரமமானது உலக சமாதானத்தை உறுதிப்படுத்தக்கூடியதொரு கீர்த்தி வாய்ந்த கேந்திரமாகும். பல ஆர்வமுள்ளவர்கள் அழகானதொரு கடிதத்தலைப்புடன் ஆஸ்ரமங்களை ஆரம்பிக் கின்றனர். அது போதாது. ஆரம்ப நிலையிலுள்ள வர்களால் ஆரம்பிக்கப்படும் ஆஸ்ரமங்கள் உலகிற்கு நல்ல பயனையளிக்காது. வெற்றிகர மாக ஒரு ஆஸ்ரமத்தை நடத்த வேண்டுமானால் அதற்கு விசேஷத் திறமைகள் தேவை. ஆரம்ப நிலையிலுள்ளவர்களுக்கு அது ஒரு தடையாகவும் முன்னேறியவர்களுக்கு அது ஒரு வீழ்ச்சியாகவும் இருக்கும். பல வருஷங்களுக்கு முன்பு, சில சந்நியாசிகள் அவர்களுடைய ஆஸ்ரமங்களின் நடவடிக்கைகளை அபிவிருத்தி செய்ய பொருளாதார உதவியையும், புத்திமதிகளையும் கேட்டு எழுதியிருந் ததற்கு அவர்களில் ஒருவருக்கு நான் கொடுத்த பதில் கீழே தரப்பட்டுள்ளது. அது என்னுடைய

முறையையும் கொள்கைகளையும் தெளிவாய் விளக்கும் :—

''அன்பார்ந்த ஸ்வாமிஜீ, உங்கள் சாதனைகள், அவாக்கள், நோக்கங்கள், கொள்கைகள் யாவும் மெச்சத்தக்கவைகளே. ஓ ஸ்வாமிஜீ, குரு பதவிக் காகவும், சுக சௌகரியங்களுக்காகவும், பெயர் புகழுக்காகவும் ஒரு ஆஸ்ரமத்தையோ அல்லது ஒரு மத சங்கத்தையோ ஆரம்பிக்கும்போது ஆசைப் படாதீர்கள். பொதுவாக ஆஸ்ரமங்களை ஆரம்பிக் கின்றவர்கள் ஆரம்பத்தில் பணிவுடன் இருந்து சில சேவையும் செய்கின்றனர் அவர்கள் செல்வத்துடன் ஸ்திரமாக ஸ்தாபிக்கப்பட்டுவிட்டதும் பொதுஜன சேவையைப்பற்றியோ, அல்லது தனிப்பட்டோரின் பரிணமத்தைப்பற்றியோ அக்கறை கொள்வதில்லை. அவர்கள் கர்விகளாகவும், சர்வாதிகாரிகளாகவும் ஆகிவிடுகின்றனர். நப்பாசைகளைக்கண்டு ஜாக்கிர தையாக இருங்கள். எப்பொழுதும் ஒரு பணிவுள்ள தொண்டனுக பணியாற்றுங்கள். ஆத்மனையறிந்த பின்பும் தினசரி செய்யும் சாதனை வழக்கத்தை விடக்கூடாது.

நான் எந்த செல்வம் பொருந்திய ராஜாவை யோ அல்லது ஜமீன்தாரரையோ அறியேன். என்னிடம் சிஷ்யர்கள் கிடையாது. உண்மையான ஆத்மீகப்பயிற்சியை விரும்பும் சில அபிலாஷிகள் என்னை அவர்களுடைய குருவாகக் கருதுகின்றனர். நான் அவர்களை மிகவும் ஜாக்கிரதையாகப்பார்த்துக் கொள்ளுகிறேன். அவ்வளவு தான். நான் உங்களுக்கு பணத்தால் உதவியளிக்க இயலாது. நான் உலகிற்கு பல்வேறு வகைகளில் சேவைசெய்து வருகிறேன். எல்லா ஆஸ்ரமங்கள், மடங்கள், மதஸ்தாபனங்கள் மூலமாகவும் வேலை செய்கிறேன்.

நீங்கள் தன்னலமற்ற எண்ணத்தோடு பொது ஜனசேவை செய்தால், ஜனங்கள உங்களிடம் துறவு மனப்பான்மையைக்கண்டால் பிறகு அவர்களாகவே உங்களுக்கு ஒவ்வொரு வகையிலும் உதவ முந்திக் கொண்டுவருவர். பணத்திற்காக சொர்கத்தையோ அல்லது பூமியையோ அசைக்க வேண்டாம். டெர்பி பந்தயத்தின்மூலம் உங்கள் அதிர்ஷ்டத்தை சோதிக்க வேண்டாம். அம்மாதிரி திட்டங்களைப் பற்றி எண்ணுவது சாதுக்கள் அனுதாபப்பட வேண்டியது.

இக்காலத்தில் அபிலாஷிகள் தங்கள் ஆத்மீக முன்னேற்றத்தைப்பற்றிக் கவனிக்க அக்கறை கொள்வதில்லை. தங்கள் தலையை மொட்டையடித்து கொண்டு, ஆடைகளுக்குக் காவி நனைத்துக்கொண்டு ரிஷிகேசத்தில் சில காலம் தங்கியிருந்து விட்டுப் பிறகு பெரிய யோகிகளாகச் செல்கின்றனர். அவர்கள் சௌகரியமான வாழ்க்கையை நடத்த ஆஸ்ரமங்களை ஆரம்பிப்பதற்குப் பணம் திரட்ட ஆரம்பிக்கின்றனர்.

இந்தியாவில் போதுமான ஆஸ்ரமங்களும், மடங்களும் இருக்கின்றன. மனப்பூர்வமான, தன்னலமற்ற தொண்டர்கள் அரிதாக இருக் கின்றனர். ஒருவன் ஒரு ஆஸ்ரமத்தை ஆரம்பிக்கு முன்னர் அவன் மற்றவர் பின்பற்றக்கூடிய மாதிரி யான வாழ்க்கையை நடாத்தி வந்திருக்கவேண்டும். அவனுடைய பிரசன்னமே எல்லோருக்கும் அமைதி, சக்தி, பேரானந்தம் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும். அப்போது தான் ஒருவன் அந்த ஸ்தாபனத்தை வெற்றிகரமாக நடத்த முடியும்,

## கொள்கைகளை மறந்துவிடக் கூடாது

''ஒரு ஆஸ்ரமத்தை ஆரம்பிப்பதற்கு முன்னர், கொள்கைகள், ஆசைகள், நோக்கங்கள் யாவும் மகத்தானவைகளாக, மனோகரமாக, கவர்ச்சிகர மாக இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. கொஞ்சம் நிதியும், புகழும் வந்து விட்டால் உடனே கொள்கைகள் மறந்து விடப்படுகின்றன. தன்னல மற்ற சேவா மனப்பான்மை மங்கி விடுகின்றது. கொள்கைகள் கைவிட்டு விடப்படுகின்றன. ஸ்தாப கர்கள் பொறுக்கியெடுக்கப்பட்ட சில சிஷ்யர்களுட னும், பின்பற்றுவோருடனும் சௌகரியமான தொரு வாழ்க்கையை நடத்த விரும்புகின்றனர். ஸ்தாபகர்கள் எடுத்துக்காட்டானதொரு வாழ்க் கையே வாழமுடிகிறதென்று வைத்துக்கொண்டா லும், பிற்காலத்தில் அவர்களுடைய சிஷ்யர்களும் அதே நோக்கோடு அதை நிர்வகிக்க முடிவதில்லை. அது சண்டை போடும் இடமாகவோ அல்லது ஒரு வியாபார ஸ்தலமாகவோ ஆகிவிடுகிறது. ஆஸ்ரமத் தலைவரும், அங்குள்ள ஆஸ்ரம வாசிகளும் வைராக் கியமும், பூரணத்துறவும் பொருந்தியதொரு வாழ்க்கையை நடத்த வேண்டும். அப்பேர்பட்ட வர்களால் நடத்தப்பட்டுவரும் ஆஸ்ரமம் ஒரு கேந்திரமாக, வற்றாத அமைதி, பேரானந்த சந்தோஷக் கருவூலமாக நிற்கும். இது ஒவ்வொரு வரையும் கவரும். உலக முழுதுமுள்ள லட்சோப லட்சம் மக்கள் ஈசுவரப்பிரேரணையை அடைவர். உலகிற்கு அப்பேர்பட்ட ஆஸ்ரமங்கள் எப்போதும் தேவைப்படுகின்றன.

ஒவ்வொரு சந்நியாசியும், ஒவ்வொரு யோக மாணாக்கனும் ஏதாவது ஒரு குறையை உடையவ ராக இருக்கின்றனர். சம்பூர்ண யோகி ஒருவன்

தான் தீயகுணங்களிலிருந்தும் கெடுதல்களி லிருந்தும் முற்றிலும் விடுபட்டவனாக இருக்கிறான். எல்லோரும் பரிணாம மார்க்கத்தில் இருக்கின்றனர். ஒவ்வொருவரும் சில வேலைகளில், அடிக்கடி, தவறக்கூடும். பொறுமையுள்ளவனாக ஆகு. ஒவ்வொன்றிலும் நல்லதையே காண். நண்பர் களிடையேயும், தொழிலாளிகளிடையேயும், சில சமயங்களில் சந்யாசிகளிடையேயும்கூட லேசான மோதல்கள் அல்லது சண்டைகள் வரக்கூடிய நிர்ப்பந்தம் இருக்கிறது. ஒருவர் மற்றவரை மன்னிக்க வேண்டும். மறுபடி ஒன்று சேர்ந்து கடந்ததை மறந்துவிடவேண்டும். உனக்கு மற்றவர் களிடமுள்ள நல்லவற்றை மட்டும் பிடித்துக் கொள்ளும் மனப்போக்கு இருக்கவேண்டும். அதை உன்னுடைய தினசரி வாழ்க்கையில் முக்கியத்துவப் படுத்த முயற்சிக்கவேண்டும். யாரும் முற்றிலும் கெட்டவரல்ல. இந்தக் கருத்தை நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும். நீங்கள் மற்ற வர்களோடு கலந்து பழகும்போது சமயோஜிதமாகப் போகும் குணம் உங்களுக்கு இருக்கவேண்டும். உணர்ச்சிகளின் மீது பூரண கட்டுப்பாடு வைத்திருங் கள். அப்பொழுதுதான் அதிகமான தொண்டர்கள் உங்களுடன் இருக்க சந்தோஷப்படுவர்; உங்கள் ஆஸ்ரமத்திற்குச் சேவை செய்வர். உங்களால் ஆரம்பிக்கப்பட்ட இந்த நல்ல நோக்கம் கொண்ட இயக்கம் கீர்த்தியுடன் செழிப்படைவதாக. நான் உங்களுக்கு உதவிசெய்ய எப்பொழுதும் அக மகிழ்கிறேன்.''

## அத்தியாயம் ஏழு

# துறவு வழியிலே ஒளி

## துறவின் பெருமை

தனிமையிலும், தியானத்திலும் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருக்கும் துறவிகள் கோஷ்டி ஒவ்வொரு மதத்திலும் உண்டு. புத்த மதத்தில் பிக்ஷுக்களும், முகமதிய மதத்தில் பக்கிரிகளும், சுபிஸ மதத்தில் சுபிஸ பக்கிரிகளும், கிறிஸ்தவ மதத்தில் தந்தைமார்களும் ''தேசிகர்களும்'' இருக்கின்றனர். துறவு வாழ்க்கையை நடத்திக் கொண்டும் உலகிற்கு சேவை செய்து கொண்டுமிருக்கின்ற சந்நியாசிகள் இல்லாவிடில் ஒரு மதத்தின் பெருமை இழந்து பட்டுவிடும். இவர்கள்தான் உலக மதங்களை காத்து (பரிபாலித்து) வருகின்றனர். இல்லறத்தார்கள் இன்னல்களிலும், இடையூறுகளிலும் இருக்கும்போது இவர்கள் ஆறுதல் அளிக்கின்றனர். இவர்கள் அமைதி, ஞானம் ஆகியவற்றின் முன்னோடிகள். இவர்கள் நோயுற்றோரை குணப்படுத்துகின்றனர்; அனாதைகளுக்கு ஆறுதலளித்து, நம்பிக்கையிழந்தோருக்கு உதவியளிக்கின்றனர்; மனமொடிந்தோருக்கு சந்தோஷத்தையும், மெலிந்தோருக்கு பலத்தையும், அறியாதவனுக்கு அறிவையும் கொடுக்கின்றனர். ஒரு உண்மையான சந்நியாசி உலகின் எண்ண ஓட்டங்களை நன்மையாக மாற்ற முடியும்.

ஒரு உண்மைச் சந்நியாசி இப்பூவுலகில் ஒரு சக்திபொருந்திய அதிபதியாவார். கடந்த காலத்தில் சந்நியாசிகள் உயர்ந்த வேலையைச் செய்திருக்கின்றனர். அவர்கள் இப்பொழுது அதிசயங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். உண்மைச் சந்நியாசி

ஒருவரால் அகில உலகின் விதியை மாற்றியமைக்க முடியும். உண்மையான பக்தி, ஆவல், துறவுப் பாதையில் பற்று ஆகியவற்றைக் கைக்கொண்டும், இந்தச் சம்சாரச் சேற்றிலிருந்து (சகதியிலிருந்து) வெளியே வர முயற்சிக்கின்ற ஒரு சாதகனைப் பார்க்கும்போதோ, அல்லது அவனைப்பற்றிக் கேட்கும்போதோ நான் ஆனந்தக் கூத்தாடுகின்றேன். பிரார்த்தனைகளின் மூலமாகவும் எண்ண அலையோட்டங்கள் மூலமாகவும் நான் அப்பேர்ப்பட்ட மாணுக்கர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அவர்களுக்கு ஏராளமாக உதவுகின்றேன். அவர்கள் அனைவரும் என்பக்கம் கவரப்பட்டு எதிர் காலத்தில் பெருநம்பிக்கையுடன் இவ்வுலகத்தை சீக்கிரத்தில் துறந்து விடுகின்றனர். நான் அவர்களை மட்டற்ற மகிழ்ச்சியுடன் வரவேற்று யோக மார்க்கத்தில் பல்வேறுவகைகளில் அவர்களைப் பயிற்றுவித்து இந்தப் பாதையில் ஸ்திரமாக அவர்களால் நிற்க முடிகின்ற வரையிலும் அவர்களைப் பாதுகாத்து வருகிறேன்.

## துறவிற்கு இளமையே மிகச் சிறந்த பருவம்

வேதங்களில், பிரம்மச்சர்யம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம் ஆகிய படிகளை வாழ்க்கையில் தாண்டியவர்களுக்கு சந்நியாச ஆஸ்ரமம் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது மக்கள் தங்கள் வயது முதிர்ந்த காலத்தில் இறக்கப் போகும் தருவாயில் சந்நியாசம் பெறுகிருர்கள். இறக்கும்போது கொஞ்சம் அமைதி இருப்பது மிகவும் நல்லதே. இதன் மூலம் அவர்கள் ஒரு நல்ல பிறவியைப்பெறக்கூடும். தியானம், நல்ல உட்பார்வை, உடல், உள்ளம், மனம் ஆகியவற்றின் விசேஷத்தூய்மை ஆகியவற்றிற்கு பிரமாதமான

சக்தி தேவைப்படுகிறது என்பதை நான் அனுபவத்தில் காண்கின்றேன். துறவுப் பாதைக்கு அளவற்ற சக்தி, மனத்தூய்மை ஆகியவற்றுடன் கூடிய இளமையே முதன்மையான யோக்கியதாம்சம் என்று நான் கருதுகிறேன். இவ்வுலக பந்தமும், சிக்கல்களும் இல்லாத இளம் பிரம்மச்சாரிகளிடம் எனக்கு அளவு கடந்த மதிப்பு உண்டு. அவர்கள் நல்ல முறையில் உருவாக்கப்பட முடியும்.

வேதங்களில் மாணுக்கர்களுக்குத் தேவையான அடிப்படை யோக்கியதாம்சங்களாக விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத், முமுக்ஷுத்வம் ஆகியவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. பெரும் பொறுப்புக்கள், ஆவல்கள், கவலைகள் ஆகியவற்றுடன் இந்த உலகாயத சூழ்நிலைகளில் மக்கள் வசித்துக்கொண்டிருக்கும்பொழுது மேற்கூறிய எல்லா தகுதிகளையும் கொண்டிருப்பதென்பது முடியாத காரியம். அவர்கள் ஒரு நற்குணத்தை அபிவிருத்தி செய்யும்பொழுதோ அல்லது ஒரே ஒரு குறையையோ அல்லது மனத்திலுள்ள மாசையோ அகற்ற முயற்சிக்கும்பொழுது அவர்கள் வேறு பல வழிகளில் சிக்கிக்கொண்டு விடுகின்றனர். ஆரம்ப நிலையில் இவ்வுலகாயத உலகின் அலைகள் ஆத்மீக முன்னேற்றத்திற்குச் சாதகமானதாக இல்லை. அவர்கள் தங்கள் சக்தி முழுவதையும் இந்த உணர்ச்சிகளைத் தடுத்து நிறுத்துவதற்கே செலவிட வேண்டியிருக்கிறது. ஆகவே நான் இளைஞர்களையே அதிகமாக விரும்புகிறேன். அவர்கள் நல்ல சூழ்நிலையில் யோகப் பாதையிலே செல்லும் போதும், இந்திரியப் பொருட்களின் கவர்ச்சியிலிருந்தும், தூண்டுதல்களிலிருந்தும் விலகி வெகு தூரத்தில் யோகிகளுடன் வசிக்கும்போதும் தேவையான தகுதிகள் தாஞகவே வந்தடையும்.

## கடுமையான விதிகள் இல்லை

நான் எல்லா ரகமான மக்களையும் மனப்பூர்வ மாக வரவேற்கிறேன். வயது முதிர்ந்தவர்கள் புனித கங்கையில் நீராடி தங்கள் நேரத்தை பிரார்த்தனை, பஜனை ஆகியவற்றில் செலவழிக் கலாம்; சத்சங்கத்தின் நன்மைகளையும் பெறலாம். இளம் வாலிபர்கள் சக்தி பொருந்திய சாதனையின் மூலம் சீக்கிரத்தில் பரிணமித்து உலகிற்கு ஆத்மீக நன்மைகளைக் கொண்டு வரலாம். மக்கள் இந்திரிய சுகங்களை வெறுத்து அத்துடன் கூடவே யோகப் பாதையில் ருசியையும் காட்டுகின்ற சில குறிகளைக் காண்பித்தால் நான் அவர்களுக்கு உடனே சந்நியாசத்தைக் கொடுத்து என்னிடமுள்ளதை அவர்களோடுப் பங்கிட்டு அவர்களைப் பெருமளவு ஊக்குவிக்கவும் செய்கிறேன்.

நான் தபால் மூலமாகவும் தீக்ஷை கொடுப்பது பலருக்கும் பெரும் வியப்பாக இருக்கிறது. இமாலயத்திற்கு வருகின்ற நிலையில் இல்லாத சில மாணவர்கள், புனித வஸ்திரத்தையும் உபதேசங்களையும் தபால் மூலமாகப்பெற்று சந்நியாசம் பெற்றிருக் கின்றனர். அவர்கள் மகிழ்ச்சியை முற்றிலும் என்னால் எடுத்துரைக்க இயலாது. அவர்கள் அதிசயிக்கத்தக்க முன்னேற்றம் அடைந்திருக் கின்றனர். நான் அவர்களை உன்னிப்பாக கவனித்து வருகிறேன்.

என்னுடைய சொந்த உபயோகத்திற்காக பக்தர்களிடமிருந்து நான் பெறும் இஷ்டப்பட்டு கொடுக்கும் நன்கொடைகள் முழுவதும் மாணாக்கர் களுக்கு சௌகரியங்களும் வசதிகளும் செய்து கொடுக்கவும், அவர்கள் நலம், அமைதி ஆகியவற் றிற்காகவும், அவர்கள் சீக்கிரம் பக்குவமடைந்து

உலகிற்குப் பல்வேறு வகைகளில் உதவி செய்வ தற்குத் தேவையான நூற்றுக்கணக்கான வழிகளை உற்பத்தி செய்வதற்கும் பயன்படுத்தப்படுகின்றன. மனித வர்க்கத்தின் ஆத்மீக உயர்விற்கான என்னுடைய முறையில் நான் திருமணமானவர்களை கூட துறவுப்பாதையை மேற்கொண்டு சந்நியாசி களைப்போல் இருக்க அனுமதிக்கின்றேன். ஒரு குடும்பமும் குழந்தைகளும் இருக்கும்போது சந்நியாச ஆஸ்ரமத்தை மேற்கொண்டுள்ள பலர் இருக்கின்றனர். இங்கு சிறிது பயிற்சி பெற்ற பிறகு அவர்கள் திரும்பிச்சென்று குடும்பத்திற்கு அருகி லோ, அல்லது சிறிது விலகியோ இருந்து கொண்டு பூரணப்பிரிவுடன் குடும்பத்தைப் பாதுகாத்துக் கொண்டு வெற்றிகரமாக அவர்களுடைய சாதனை யில் செழித்தோங்கி நிற்கின்றனர்.

என்னுடைய முறையின் அம்சம் என்னவெனில் நான் தேடுகிறவனின் நோக்கம், உள்ளத்தூய்மை ஆகியவற்றை நான் கவனிப்பதே. நான் உணவு, உடை ஆகியவற்றில் ஏராளமான விதிகளையும், கட்டுப்பாடுகளையும் விதிப்பதில்லை. சட்டங்களுக் குகந்த வெளித்தோற்றம் அவ்வளவு மதிப்புடைய தல்ல. என்னுடைய மாணுக்கர்கள் எந்த இடத்தி லும், எந்த உடையிலும் இருக்கலாம். இருந்த போதிலும் பயனுள்ள வகையில் என்னுடைய உபதேசங்களைப் பின்பற்ற முடியும். அவர்கள் எல்லோரும் அகில உலகத்திற்கும் ஒரு எடுத்துக் காட்டாக இருக்கின்றனர். எடுத்துக் காட்டான தொரு வாழ்க்கையை நடத்துகின்ற உண்மையான, பூர்ணலட்சண சந்நியாசியின் பெருமை விளங்குவ தாக. தெய்வீக உணர்வுடன் தேசத்திற்கும் மனித சமுதாயத்திற்கும் சேவை செய்யக்கூடிய, உண்மை ஞானத்தைப்பரப்பக்கூடிய, ஒவ்வொரு வீட்டிற்கும் ஞானிகள், மகான்கள் ஆகியோரின் செய்திகளை

எடுத்துச்செல்லக்கூடிய லக்ஷண சந்நியாசிகளை இவ்வுலகம் நாடி நிற்கிறது. இவ்வுலக நாடுகளுக்கு தெய்வீக ஞானக்களஞ்சியங்களும் உண்மையாகிய ஒளியைச்சுமந்து செல்பவர்களும், உலகின் கலங் கரை விளக்கங்களும், ஆத்மீக மாளிகைகளின் மூலைக்கற்களும், நிரந்தர தர்மம் அல்லது மதத்தின் மத்தியத்தூண்களும் ஆகிய சந்நியாசிகள் வழி காட்டிச் செல்வாராக.

## எனது சிஷ்யர்களாக இருக்க யார் தகுதியுடையவர்கள்

நான் உடை, வெளித்தோற்றங்கள் ஆகியவை களில் மிகுந்த சுதந்திரமும், உரிமையும் கொடுத்த போதிலும் அத்தியாவசியமானவைகளில் நான் என்னுடைய மாணுக்கர்களிடம் மிகவும் கண்டிப் பாக இருக்கிறேன். சந்நியாச ஆஸ்ரமத்திற்குச் சொல்லப்பட்டிருக்கும் விதிகள் பின்பற்றப்பட வேண்டும். சௌகரியமான சந்நியாசம் மிகவும் ஆபத்தானது. அவர்கள், மனதிற்கு இரக்கம் காட்டக்கூடாது. நாகரிகமான, சுதந்திரமான சந்நியாசிகள் சமூகத்திற்கு ஒரு பயமுறுத்தலாகும். உலக மக்கள் அப்பேர்பட்ட சந்நியாசிகளை சபித்து அவர்களை அவமரியாதையுடனும், வெறுப்புடனும் நடத்துகின்றனர். அவர்கள் எவ்வளவு தான் ஆத்மீகத் துறையில் உயர்ந்திருந்தாலும் பெண் களுடனோ அல்லது இல்லறத்தார்களுடனோ வசிக்கவும் மற்றவர்களுடன் சகஜமாக கலந்து பழகவும் கூடாது. அவர்களுடைய வாழ்க்கைகளின் ஒவ்வொரு வினுடியிலும் எளிய வாழ்க்கையும், உயர்ந்த எண்ணமும் கூடிய தகிக்கும் வைராக்கியம் லட்சியமாக இருத்தல் வேண்டும்.

துறவு என்பது மானஸிகமானது என்பதில் ஐயமில்லை. அதற்கென்று நீ விரும்பியபடி என்ன வேண்டுமானாலும் செய்து கொண்டு எ ப் ப டி வேண்டுமானாலும் இருக்கலாம் என்று அர்த்தமல்ல. அது உன்னுடைய வீழ்ச்சிக்கே அடிகோலும். ஒழுக்கத்திற்கும், உள்ளம், இந்திரியங்கள் ஆகிய வற்றை கட்டுப்படுத்தவும், ப ர ம் ப ரை ய ா க அனுஷ்டிக்கப்பட்டுவரும் சட்டதிட்டங்களைக்கடைப் பிடித்து பூர்ணத்துவத்திற்குப்போராடு. உண்மை யான வைராக்யமும், புலனடக்கமும் உ ன க் கு இருப்பின், உணவு, உடை ஆகியவற்றில் ஒழுங்கு முறை தானுகவே வெளிப்படும். வி தி க ளை ப் புறத்திலே அனுசரித்தலால் இந்த வழியில் பற்றிக் கொள்ள உனக்கு உதவி புரியும். மாயை அழிவை யுண்டு பண்ணுகிறது. ம ா ை ய ஏமாற்றுகிறது. ஜாக்கிரதை. ஒவ்வொரு படியிலும் எச்சரிக்கை யுடனிரு; மனத்தின் விருத்திகளைக் கவனி.

எனது மாணுக்கர்களுக்கு உயர்வு மனப்பான்மை இருத்தல் கூடாது. அவர்கள், தங்கள் முழு நேரத் தையும், சக்தியையும் உபதேசிப்பதற்கே செலவிடும் வரட்டு வேதாந்திகள் அல்ல. அவர்களுக்கு ஆத்ம தியாகமும், தங்கள் அமைதியான, கடுமையான சாதனையோடு உலக சேவையும் உண்டு. தீவிரமான சேவைக்கிடையே அவர்கள் லக்ஷியத்தில் மனதைப் பதிய வைக்கக்கற்றுக் கொள்கின்றனர். அவர்கள் ''இவ்வுலகம் ஒரு நீண்ட கனவு (தீர்க்க ஸ்வப்னம்) அழியக்கூடியது - சத்தியமே உ ண் ை ம'' என்ற கருத்தில் ஊன்றி வைக்கப்படுகின்றனர். எ ன து மாணுக்கர்களுக்கு, உலகமென்பது கிடையாது. அவர்கள் தெய்வீகத்தை எல்லா பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்ஞல் புரிந்துகொள்கின்றனர்.

## அந்தரங்க குணத்தை சுத்தப்படுத்து

உன்னுடைய உள்ளத்தைச் சுத்தப்படுத்து. பெருந்தன்மை, தைரியம், தயாள குணம், உதார குணம், அன்பு, நேர்மை, சத்தியம், ஆகிய சத்துவ குணங்களை அபிவிருத்தி செய். ஆசை, பொருமை, சினம், பேராசை ராகத்வேஷம் மற்றும் உன்னுடைய ஒழுக்க பூர்ணத்துவம், ஆத்மானுபூதி மார்க்கத்திலே குறுக்கே நிற்கும் தேவையில்லாத குணங்கள் ஆகிய எல்லா கெட்ட குணங்களையும் ஒழித்து விடு. ஒழுங்கிலே பூரணத்துவமே ஆத்மானுபூதிக்கு ஒரு ஆரம்பத் தேவை. சாதனையின் இந்தப் பக்கத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டால் சாதகனுக்கு எவ்வளவு பழக்கமும் எந்த பயனையும் உடையதாக இருக்க முடியாது. எல்லோரையும் நேசி. ஒவ்வொரு வருக்கு முன்பும் சாஷ்டாங்கமாக நமஸ்கரி. பணிவுள்ளவனுக ஆகு. அன்பான, இனிமையான, நேசமான வார்த்தைகளைப் பேசு. சுயநலம், கர்வம், ஆணவம், வெளிவேஷம் இவைகளை விட்டுவிடு. உன்னுடைய கீழான குணத்தை புனருத்தாரணம் செய்.

ஆத்ம சோதனை மூலமாக நீ உண்மையான சுதந்தரத்தையும், விடுதலையையும் விரும்புகிருயா அல்லது உயர்ந்த பொருள்களைப்பற்றி அறிந்து கொள்ள வெறும் ஆவல் மட்டும் உடையவனுக இருக்கிருயா அல்லது பணம், பெயர், புகழ் ஆகிய வற்றை ஆத்மீக சக்திகளைக் காட்டிப் பெற வேண்டு மென்கின்ற மறைந்து கிடக்கும் ஆசையுள்ளவனுக இருக்கிருயா என்பதைக்கண்டு பிடி. மனப்பூர்வ முடையவனுக ஆகு. நீ பரிணமம் அடைந்தவர் களுடனும், ஆத்மீக அலைகளால் சக்தியூட்டப்பட்ட சூழ்நிலையிலும் இருக்கும்போது உன்னிடம் எல்லா யோக்கியதாம்சங்களும் தானுகவே வந்தடையும்.

# பெண்களிடம் உள்ள நிலை

தெய்வ அன்னையின், சக்தி அல்லது காளியின் அம்சமாக விளங்கும் எல்லா பெண்மணிகளுக்கும் என்னுடைய மௌன வந்தனங்களும், சாஷ்டாங்க நமஸ்காரங்களும் உரித்தாகுக. அவர்கள் சமூகத்தின் முதுகெலும்பும் மதத்தின் தாங்கிகளும் ஆவர். அவர்கள் ஊக்குவிக்கப்பட்டால் அகில உலகமும் ஊக்குவிக்கப்படும். அவர்களிடம் ஒரு விசேஷமான மதசம்பந்தப்பட்ட இயற்கை சக்தி இருக்கிறது. அவர்களிடம் இயற்கையான, உடன் பிறந்த தெய்வீக குணங்கள் இருக்கின்றன. முற்காலத்தில் இந்துப் பெண்மணிகளும் பிரம்மச்சரிய வாழ்க்கை நடத்தியும், ரிஷிகளுக்கு சேவை செய்தும், ஆத்மாவைத் தியானித்து பிரம்ம ஞானத்தை அடைந்தும் வந்தனர். பழைய காலத்தில் பெண்களில் பல சித்தர்களும், பிரம்ம ஞானிகளும், வைராகிகளும், பக்தர்களும், முன்னேற்றமடைந்த யோகிகளும் இருந்தனர். அவர்களுடைய தூய்மை, பூரணத்துவம் ஆகியவற்றின் மூலமாக அவர்களுடைய ஆத்மீக சக்தியைப் பயன்படுத்த வேண்டிய சந்தர்ப்பங்கள் வரும்போது அவர்களால் அதிசயிக்கத்தக்க காரியங்களைச் செய்ய முடிந்தது. இறந்தவர்களுக்கு உயிர் கொடுத்த, காலையில் சூரியோதயத்தை நிறுத்திவைத்த, பஞ்சபூதங்களையும் கட்டுப்படுத்திய சம்பவங்கள் இருக்கின்றன. இன்றுகூட நீங்கள் ரிஷிகேசம், ஹரித்வாரம், பிருந்தாவனம், காசி மற்றும் இந்தியாவிலுள்ள இதர புண்ணிய க்ஷேத்திரங்களிலும் உலகைத் துறந்து, யோக வழியைக் கைக்கொண்டுள்ள பல பெண்மணிகளைப் பார்க்கலாம்.

நான் யாரையும் வெறுக்கவில்லை. நான் ஒரு பெண்மணியை என்னுடைய சொந்த ஆத்மா

வாகவே கருதுகிறேன். நான் பெண்களை அன்னை துர்க்கை அல்லது தெய்வீக அன்னையாகக் கருதுகின்றேன். பூமியில் பெண்மணிகள் பலம் பொருந்திய சக்திகள். மதமானது அவர்களுடைய பக்தியால் பலப்படுத்தப்படுகிறது. சீக்கிரம் உணர்ச்சிவசப்படக் கூடிய இளைஞர்களுக்கு நான் இந்த பெண்களின் ஸ்தூல சரீரத்தின் அழியும் தன்மையைப்பற்றி ஏராளமாக எழுதியிருக்கிறேன். இது அவர்களிடம் ஒரு திடமான வைராக்கியத்தை ஏற்படுத்தவும் அவர்களுடைய இந்திரியங்களையும் மனதையும் கட்டுப்படுத்த உதவுவதற்காகவும் தான். மனிதர்களிடம் வைராக்கியத்தைத்தூண்டும் பொருட்டு பெண்களைப்பற்றி எதிர்மறையான வர்ணனைகளை கொடுத்திருந்த போதிலும், அவர்களிடம் எனக்குப்பெரு மதிப்பு உண்டு. நான் அவர்களுக்குச் சேவை செய்கிறேன்; பஞ்சாபிலும், உ. பி.யிலும் பல்வேறு சங்கீர்த்தன சம்மேளனங்களில் அவர்களுடன் சங்கீர்த்தனம் செய்திருக்கிறேன். இரண்டு அல்லது மூன்று நாட்கள் விடுமுறை கிடைத்தாலும் கூட பல பெண்கள் டெல்லியிலிருந்தும் மற்றும் இதர இடங்களிலிருந்தும் ஆஸ்ரமத்திற்கு வருகின்றனர். அவர்கள் கோஷ்டிகளாக வந்து தினசரி சத்சங்கத்தில் கலந்து கொண்டு இந்த அமைதியையும், பேரானந்தத்தையும் அனுபவிக்கின்றனர்; ஆஸ்ரமத்தில் நாட் கணக்கிலும் வாரக்கணக்கிலும் தங்கியிருக்கின்றனர்.

## பெண்மணிகள் உலகத்தைத்துறக்க வேண்டுமா ?

இளமங்கையர் சந்நியாச மார்க்கத்தில் சமாளித்துக் கொண்டு செல்வதென்பது கடினம் என்பதில் ஐயமில்லை. அவர்களுக்கு ஆண்களைப் போன்ற அதே சுதந்திரமும் விடுதலையும் இல்லை.

ஆண்கள் எந்த வழியில் வேண்டுமானுலும் வசித்துக் கொண்டும், சென்றுகொண்டும், எங்குவேண்டு மானுலும் படுத்துறங்கிக் கொண்டும் இருக்க முடியும். அவர்கள் வீட்டிற்குவீடு பிச்சைக்குச் சென்று தங்களேப் பாதுகாத்துக்கொள்ள முடியும். ஆனுல் பெண்கள் மிகுந்த பாதகமானதொரு நிலேயி லிருந்து அல்லல்படுகின்றனர். இந்தியாவில் பெண் களுக்கென்று, அவர்கள் அமைதியாக இருந்து உலகிற்குச் சேவை செய்து பரிணமிக்கக்கூடிய சௌகரியமுள்ள எடுத்துக்காட்டான ஸ்தாப னங்கள் அதிகம் இல்லாதது ஒரு பரிதாபகரமான நிலேயாகும். ஆத்மீகத் துறையில் பற்றுகொண்ட பெண்களுக்கு எல்லா சுக சௌகரியங்களும் கொண்ட எடுத்துக்காட்டான ஸ்தாபனங்கள் இந்நேரத்தில் மிகவும் அத்தியாவசியமாக இருக் கிறது. பல காலமாக இந்த முக்கியமான வேலே ஒதுக்கப்பட்டு வந்துள்ளது.

சில பண்பட்ட பெண்மணிகளிடமிருந்து துறவுப்பாதையை மேற்கொள்ள விருப்பம் தெரி வித்து எனக்குக் கடிதங்கள் வருகின்றன. 1936ல் நான் ஒரு பக்தைக்கு என்னுடைய உதவிகரமான ஆலோசனேகளேக்கூறி ஒரு பதில் விடுத்தேன்:-

நீ அமைதியாக இருந்து பரிணமிக்கக்கூடிய நிலேயில் எந்த ஒரு ஆஸ்ரமத்தையும் நான் உனக்கு பத்திரமாகக் கூறஇயலாது. நீ உன்னுடைய பெற்றேர்களிடமிருந்து ஒரு நல்ல தொகையைப் பெற்றுக் கொள்ளவேண்டும். அதை ஒரு பாங் கியில் இட்டுவை. அந்த முதலீட்டிலிருந்து கிடைக்கும் வட்டியைக்கொண்டு நீ ஒரு எளிய வாழ்க்கையை நடத்தலாம். இதுவே மிகச் சிறந்த வழி. அப்பொழுதுகூட, முன்னேறிய ஆத்மாக் களும், மகாத்மாக்களும் இருக்கின்ற ஒரு ஆஸ்ர

மத்தில் வசித்துவா, அல்லது மதாசாரத்துடன் கூடிய முதிய பெண்கள் சிலருடன் வசி. உன்னுடைய நேரம் முழுவதையும் உபநிஷத்துக்கள், கீதை ஆகியவை படிப்பதற்கும், சாதனைக்காகவும் செலவிடு. கீர்த்தனத்திலும், பஜனையிலும் தனித் தேர்ச்சிபெறு. ஆத்மீக வழியில் முன்னேறும் பொழுது நீ கிராமத்துக்கு கிராமம் சென்று மக்களை உயர்த்தி அவர்களிடம் பக்தியை வளர்க்கலாம். நீ அம்மாதிரி செய்தால் உலகம் உன்னை வணங்கும். இது முடியாவிட்டால் நீ உன்னுடைய சகோதரனிடமிருந்து ஒரு மாதாந்தரத் தொகையைப் பெற்றுக்கொள்ளலாம். இது உன்னை அவரைச் சார்ந்திருக்கச் செய்யும்; நீ சார்ந்து வாழும் மனப்போக்கை வளர்ப்பாய். நீ ஒவ்வொரு மாதமும் அவருடைய தயவை எதிர் பார்த்துக் கொண்டிருப்பாய். இது பத்திரமான தல்ல.

துறவுப்பாதையிலே செல்லவேண்டுமென்று நீ விரும்பி, ஆனால் உன்னை நிர்வகித்துக்கொள்ள சுதந்தரமான வழிக்கு ஏற்பாடு செய்ய முடியா விட்டால், நீ சில பெண்களுக்கு தனிப்பட்ட சிக்ஷை சொல்லிக் கொடுக்கலாம். அவர்களுடைய பெற்றோர்கள் பதிலுக்கு உன்னை ஆதரிப்பார்கள். நீ ஒரு யோக்கியதாம்சம் பெற்ற ஆசிரியையாகவோ அல்லது ஒரு தாதியாகவோ ஆகவேண்டும் என்று நான் கருதவில்லை. அது உன்னுடைய நேரம் முழுவதையும் எடுத்துக் கொள்ளும்; உனக்கு கடுமையான, முறையான சாதனை செய்ய பலமோ, சக்தியோ இல்லாமல் போய்விடும். நாளடைவில் இவ்வுலகின் தூண்டுதல்கள் உன்னை பாதிக்கும். வைராக்கியம் மெதுவாக மறைந்துவிடும். படாடோபமும், சௌகரியங்களும் உள்ளே நுழையும். நீ லக்ஷியத்தைத் தவறவிட்டுவிடுவாய். நீ சௌகரிய

மான வாழ்க்கையை நடத்திக்கொண்டு, உலகாயத மக்களுடன் சகஜமாகக் கலந்து விட்டால் உனக்கு இப்போதுள்ள இதே உள்ளத்தையும் பாவத்தை யும் உன்னுல் வைத்திருக்க இயலாது. விடாப்பிடி யாக இரு. உனது மனதை ஒருபொழுதும் மாற்ருதே. கடவுளிடம் பூரண நம்பிக்கை கொள்.

## பெண்களுக்குச் சேவை

மனப்பூர்வமான பெண்களுக்குச் சேவை செய்யும் இந்த இயக்கம் என்னுடைய மனதிற்கு மிகவும் பிடித்திருக்கிறது. நான் பணம் வைத்துக் கொள்வதில்லை. பொது ஜனங்களிடமிருந்தும், ராஜாக்களிடமிருந்தும், ஜமீன்தார்களிடமிருந்தும், வியாபாரிகளிடமிருந்தும் பணம் திரட்டுகின்ற (சாமர்த்தியம்) தந்திரம் எனக்கு இல்லை. சேவையின் பெயரில் பணம் திரட்டுவதற்காக நான் வெளியில் போவதில்லை. எப்பொழுதாவது பக்தர்களிடமிருந்து ஒருசிறிது பணம் வரும். இந்த யதேச்சா நன் கொடையை என்னைச்சுற்றியிருப்போருடைய, பல் வேறு கேந்திரங்களிலிருந்து என்னுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர்களுடைய ஆத்மீக முன்னேற்றத்திற்காகச் செலவிடுகிறேன். உலகின் பல பகுதிகளில் என்னுடைய புத்தகங்கள் விற்கப் படுகின்றன, ஆனுல் வெளியீடுகளிலிருந்து நான் எதையும் சம்பாதிப்பதில்லை. நான் தாராளமாக என்னுடைய புத்தகங்களை இலவசமாகக் கொடுத்து விடுகிறேன். எனக்கு வியாபாரம் தெரியாது. பெண்களுக்கென்று ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பிக்க என்னிடம் திரவிய சாதனங்களோ, வசதிகளோ இப்போது கிடையாது.

சில வைதீக ஜனங்களும், சந்நியாசிகளும், பெண்கள் துறவுப்பாதைக்கு அருகதையுடையவர்கள் அல்ல என்று கூறுகின்றனர். அவர்களும் யோக, துறவு மார்க்கத்தைக் கடந்து செல்ல தகுதியுடையவர்களே. பெண்களுக்கென்று ஒரு ஆஸ்ரமத்தை ஆரம்பிப்பதின்மூலம் மனிதவர்க்கத்திற்கு ஒரு உண்மையான சேவை செய்வதில் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று நான் பலதடவைகள் நினைத்ததுண்டு. அது உலகிற்கு ஒரு வரமாக இருக்கும். பெண்களுக்கென்று தனிப்பட்ட ஒரு லக்ஷிய ஸ்தாபனத்திற்கு உலகத்தாரிடமிருந்து போதிய ஆதரவு இல்லாத நேரத்தில் நான் பல, கற்ற, பண்பாடு அடைந்த பெண்மணிகளை ஆஸ்ரமத்தில் இருக்க அனுமதித்திருக்கிறேன். நான் அவர்களுடைய தேவைகளை நேரில் கவனித்து அவர்களை யோகம், பஜனை, கீர்த்தனை ஆகியவற்றின் எல்லா வகைகளிலும் பயிற்சி கொடுக்கிறேன். பலர் யோகப்பயிற்சிகளைப்பெற்று அளவு கடந்த பலனை அடைந்துள்ளனர்.

அவர்களில் வெளிநாடுகளிலிருந்து வந்திருக்கும் பலரும் இருக்கின்றனர். நான் அவர்களுக்கு சந்நியாச ஆஸ்ரமத்திற்கு தீக்ஷை கொடுக்கிறேன். ஆஸ்ரமத்தில் சிறிது பயிற்சிபெற்ற பிறகு அவர்கள் பல்வேறு கேந்திரங்களுக்கும் திரும்பிச் சென்று அவர்களுடைய சாதனையையும், உலகிற்குச் சேவையும் தொடர்ந்து செய்கின்றனர். உலகின் எல்லா பாகங்களிலும் தெய்வநெறிக் கழகக் கிளைகளில் பெண்கள் பகுதிகள் இருக்கின்றன; அங்கு அவர்களுக்கு தங்களுடைய சொந்த பரிணாமத்திற்கு மட்டுமின்றி பெண்வர்க்கத்திற்கு சேவை செய்யவும் போதுமான வாய்ப்பு உண்டு. ஆஸ்ரமத்தில் தங்கியிருக்கும் பெண்மணிகளுக்கு எல்லா சுகசௌகரியங்களும் இருக்கின்றன. அவர்களுக்கு

எல்லா வசதிகளும், விடுதலையும், சுதந்தரமும் இருக்கின்றன. பெண்களுக்கென்று தனிப்பட்ட ஒரு ஆஸ்ரமம் இல்லாத நிலையில் அவர்களுடைய ஆத்மீக பரிணமத்திற்கு இது ஒரு எடுத்துக் காட்டான கேந்திரமாக ஆகிவிட்டது. அவர்கள் எல்லோரும் வளமுற்று அமைதியையும், தெய்வீக மகிமையையும், அற்புதங்களையும் அனுபவிப் பார்களாக.

## சந்நியாசம் எடுத்துக்கொள்ள விரும்புவோருக்கு

உலகின் பல பாகங்களிலும் உள்ள பல மனப் பூர்வமான உண்மையைநாடிச் செல்பவர்கள் அடிக்கடி எனக்கு தாங்கள் துறவுப்பாதை அல்லது சந்நியாச ஆஸ்ரமத்தை மேற்கொள்ள விருப்பம் தெரிவித்து எழுதுகின்றனர். உணர்ச்சி வசப்பட்ட ரகத்தைச் சேர்ந்த வைராக்கியம் காரணமாக, (அப்பேர்ப்பட்ட வைராக்கியம் விசேஷ காரணத் தினல் அல்லது வேறு விதத்தினல் தூண்டப்பட் டிருக்கக்கூடும்), இவ்வுலகைத் துறக்கின்றோர்களில் பலர் கடைசியாக துறவு உணர்ச்சிக்குத் தக்கவாறு இருக்கத்தவறி, அதன்பலனக உலகிற்குத் திரும்பிச் சென்று அல்லது சந்நியாச ஆஸ்ரமத்திற்கே ஒரு அவமானமாக ஆகிவிடுவதை நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். உண்மையான வைராக்கியமும், தகிக்கும் ஆவலும் உள்ளவர்களுக்கு நான் உடனடி யான துறவை சிபாரிசு செய்கின்றபொழுது மற்ற வர்களுக்கு அவர்கள் தங்களுடைய வைராக் கியத்தைப் போதுமான அளவு அபிவிருத்திசெய்து கொள்ளவும், அவ்வழிக்கு அவர்களைத் தயார் செய்துகொள்ளவும் போதிய சந்தர்ப்பத்தை அவர் களுக்குக் கொடுக்கும் பொருட்டு நான் பின்வரு மாறு உபதேசிக்கின்றேன்:—

உலகாயதப்பெருமை மதிப்பற்றது. இது ஒரு குழந்தை விளையாட்டு. ஆத்மீகத் துறையில் நீ ஒரு பெரிய மனிதனாக ஆகவேண்டும். உலகத்தில் இரு, ஆனால் உலகாயத எண்ணத்தோடு இருக்காதே. கல்லூரிப்படிப்பு மட்டும் உன்னை உயர்ந்தவனாக்கி விடமுடியாது. நீ இவ்வுலகில் இருக்கும்பொழுது உன்னை நன்றாக சந்நியாசத்திற்குத் தயார் செய்து கொள். உனக்கு வைராக்கியம் இருக்கிறது, ஆனால் இவ்வழியில் அனுபவம் இல்லை. நான் உனக்கு எந்த வினாடியிலும் சந்நியாசம் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். நீ என்னிடம் ஒரு சந்நியாசியாக இருப்பதாக வைத்துக்கொள்; உன்னுடைய தாயாரும், மனைவியும், சகோதரியும், சகோதரர்களும் மனமொடிந்து போய் என் குடீருக்குமுன்பாக கதறியழும் பொழுது அவர்களைக் காண உன்னிடம் நெஞ்சுரம் இருக்கிறதா? நன்றாக யோசித்து இந்த விஷயத்தை முடிவு செய்யவும். முதலில் மோகத்தை அழி. இடையிடையே வெளியே சென்று ஓரிரண்டு மாதங்கள் உன்னுடைய குடும்பத்தைவிட்டு ஒரு தனிமையான இடத்தில் இருந்துகொண்டு உன்னுடைய மனம் உன்னுடைய ஜனங்கள், உன்னுடைய சொத்து, சொந்த ஊர் ஆகியவற்றின் மீது அடிக்கடி செல்கிறதா என்று பார். உன்னுடைய மனோபலத்தைப் பரீட்சித்துப்பார். வெறும் உணர்ச்சியும், உற்சாகமும் உனக்குத்துறவுப் பாதையில் அவ்வளவு பயன்படாது. சந்நியாசப் பாதையானது பல இன்னல்கள் நிறைந்தது. ஆனால் அசைக்கமுடியாத உறுதியும், பொறுமையும், மனோபலமும் உடைய மனிதனுக்கு இது சந்தோஷமும் பேரானந்தமும் அமைதியும் நிறைந்ததாகும். இவ்வுலகில் ஒரு சந்நியாசியின் வாழ்க்கையே மிகச் சிறந்த வகையான வாழ்க்கையாகும். ஒரு உண்மை

யான சந்நியாசிதான் மூவுலகங்களுக்கும் அதிபதியாவான். ஒரு சாதாரண அபிலாஷிகூட மூவுலகங்களுக்கும் ஒரு சக்ரவர்த்தியாவான். தைரியத்தைக் கைக்கொள். தைரியமாக இரு. இவ்வுலகம் ஒரு வெறும் மாயை என்பதை உணர். உன்னுடைய உண்மையான சச்சிதானந்த ஸ்வரூபத்தை அறி.

ஒரு அமைதியான அறையில் ஒரு வினாடி உட்கார். விசாரித்துப் பார். எண்ணிப்பார்த்துக் கண்டுபிடி. ஆத்மாவில் இருப்பதின் மகிமையை உணர். உள்ளே பார். உன்னுடைய குற்றம் குறைகளையும் பலஹீனங்களையும் நீக்க முயற்சிசெய். இது உண்மையான சாதனை. உன்னுடைய வாழ்க்கையின் ஆரம்ப நிலைகளில் உன்னால் முடிந்த அளவு தனிமையில் கடுமையான சாதனை செய்; அத்துடன் மகாத்மாக்களுக்கும், நோயுற்றோருக்கும், ஏழைகளுக்கும் ஒரு சிறிது சேவையும் செய்து வரவும். யோக வகுப்புக்கள் நடத்துவதுபற்றியும், உபதேசம் செய்வதுபற்றியும், பெரும் மாநாடுகளுக்குத் தலைமை தாங்கி நடத்துவதுபற்றியும் எண்ணாதே. உலகப் பயணத்தைப்பற்றியும் அகில உலக போதகனாக ஆவதுபற்றியுமான எண்ணங்களுக்கு இடம் கொடாதே. அது போன்ற நம்பிக்கைகள் எல்லாம் வீழ்ச்சியிலேயே வந்து முடியும். நீ இளமையாக இருக்கும்போது கடுமையான சாதனையும் ஆழ்ந்த அத்யயனமும் செய். நடந்தது, நடக்கப் போவது ஆகியவற்றை மறந்துவிடு. இயேசுகிறிஸ்து பல வருஷங்கள் தன்னை தனிமையில் மறைத்துக் கொண்டார். அவர் தன்னுடைய ஆத்மீக சக்திகளாலும் ஒளியாலும் உலகில் மின் சக்தியைப் பாய்ச்சவும், அதை பிரமிக்கச்செய்யவும் மூன்றுண்டு காலம் வெளியே வந்தார் ஆகாயத்தில் வெடிக்கும் வெத்து வேட்டுக்கள் பறவைகளை ஒன்றும் செய்ய

முடியாது. மதாசாரமும், ஆத்மீக அபிவிருத்தியும் இல்லாத மனிதனுடைய வார்த்தைகள் வெத்து வேட்டுக்களைப் போன்றவையே. அவைகளுக்கு உலகாயத உள்ளங்களில் ஒருவித செல்வாக்கும் இருக்காது. ஒரு சக்தி பொருந்திய உருவமாக ஆகு. தூய எண்ணத்தின் மூலமாக (சத்சங்கல்பம்) நீ இந்த உலகாயத உலகத்தை புரட்சி செய்விக்கலாம். பெயர், புகழ் அல்லது சௌகரியங்கள், வசதிகள் ஆகியவற்றால் தூண்டப்பட்டு விடாதே. கடினமான வாழ்க்கையை நடத்து.

## சேவையையும் தியானத்தையும் சேர்

நீ ஒரு வனத்திலோ அல்லது குகையிலோ வசிக்கும்பொழுது ஒரு கஷ்டம் இருக்கிறது. நீ ஒரு புதிய சீடனாகையால் உன்னுடைய சக்தியை எப்படி ஒழுங்குபடுத்துவது, தினசரி வழக்கத்தை எப்படிச் சரி செய்வது, நேரத்தை லாபகரமாக எப்படி பயன்படுத்துவது என்பவைகள் உனக்குத் தெரியாது. சோர்வு தன்னைத் தானே வரும்பொழுது அதை எப்படி சமாளிப்பது என்பது உனக்குத் தெரியாது. ஆரம்ப சாதகர்கள் தியானத்திலேயே இருபத்து நான்கு மணி நேரத்தையும் கழிக்க முடியாது. அவர்கள் ஆரம்பத்தில் உள்ளத்தூய்மைக்கும் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அவர்கள் வேலையையும், தியானத்தையும் ஒன்று சேர்க்க வேண்டும். என்னுடைய இந்த வாழ்க்கையில் அனுபவப்பட்டவரையிலும் முற்றிலும் தியானத்திலேயே எப்போதும் இருந்து அதிலிருந்து சகல வல்லமைகளுடனும் வெளிக்கிளம்பி வந்தவர்களை நான் ஒருபோதும் கண்டதேயில்லை. நான் எதை வற்புறுத்த விரும்புகிறேன் என்றால் ஆரம்ப சாதகர்கள் தனிமையில் நல்ல முறையில் காலந் தள்ளமுடியாது என்பதைத்தான். தனிமையில்

நீண்ட காலம் தங்கிய பிறகு அவர்கள் தாமஸ குண மடைந்து அவர்களுடைய திறமைகளேயும், மறைந்து கிடக்கும் சக்திகளேயும் இழந்து விடுகின்றனர்.

## பொருளாதார சுதந்தரம்

நான் சந்நியாசிகளின் வாழ்க்கைகளை ஊன்றி கவனித்து ஒரு சிறிது பணம் சாதகனுக்கு அவனுடைய சாதனையிலும், பரிணமத்திலும் உதவுகிறது என்கின்ற உறுதியான முடிவுக்கு வந்திருக்கின்றேன். சாதனைக் காலத்தில் பொருளாதார சுதந்திரம் மன அமைதியையும், பலத்தையும் கொடுக்கும். நீ அத்தொகையை அதிகரிக்கவும், பாங்கி நிலுவையைச் சேர்க்கவும் முயற்சிக்கும்பொழுதுதான் வீழ்ச்சி வந்தடைகின்றது. இருந்த போதிலும், உறுதியான சகிப்புத்தன்மையும், பொறுமையும், நல்லாரோக்கியமும் உனக்கு இருந்து உன்னுடைய வைராக்கியம் தீவிரமானதாகவும், பொறுத்துக் கொள்ளக்கூடிய ரகமாகவும் இருந்து, நீ மனித சமுதாயத்திற்குச் சில தன்னலமற்ற சேவை செய்ய வேண்டுமென்ற விருப்பமுடையவனாகவும் இருந்தால் நீ பணத்தைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. நீ இவ்வுலகை இதே வினடியில் துறந்துவிடலாம். உன்னுடைய மதிப்பு மிக்க வாழ்க்கையை மேலும் மேலும் சம்பாதிப்பதிலும், ஏராளமாகச் சேர்த்துவைப்பதிலும் வீணக்கிக் கொண்டிருப்பது விவேகமானதல்ல. மனப்பூர்வமான சாதகர்களுக்கு எல்லாம் எங்கும் ஏராளமாக இருக்கின்றது. உலகத்தைச் சீக்கிரம் விட்டுவிடு. உலகாயத உள்ளங்கொண்ட நபர்களின் சேர்க்கையிலிருந்து பற, பறந்தோடிவிடு. நகரங்களின் சந்தடியிலிருந்தும், உக்கிரமான உலகிலிருந்தும் வெளியேறிவிடு. ரிஷிகேசம் போன்ற தனிமையான

இடங்களுக்கு சீக்கிரமாக ஓடு. நீ ஆபத்து வட்டாரத்திலிருந்து வெளியே வந்துவிடுவாய்.

நல்ல சாதுக்கள் எங்கும் நன்ருகக் கவனித்துக் கொள்ளப்படுகிருர்கள். மகாத்மாக்களின் உடையில் வருகின்ற பிச்சைக்காரர்கள்தான் பொது மக்களுக்கு உபத்திரவமாக ஆகிவிடுகின்றனர். ஒரு சாதாரண பார்வையின் மூலம் மகாத்மாக்களிலிருந்து பிச்சைக்காரர்களை வேறுபடுத்திப்பார்ப்பது பொதுமக்களுக்கு அவ்வளவு சுலபமல்ல. ஆனுல் உண்மையான மகாத்மாக்களை அவர்களுடைய பேச்சு, நடை, செய்கை ஆகியவற்றிலிருந்து கண்டு பிடிப்பது நிச்சயம் முடியும். இந்நாட்களில் இல்லறத்தார்களிடம் சிரத்தை குறைந்து இருக்கிறது. சாதனையில் இடையூறுகளைத் தவிர்ப்பதற்காக நான் மாணுக்கர்களை அவர்களுடைய தேவைகளுக்காக தங்களிடம் போதுமான பணம் வைத்துக்கொள்ளும்படி சொல்கிறேன். பிச்சையெடுக்கும் மனோபாவத்திற்கு இடம் கொடுக்கவேண்டாம். முடியுமானுல் அத்தியாவசியத் தேவைகளுக்குமட்டும் வசதி செய்துகொள் அல்லது ஏதாவது ஆஸ்ரமம் அல்லது மத ஸ்தாபனங்களில் சேர்ந்துகொள்.

## சேவையின் முக்கியத்துவம்

கெட்ட குணங்களையும் உலகாயத சம்ஸ்காரங்களையும் தாண்டுவதற்கான சிறந்தமொரு வழியாக நான் மாணுக்கர்களை சில மாதங்கள் அல்லது வருஷங்கள் சுறுசுறுப்பான சேவையில் தங்களை மூழ்கடித்துக் கொள்ளும்படிச் சொல்கிறேன். இது அவர்களை கடந்ததை முற்றிலும் மறக்கச் செய்து அவர்களுடைய முழுச் சக்தியையும், நேரத்தையும் ஆத்மீக முன்னேற்றத்திற்குச் செலவழிக்க வகை செய்கிறது.

அவர்கள் தங்கள் உடலையும் சுற்றுப்புறங்களையும் மறந்து விடுகின்றனர். அவர்கள் அவர்களுடைய மனதை எல்லா பெயர்களுக்கும், உருவங்களுக்கும் பின்னுல் மறைந்திருக்கும் சாரத்தைத் தானுகவே பார்க்கப்பயிற்றுவிக்கின்றனர். அவர்கள் வாழ்வின் எல்லா நிலைகளிலும் சுகத்திலும், துக்கத்திலும் உள்ளத்தை ஒரு சீரான நிலையில் வைத்திருக்கக் கற்றுக்கொள்கின்றனர். பயிற்சிக்காலம் மாணவர் களுடைய பரிணுமத்திற்கும், தரத்திற்கும் தக்கபடி வித்தியாசப்படும்.

என்னுடைய முறையில் ஒவ்வொரு மாண வனும், சமையல் வேலை, சலவை வேலை, சிகிச்சை செய்தல், சாதுக்களுக்கும், மகாத்மாக்களுக்கும் நோயுற்ருேருக்கும் சேவை செய்தல் ஆகியவற்றை எல்லா வகையிலும் இயன்ற அளவு கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் ஆழ்ந்த படிப்பு, தியானம், ஜபம், பிரார்த்தனைகள் ஆகியவற்றில் மணிக்கணக் காக செலவிட வேண்டும். வேலையின்போது கூட அவர்கள் மானசிக ஜபம் செய்ய வேண்டும். அவர்கள் பல்வேறு நபர்கள், சூழ்நிலைகள் ஆகியவை களுக்குத்தக்கப்படி அனுசரித்து, தகுதியுடையவர் களாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அவர் கள் எல்லோரும் தட்டெழுத்தும் முதலுதவியும்கூட கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் பஜனைகளும், கீர்த்தனைகளும் கற்றுக்கொள்வதுடன் யோகம், வேதாந்தத்தைப்பற்றி அழகான வியாசங்களும், கட்டுரைகளும் தயார் செய்யவேண்டும். துரிதமான ஆத்மீக பரிணுமத்திற்காக சாதனையின் முக்கிய அம்சங்களனைத்தையும் நான் அவர்களுக்குக் குறிப்பிடுவதுடன் அவர்களுக்கு எல்லா வசதி களையும், சௌகரியங்களையும் செய்து கொடுக் கிறேன். நான் அவர்களிடம் சிறிது முன்னேற்றம்

காணும்பொழுது அவர்களைச் சில குளிர்ந்த இடங்களுக்கு ஆழ்ந்த தியானத்திற்காக அனுப்பிவிடுகிறேன்.

## சந்நியாசிகளும் அரசியலும்

அரசியல் கிளர்ச்சிக்காலமாகிய இந்நாட்களில் சந்நியாசிகள்கூட அரசியல் தலைவர்களால் கிளர்ச்சியில் கலந்துக்கொள்ளும்படி சொல்லப்படுகின்றனர். இது ஒரு வருந்தத்தக்க தவறாகும். இத்தலைவர்கள் தூய நிவிருத்தி மார்க்க வாழ்க்கையின் பெருமையையும், முக்கியத்துவத்தையும் பற்றிப் புரிந்து கொள்ளாமல் இருக்கின்றனர். இந்த சந்நியாசிகள் இமயமலைக் குகைகளிலிருந்து வந்த போதிலும் தங்கள் எண்ண அலைகளால் உலகைச் சுத்தப்படுத்துகின்றனர். அவர்கள் உலகிற்கு சற்று அதிகமாகவே நல்ல முறையில் உதவிசெய்கின்றனர். என்னுடைய துறை ஆத்மீக வழியே. அரசியல் வாதிகளும், விஞ்ஞானிகளும் அவரவர்கள் துறையில் வேலை செய்வார்களாக. மதத்திலிருந்து அரசியலை உன்னால் பிரிக்கமுடியாமலிருக்கலாம். ஆனால் வெவ்வேறு விதமான மக்கள் அவரவர்களுடைய திறமைக்கும், மனப்பாங்கிற்கும் தக்கபடிவெவ்வேறு துறைகளில் வேலை செய்ய வேண்டும். எல்லாம் அவரவர்களுடைய சொந்தத் துறைகளில் முக்கியமானதும், பெரிதானதுமாகும்.

## குரு அத்தியாவசியந்தானா?

உண்மையான, தாகமுள்ள ஆத்மீக அபிலாஷிகள் மட்டுமே என்னை அறிவர்.

ஆத்மீக வழியில் படுகுழிகளையும், இன்னல்களையும் கண்டு சாதகர்கள் பயப்படத் தேவையில்லை.

சம்சாரச் சேற்றிலிருந்து தங்களுடைய தலையை மேலே தூக்க முயற்சி செய்யும் உண்மையான மாணுக்கர்களைத் தாங்கிநிற்க ஆத்மீக உலகம் முழுதும் தயாராக இருக்கிறது. சாதகர்கள் அவர்களுடைய நல்ல சம்ஸ்காரங்களை ஜபம், முறையான தியானம் ஆகியவைமூலம் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இந்த உலகாயத காலத்தில் கூட கடவுளை மட்டுமே விரும்புகின்ற, செல்வம், குடும்பம், குழந்தைகள் ஆகியவற்றை இறையுணர்விற்காக, அதையே தங்களுடைய ஜீவிதத்தின் சகலமும் என்று கருதி, ஈவிரக்கமின்றி விட்டுவிடத்தயாராக இருக்கின்ற தாகம் நிறைந்த அபிலாஷிகளால் இந்தியா நிரப்பபட்டிருக்கின்றது. இது முனிவர்களும் சந்நியாசிகளும் நிறைந்த நாடு. உண்மையை நாடிச் செல்லுகின்ற ஆயிரக்கணக்கானவர்கள் உலகின் எல்லா பாகங்களிலிருந்தும் என்னிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றனர். பல வெளிநாட்டுக்காரர்கள் யோகிகளையும் மகாத்மாக்களையும் தேடிக்கொண்டு இந்தியா வருகின்றனர். இந்தியாவினுடைய, எல்லா பக்தர்களுடைய மகிமை விளங்குவதாக.

ஆத்மீகப் பாதை பல தடைகளால் நிரம்பியுள்ளது. ஏற்கனவே அந்தப் பாதையைக் கடந்து வந்திருக்கும் குருவானவர் சாதகர்களை பத்திரமாக வழிநடத்திச் சென்று எல்லாவிதமான இடையூறுகளையும் இன்னல்களையும் நீக்கி விடுவார். ஆகவே தனக்கென்று ஒரு குரு அவசியம்.

குருவுடன் நேரடித் தொடர்பு கொள்வதும், அவருக்குச் சேவை செய்வதையும் தவிர, சாதகர்களுக்கு தங்களிடமுள்ள கெட்ட குணங்களையும்

பழைய சம்ஸ்காரங்களையும் தாண்டிச் செல்ல வேறு சக்தி பொருந்தியதொரு மார்க்கமே கிடையாது. குருவின் கருணை குருவால் கடவுள் அல்லது பிரம்மன் இதுதான் அல்லது அதுதான் என்று குறிப்பிட்டுக் காட்டுவதென்பது முடியாததாயிருப்பினும், ஒரு அற்புதமான முறையில், உள்ளேயுள்ள ஆத்மீக சக்தியைப்புரிந்து கொள்ள உதவி செய்கிறது.

## தீக்ஷை மனதை மாற்றுகிறது

தீக்ஷை என்பது வெளித்தோற்றங்களில் ஏற்படுத்தப்படும் வெறும் மாற்றம் மட்டுமல்ல. ஒரு பிரம்மவித்யா குருவினால் தீக்ஷை செய்விக்கப்பட்ட பின்பு சாதகனுக்கு உண்மையான மனமாற்றமும், தூய்மையான பார்வையும், புரிந்து கொள்ளும் தன்மையும் வருகிறது. பல மாணவர்கள், விளைவு களைப்பற்றி எண்ணிப்பார்க்காமல் தங்கள் சொந்த அபிப்பிராயத்திற்கேற்ப, தங்கள் சொந்த சாதனா முறைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். முறையற்ற உணவு, சரியான வழிகாட்டியில்லாத தவறான சாதனை, மெலிந்த தேகத்தில் கடினமான, முட்டாள்தனமான விரதங்கள், தபஸின் பெயரால் உடலைச்சித்திரவதை செய்து கொள்ளல் ஆகிய வைகள் பல சாதகர்களை முற்றிலும் அழித்திருக் கின்றன. ஆகவே பருவ நிலை, சூழ் நிலை, முன்னேற்றம் ஆகியவைகளில் ஏற்படுகின்ற மாறு பாடுகளுக்கேற்ப தக்க தருணத்தில் புத்திமதிகளைக் கொடுப்பதற்கு தனக்கென ஒரு குரு அவசியம்.

ஒரு குருவினுடைய கருணை அவசியம். அதனால் சிஷ்யன் சோம்பேறியாக உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. ஒரு குரு சந்தேகங் களை நீக்கி, சாதகர்களுக்கு மிகவும் பிடித்தமான ஆத்மீக வழியைக் காட்டி, அவர்களை ஊக்குவிப்பார்.

மிகுதியுள்ள வேலை சாதகர்களாலேயே செய்யப் பட்டாக வேண்டும். ஒரு மகாத்மா அல்லது யோகியினுடைய கமண்டலத்திலிருந்து ஒரு துளி ஜலம் பட்டவுடன் ஒருவனுக்கு எல்லா சித்திகளும், முக்தியும் கிடைத்துவிடும் என்று எண்ணுவது அறிவீனம். சமாதியையடைய மந்திர மாத்திரை யொன்றும் கிடையாது. அவ்வாறு நினைப்பது வெறும் மயக்கமே. (ஏமாற்றம் தான்).

## முதலில் தகுதியடை, பிறகு ஆசைப்படு

இந்த உலகத்தில் தன்னுடைய மாணுக்க னுடைய நலன்களை மனப்பூர்வமாகக் கவனித்துக் கொள்ளக்கூடிய ஒரு குருவைக் கண்டுபிடிப்பது ஒரு கடினமான வேலையாகும். இது முற்றிலும் உண்மை. ஆனால் தன்னுடைய குருவின் உபதேசங் களின்படி மனப்பூர்வமாக நடந்துகாட்டுகின்ற ஒரு சிஷ்யனைக் கண்டுபிடிப்பதும் மிக, மிகக்கடினமான காரியம்.

இந்நாட்களில் சிஷ்யர்கள், கர்விகளாகவும், பணிவற்றவர்களாகவும், தான்தோன்றித் தனமாக வும் இருப்பதனால் ஆத்மீகப் பாதையில் அனுபவப் பட்ட எந்த மனிதனும் பயிற்சிக்காக சிஷ்யர்களை ஏற்றுக்கொள்ள விரும்புகிறதில்லை. அவர்கள் குருவுக்குத் துன்பங்களைத்தான் கொண்டு வருகி றார்கள். அவர்கள் குருவினுடைய உபதேசங்களைக் கடைப்பிடிக்க விரும்புகிறாரில்லை. ஒருசில நாட்களில் அவர்களே குருமார்களாகி விடுகின்றனர். இந்த குரு சீடர் பிரச்சினை ஒரு வருந்தத்தக்க விஷயம். உன்னால் ஒரு முதல்தர ரகத்தைச் சார்ந்த குருவைக் கண்டுபிடிக்க முடியாவிட்டால், குறைந்தது இவ்வழியில் சில வருஷங்கள் வாழ்ந்து

வந்திருக்கின்ற, இரக்கமுள்ள, சுயநலமற்ற, உன்னுடைய நலத்திலும், முன்னேற்றத்திலும் விசேஷ அக்கறை எடுத்துக் கொள்ளக்கூடிய ஒருவரை யாவது கண்டுபிடிக்க முயற்சி செய்யவும்.

உணர்வு பெற்ற ஆத்மாக்கள் அரிதல்ல. அஞ்ஞானமும், உலகாயதமும் உடைய நபர்கள் அவர்களை சுலபமாக அடையாளம் கண்டுகொள்ள முடியாது. தூய்மையான, எல்லா நற்குணங்களும் பொருந்திய ஒரு சிலர்தான் உணர்வு பெற்ற ஆத்மாக்களைப் புரிந்துகொள்ள முடியும். அவர்கள் மட்டும் அவர்களுடைய சேர்க்கையால் பயனடைவர். உணர்வு பெற்ற மனிதர்களைத் தேடிக்கொண்டு அங்குமிங்கும் ஓடுவதில் பயனில்லை. கிருஷ்ணபகவான் உன்னிடம் தங்கியிருந்தாலும் நீ அவரை வரவேற்கத் தகுதியுடையவனாக இல்லாவிடில் அவரால் உனக்காக ஒன்றும் செய்ய முடியாது.

இறைவனுக்கும், இந்திரனுக்கும் (ஐசுவரியத்திற்கும்) ஒரே சமயத்தில் சேவை செய்வதென்பது இயலாத காரியம். நீ ஒன்று அல்லது மற்றதைத் தியாகம் செய்யவேண்டியிருக்கிறது. நீ இருளையும் ஒளியையும் ஒரே சமயத்தில் பெறமுடியாது. ஆத்மீகப் பேரானந்தத்தை அனுபவிக்க விரும்பினால் நீ இந்திரிய சுகங்களைத் துறந்துதானாக வேண்டும்.

என்னுடைய சிஷ்யர்களில் ஒருவன் சம்சாரச் சேற்றிலிருந்து தன்னுடைய தலையைத் தூக்கினால் கூட நான் என்னுடைய பிறவிப்பயனை அடைந்தவனாவேன். மனிதவர்க்கத்திற்கு நான் செய்யக்கூடிய மிகப் பெரியசேவை சாதகர்களைப் பயிற்றுவித்து உருவாக்குவதேயாகும். ஒவ்வொரு

யோக மாணவனும், அவன் தூய்மைப்படுத்தப் பட்டு உயர்த்தப்படும்பொழுது, ஆத்மீகத்தின் ஒரு கேந்திரமாக ஆகிறான். அவன் தன்னிடம் தன்னு டைய காந்தசக்தி பொருந்திய தேஜஸின் மூலமாக ஆயிரக்கணக்கான குட்டி ஆத்மாக்களை ஆத்மீக மாற்றத்திற்காகவும், புனர் ஜன்மத்திற்காகவும் கவர்ந்து கொள்வான்.

பொறுப்புகளுடன் இவ்வுலகிலிருந்துகொண் டிருக்கும் மாணக்கர்கள் ஒரு குருவைப்பெறக் காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. அவர்கள் அவர்களுடைய சொந்த இஷ்டதேவதையையும் அவர்களுக்குப்பிடித்த ஒரு மந்திரத்தையும் தேர்ந் தெடுத்துக்கொண்டு சாதனையும் பிரார்த்தனை களும் செய்துவரவேண்டும். உரிய காலத்தில் அவர் களுக்கு ஒரு குரு தோன்றுவார். ஒரு குருவினிட மிருந்து மந்திரத்தைப் பெறுவது சாலவும் சிறந்தது. குருவினிடமிருந்து பெற்ற மந்திரத்திற்கு ஒரு அதிசயமான சக்தி (செல்வாக்கு) உண்டு.

---

## அத்தியாயம் எட்டு

## ஞான யக்ஞம்

### ஆழ்ந்த அனுபவங்கள் எண்ணற்ற வெளியீடுகளாக மலர்கின்றன

நான் புனித கிரந்தங்களைப் படிக்கும்போது முக்கியமான பகுதிகளைக் குறித்து வைக்கிறேன். அந்த விஷயங்களை விடாமல் சிந்தித்து அதை பிரதி பலிக்கின்றேன். இடையூறுகளையும் தடைகளையும் கடந்து செல்ல நான் நல்ல முறைகளைக் கண்டு

பிடித்தேன். நான் என்னுடைய சொந்த அனுபவங்களைப் பதிவு செய்தேன். ஆயிரக்கணக்கானவர் என்னிடம் நேரிலோ அல்லது தபால் மூலமாகவோ தங்களுடைய பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு வந்தனர். நான் என்னுடைய சொந்த அனுபவங்களை ஆதாரமாகக் கொண்டு அபிப்பிராயங்களையும் தகுந்த பரிகாரங்களையும் கொடுத்தேன். நான் ஒரு எண்ணத்தைக்கூட தவறிவிட்டு விடவில்லை, ஏனெனில் நான் என்னுடைய எண்ணங்களனைத்தையும் பதிவு செய்கிறேன். நான் மாணவர்களினுடைய அனுபவங்களுக்குக்கூட முக்யத்துவம் அளிக்கிறேன். நான் அவ்விஷயங்களை உன்னிப்பாகக் கவனித்து அவற்றை மற்ற மாணவர்களுடைய நன்மைக்காகக் குறித்து வைக்கிறேன். இவைகள் உடனே தொலைவிலுள்ள எல்லா சாதகர்களுக்கும் என்னுடைய கடிதங்கள், கட்டுரைகள், செய்திகள் ஆகியவற்றின் மூலமும், மற்றும் பல்வேறு மொழிகளில் உள்ள எல்லா பிரபல சஞ்சிகைகள், வாராந்திர, மாதாந்திரப் பத்திரிகைகள் மூலமாகவும் அடைவதை நான் ஜாக்கிரதையாக கவனித்துக் கொள்கிறேன்.

தத்தளித்துக் கொண்டிருக்கும் அநேக ஆத்மாக்களுக்கு வழிகாட்டியாக இருக்கும்பொருட்டு நான் என்னுடைய அனுபவங்களை ''மனமும், அதன் அற்புதங்களும், அடக்குதலும்'', ''ஆத்மீகப் பாடங்கள்'', ''பழக்கத்திற்கான சூத்திரங்கள்'' ஆகியவைகளாக வெளியிட்டிருக்கிறேன். நான் அந்தப்பாடங்களை ரகம்வாரியாகப் பிரித்து அவற்றை சிறுபுத்தக வடிவிலும், புத்தக வடிவிலும் வெளியிடுகின்றேன். இவ்வாறு என்னுடைய வெளியீடுகள் அநேகமாகவும், கணக்கற்றும் ஆகிவிடுகின்றன. ஒரு சமயம் நான் ஏராளமான புதிய கருத்துக்களை ''யோகப் பயிற்சி'' இரண்டாம் பாகத்திற்குக்

கொடுத்தபொழுது வெளியிடுவோர்கள் ஒரே ஒரு பகுதியாக இருக்கட்டும் என்று எனக்கு ஒரு அபிப் பிராயத்தைத் தெரிவித்தனர். 1933ல் நான் அவர்களுக்கு எழுதினேன் :—

நீங்கள் என்னுடைய வேலையை நிறுத்துகிறீர் கள். "யோகப் பயிற்சி" எனக்குப் புதுப்புதுக் கருத்துகளும் பாடங்களும் தோன்றும்போது பல பாகங்களாக 3, 4, 5 என்று இருக்கட்டுமே. என்னுடைய கண்கள், நன்ருக இருக்கும் வரையில் உண்மைநாடிகளுக்கு என்னிடம் புதுக் கருத்துக் களும், பாடங்களும் இருக்கும் வரையிலும் நான் வேலை செய்வேனுகை. மனித வர்க்கத்திற்குச் சேவை செய்யவேண்டுமென்று எனக்கு இருக்கும் ஆவல், என்னுடைய கண் பார்வையை இழந்து விட்டால்கூட திறமையான சுருக்கெழுத்துக்காரர் களின் உதவியைக்கொண்டு நான் இந்த வெளியீட்டு வேலையைத் தொடர்ந்து செய்யும் அளவுக்கு அவ்வளவு அதிகமானதாகும்.

## என்னுடைய புத்தகங்களில் கருத்துக்கள் திரும்பத் திரும்ப வருவதேன்?

உள்ளம், அறிவு, மனம், உடல் ஆகியவற்றின் இணக்கமான அபிவிருத்தியில் நான் நம்பிக்கை கொண்டுள்ளேன். ஒரு பக்க அபிவிருத்தி அவ்வளவு பயனுள்ளதல்ல. பல்வேறு மதங்கள், மதக்கிளைகள் ஆகியவற்றைச் சேர்ந்த சாதுக்கள், சந்நியாசிகளின் உபதேசங்களில் எதையும் நான் ஒதுக்கித்தள்ளுவ தில்லை. பல்வேறு ருசிகளையும் மனேபாவங்களையும் கொண்டு மாணுக்கர்களின் துரிதமான ஆத்மீக வளர்ச்சிக்காக சாரத்தை நான் எல்லா வழிகளிலி ருந்தும் கொடுக்கின்றேன். இதை நான் "கூட்டு யோகம்" அல்லது "சம்பூர்ண யோகம்" என்று

கூறுகின்றேன். நான் கொடுக்கும் பாடங்கள் என்னுடைய சொந்த ஆராய்ச்சியின் பலனாக வருபவைகளும், ஆயிரக்கணக்கான பக்தர்களின் அனுபவங்களுமாகும்.

என்னுடைய எல்லா புத்தகங்களிலும் நடைமுறைப் பகுதியின் முக்கியமான அம்சங்களை பூர்ண அபிவிருத்திக்காக நான் வற்புறுத்திக்கூறியிருக்கின்றேன். இது சிலரால் ''சொன்னதையே திருப்பிச் சொல்வது'' என்று கருதப்படுகிறது. உண்மையான மாணவர்களுக்கு அவைகள் மிகவும் உபயோககரமானவை. சாதகர்கள் அவ்வாறான உபயோககரமான திருப்பத்தின் மதிப்பையும், முக்கியத்துவத்தையும் பிடித்துக்கொள்ள முடிகிறது. இந்தப்பாடங்கள் சாதகர்களின் உள்ளத்தில் ஆழமான, அழியாத ஒரு பதிவை உற்பத்தி செய்வதைக் கருதியே இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட பொருளைப்பற்றி வர்ணிக்கும்பொழுது, அந்தப் புத்தகம் எல்லா வாசகர்களுக்கும் பயன்பட வேண்டுமென்ற நோக்கத்துடன், தினசரி வாழ்க்கையில் கடைபிடிக்கக் கூடிய முக்கியமான கருத்துக்களை நான் திருப்பிச் சொல்கிறேன். இவைகள் மிகவும் உதவியாக இருப்பதை மெய்ப்பிக்கின்றன. உலகாயத சக்திகளால் அலைக்கழிக்கப்படுகின்ற உள்ளத்தை அடித்து உருவாக்குகின்றன. மனோபலத்தை அபிவிருத்தி செய்து கொள்ளவும் அவைகள் உதவுகின்றன. ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனுடைய ஆறுதல் சுதந்தரம், பூரணத்துவம் ஆகியவற்றிற்கு ஒரு செய்தி இருக்கிறது.

பக்தர்களிடம் என்னுடைய முழுப்புத்தகத் தொகுதியும் இருந்த போதிலும் அவர்கள் அச்சிலே இருக்கும் புத்தகங்களுக்கு அடிக்கடி எழுதுகிறார்கள். அவர்கள் அடிக்கடி எனக்கு ''தங்களுடைய புத்தகங்

களில் நான் காணுகின்ற சிறப்பு என்னவென்றால் அந்த பாடங்கள் ஆத்மீக முன்னேற்றத்திற்கு ஒரு ருசியை ஏற்படுத்துவதோடு, எனக்கு இந்த பாதையில் இயற்கையான ருசியோ, விருப்பமோ இல்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியுமாயினும் அப்பாடங்களில் சிலவற்றைப் பின்பற்ற வேண்டுமென்று தூண்டுகின்றன. பாடங்கள் எனக்காகவே எழுதப்பட்டிருக்கின்றன. அவைகள் என்னுடைய உலகாயத முன்னேற்றத்திற்குக்கூட மிகவும் பயனுடையவைகளாய் இருக்கின்றன. தங்களுடைய ''மனமும், அதன் அற்புதங்களும் அடக்கமும்'' என்ற புத்தகத்தில் ஒரு சில பக்கங்களைப் படித்தபிறகு என்னிடம் ஒரு புது சக்தியும், நம்பிக்கையும் இருப்பதை உணர்கின்றேன்'' என்று எழுதுகின்றனர்.

1935ல் பிரசுரகர்த்தாக்கள் ஒரு பக்தர் என்னுடைய புத்தகங்களில் ஏராளமான ''திரும்பக் கூறுதல்'' இருப்பதாகப் புகார் செய்து எழுதியிருந்த ஒரு கடிதத்தை எனக்கு அனுப்பினர். நான் அவர்களுக்கு எழுதினேன் :—

''திருப்பத்தை ஜாக்கிரதையாகத் தவிர்க்க வேண்டும். நீங்கள் மூன்று அல்லது நான்கு இரவுகள் தெர்மாஸ் பிளாஸ்குகள் நிறைய டீயை வைத்துக் கொண்டு அப்பகுதிகளை நீக்குவதற்குக் கடினமாக பாடுபட்டாக வேண்டும். திரும்பிச் சொல்லுகிறதென பயந்துகொண்டு முக்கியமான பகுதிகளை விட்டுவிட வேண்டாம். பாடங்கள் உலகாயத உள்ளங்களை அடித்துக்கூறும் நோக்கத்திலிருக்கும்போது திரும்பத் திரும்பச் சொல்வது அவசியமாகிறது. இவ்வுலகம் திரும்பித் திரும்பி வரும் ஒரு கோளம். நாம் உலகம் முழுவதையும் மகிழவைக்க முடியாது. கீதை, உபநிஷத்துக்கள், மற்ற கிரந்தங்

கள் ஆகியவற்றில் எல்லாம் திரும்பக்கூறுதல் நிறைந் திருக்கின்றன. இதைத் தவிர்க்க முடியாது. அடிக்காவிட்டால் இயற்கை மாற மறுக்கின்றது. சில வருஷங்கள் கழித்து நாம் புது பதிப்புக்களைக் கொண்டு வரும்போது ஒவ்வொரு புத்தகத்தையும், ஒவ்வொரு பாராவையும், ஒவ்வொரு வாக்கி யத்தையும் முற்றிலும் சரிசெய்து புத்தகத்தை அபிவிருத்தி செய்துவிடலாம். நான் உங்களுடன் கொடுத்திருப்பவை அனைத்தையும் அச்சிட்டு விடுங்கள். ஒரு கால்புள்ளி அல்லது ஒரு வார்த் தையைக்கூட விட்டுவிடவேண்டாம்.'' அக்கடி தத்தை எழுதிய பக்தர் என்னுடைய புத்தகங்கள் திரும்பக்கூறுதல்களால் நிறைந்திருக்கின்றன என்று சொல்கிறார். இருந்தபோதிலும் என்னுடைய கடைசி வெளியீடுகளின் பட்டியலைக் கேட்கிறார்! கடைசியில் அவர் சொல்கிறார்:— ''அது எனக்கு உணவும் ஜீவனும் ஆகும்'' என்று.

நான் எத்தனை பிரசுரகர்த்தாக்களை வேண்டு மானாலும் என்னுடைய புத்தகங்களில் பலவற்றின் புதுப்பதிப்புகளைக் கொண்டுவர அனுமதிக்கும் போது உலகிற்கு அது ஒரு பெருவியப்பாக இருக் கின்றது. ஒரே புத்தகம் இந்தியா, ஜெர்மனி, ஸ்விட்ஜர்லாந்து, இந்தோனேஷியா, அமெரிக்கா ஆகிய தேசங்களிலுள்ள பல்வேறு அச்சகங்களி லிருந்து வெளிவருகின்றன. நான் குறுகிய காலத்தில் மிகஅதிகமான வேலையை விரும்பு கிறேன். 1934—36ல் நான் எழுதிய கடிதங்கள் அச்சகங்களின் மூலம் ஒரு சக்தி பொருந்திய வேலையை நடத்திய முறையை விளக்கும்:—

''நான் 20 நாள், 10 நாள் தயாரிப்புகளை விரும்புகிறேன். நீங்கள் ''தனு-தன்'' அல்லது ''படா-பட்'' வேலை செய்ய முடியுமா? ஒரே

சமயத்தில் நீங்கள் 3 அல்லது 4 புத்தகங்களை எடுத்துக்கொள்ள முடியுமா? பல அச்சகங்களை அமர்த்துங்கள். இதுதான் இங்கு ரிஷிகேசத்தில் உள்ள ஒரு சிறிய அச்சகம் செய்துக்கொண்டு வருகின்ற ''தனு—தன்'' வேலை. செலவினங்களைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். எப்படியோ பட்டியலுக்கு உடனடியாகவோ, நாட்கழித்தோ பணம் கொடுக்கப்பட்டுவிடும்.''

''விஷயத்தை சீக்கிரம் முடிப்பதற்கும் பல அச்சுப்பொறிகளை அமர்த்தவும், ஒரு அச்சகத்தை நம்பி இருக்கவேண்டாம். அச்சுத் தொழில் காரர்கள், தட்டார்கள், தையல்காரர்கள் எல்லோரும் ஒரே ரகத்தைச் சேர்ந்தவர்கள்தான். அவர்கள் வேலையை மெதுவாக, அவகாசத்துடன் செய்கிறார்கள். அவர்கள் தங்களுடைய வாக்குறுதிகளைக் காப்பாற்றுவதில்லை. என்னுடைய நோக்கம் துரிதமான வேலை, ஆத்மீக அறிவை சீக்கிரமாகப் பரப்புதல். இது என்னுடைய அடுத்த கடிதத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

## துரித வேலை எனது கொள்கை

நான் எனது வெளியீடுகளைப்பற்றி கட்டுப்பாட்டுடன் இருப்பவனல்ல. எந்த நல்ல கருத்தும் வாசகர்களுடன் அவர்களுடைய சரியான ஆத்மார்த்த பயனுக்காக உடனடியாகப் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும். நான் ஒரு புது வெளியீடு தயாராகும் வரையிலும் என்னுடைய வாசகர்களைக் காத்திருக்கச் செய்வதில்லை. ஆகவே ஏதாவது புது கருத்துக்கள் உதித்தால் அவற்றை உடனே அச்சில் இருக்கும், கடைசியாக வெளியிடப்படும் புத்தகத்தில், அந்த புத்தகத்தின் விஷயங்களுக்கும் அதற்கும் நேரடியான சம்பந்தம் இல்லாவிடினும்,

சேர்த்து விடுகிறேன். அல்லது ஒவ்வொரு வார்த்தையையும் ஜாக்கிரதையாகச் சோதித்துப் பார்ப்பதில் பொன்னான நேரத்தை வீணாக்குவதையும் நான் விரும்புவதில்லை.

அச்சில் ஏற்படும் பிழைகளைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். பிழைகளைப்பற்றி நீங்கள் பயப்படவேண்டியதில்லை. மாதிரிப் பிரதியை எனக்கு அனுப்பிவைத்தால் நான் அவைகளைத் திருத்தி விடுகிறேன். புத்தகத்தை 125 பக்கத்திற்கு கட்டுப்படுத்திவிட வேண்டாம். உங்களிடம் நல்ல கருத்துக்கள் இருந்தால், அதைப்புகுத்தி புத்தகத்தினுடைய விலையை ஒரு சில அணா அதிகப்படுத்தி விடுங்கள். ஒரு புத்தகத்தில் 200 அல்லது 300 பக்கங்கள் இருப்பதால் என்ன இடையூறு? கணிசமாகவும், அதிகார பூர்வமானதாகவும் உள்ள புத்தகங்களைக்கொண்டுவருவதின்மூலம் நீங்கள் உலகத்திற்கு உதவலாம்.

''யோக ஆசனங்கள்'' புத்தகம் அழகாக இருக்கின்றது. சந்தையிலே பல புத்தகங்கள் இருப்பினும், இந்தத் துறையில் அதற்கு அலாதியான ஒரு தனிக்கவர்ச்சி இருக்கின்றது.''

## விவரங்களில் கவனம்

நான் விளக்கமான உபதேசங்கள் கொடுப்பதிலும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கின்றேன்.

நீங்கள் ஓம் (உருவம்) பிரணவத்திலேயே தியானத்தைப் புகுத்தலாம். இது சகுண, நிர்க்குண தியானம் இரண்டுமாகும். சில நல்ல ஓம் அட்டவணைகளை அச்சிட்டு அதிலே கீழ்க்குறிப்பாக ஒருமுகப்படுத்துதல், தியானம் ஆகியவை பற்றிய உபதேசங்களைச் சேர்க்கவும். நான்கு பக்கங்

களிலும் நான்கு மஹா வாக்கியங்களையும் செருகவும். நான் ஜபத்துண்டுப் பிரசாரம் ஒன்று இருக்கவேண்டுமென விரும்புகின்றேன். ஒரு பக்கத்தில் ''ஓம்'' பிரணவத்தை 108 தடவை அச்சிடவும். ஜபமாலையை வைத்துக் கொள்ள விரும்பாதவர்கள் இந்தப் பக்கத்தைப் படித்துப் பார்க்கலாம்.

இத்துடன் ''பிரம்மரந்த்ரத்தைப்'' பற்றிய விளக்கமானதொரு கட்டுரை இருக்கிறது. இது போதுமானது. வித்துறை, நிபோதகாக்னி, நிர்வாண சக்தி முதலியவைகளைப்பற்றிய சாங்கோபாங்கமான வர்ணனை மாணவனுக்கு அதிகம் பயன் படாது. இவையெல்லாம் புரியாத பாஷையாகும்—புரியாதவைகள். வேறு எந்தப் புத்தகங்களிலிருந்தும் எந்தக்கருத்தையும் எடுக்க வேண்டாம். நான் எழுதியிருப்பதே முற்றிலும் போதுமானது. மற்ற எந்த வழியிலிருந்தும் கருத்துக்களைப் பார்த்து எழுதி புத்தகங்களின் அழகைக் கெடுத்து விட வேண்டாம்.

நான் என்னுடைய புத்தகங்கள் வெளிக் கொணரும் முறையை ஜாக்கிரதையாகக் கவனிக் கின்றேன். சில சமயங்களில் பிரசுரகர்த்தாக்கள் அவர்களுக்குத் தகுதியானது, அல்லது பொருத்த மானது அல்ல என்று தோன்றிய சில பகுதிகளை விட்டுவிட நினைத்தனர். ஆனால் இம்முறையில் எந்த ஒரு மதிப்பு மிக்க கருத்தும் இழக்கப்படுவதை நான் விரும்பவில்லை. ஆகவே, கீழ்க்கண்ட கடிதத்தில் நான் அவைகளினுடைய முக்கியத்துவத்தைப்பற்றி வற்புறுத்திக்கூறியதோடு, மொழியின் நடையை மாற்றுகின்ற முறையினால் எழுத்தின் வேகமே இழந்து பட்டுவிடுமென்பதையும், அவ்வாறு இழக்கப் படாமல் காப்பாற்றப்படுவதில் அவர்களை ஜாக்கிர

தையாக இருக்கும்படியும் கூறினேன். அளவுக்கு மிஞ்சிய திருத்தங்களையும் ஒட்டுகளையும் நான் விரும்புவதில்லை.

நீங்கள் சில பகுதிகளை நீக்கி விடலாம். ஆனால் பாஷை அல்லது பாணி அல்ல மக்களைக் கவருவது, எண்ணத்திற்குப் பின்னாலிருக்கும் சக்தியே என்பதை ஞாபகத்தில் வைக்கவும். மொழி முதலியவற்றை அபிவிருத்தி செய்ய நினைக்கும்பொழுது அந்த சக்தி காக்கப்படவேண்டும். நீங்கள் ஒரு மாற்றத்தைச் செய்யும்பொழுது அதை எழுதியவருடைய கருத்துக்களின் மீது கவனம் செலுத்த வேண்டும். வெறும் ஆத்யாத்மீக அல்லது பூ அலங்காரம் மட்டும் எந்த அபிவிருத்தியையும் செய்து விடாது. ஆசிரியரின் வேகம் ஒரு போதும் இழக்கப்படக் கூடாது. இந்த வெளியீடுகளில் ஏதாவது அபிவிருத்தி செய்ய நினைக்கும்பொழுது இதை மனதிலிறுத்திக் கொள்ளவும்.

கீழ்க்கண்ட உத்திகள் நான் எவ்வாறு ஒரு நல்ல வெளியீட்டைப் பாராட்டுகிறேன் என்பதையும் கூடவே விடுபடுவதை நான் எவ்வாறு விரும்புவதில்லை என்பதையும் காட்டும்.

முகவுரையுடன் புத்தகம் மிகவும் அழகாக இருக்கிறது. பத்திரிகைகளிடமிருந்து சில ''கண்டனங்கள்'' வருகின்றன என்று நீங்கள் நினைக்கலாம். இது ஒரு தவறான கற்பனையே. சில பத்திரிகைகள் இந்தப் புத்தகத்தைப் புகழப் போகின்றன. மயிர் சிலிர்க்கும் விளம்பரமொன்றை அதில் போட்டீர்களானால் பிரதிகள் சூடான ரொட்டிகள் மாதிரி விற்பனையாகிவிடும். ''வேதாந்தப் பயிற்சி''யோடு சேர்ந்து இது வேதாந்தம் படிப்பதற்கு ஒரு நல்ல கூட்டாக அமையும்.

யோக ஆசனங்களில், முதல் பதிப்புக்கும் இரண்டாம் பதிப்புக்குமிடையே ஒரு பெரும் வித்தியாசம் இருக்கிறது. நீங்கள் ''பரிச்சின்ன ஆனந்தா, பிம்ப ஆனந்தா'' போன்ற எல்லா சமஸ்கிருத வார்த்தைகளையும் விட்டு விட்டீர்கள். சம்ஸ்கிருத வார்த்தைகளுக்கு பெரும் தனிப்பட்ட சக்தியும், விசேஷத்தன்மையும் உண்டு. ஒரு ஹாஸ்ய வாராந்திரப் பத்திரிகையின் ஆசிரியரிடமிருந்து வந்த தொத்து வியாதியின் காரணமாக நீங்கள் சம்ஸ்கிருத வார்த்தைகளை விட்டு விட்டிருக்கிறீர்கள். இனிமேல் தயவு செய்து ஒரு அக்ஷரத்தைக்கூட விட வேண்டாம். சம்ஸ்கிருத வார்த்தைகளில் ஒரு சக்தியும், அழகும், சௌந்தர்யமும் இருக்கின்றன. இது படிக்கும்போது எவ்வகையிலும் தொடர்பைப் பிரித்து விடாது.

## பதிப்புரிமையில் பற்று கிடையாது

நான் பிரசுரகர்த்தர்களிடமிருந்து உரிமைப் பணமாக எதையும் எதிர்பார்த்ததில்லை. சக்தி பொருந்திய வேலைக்காக நான் பிரசுரகர்த்தர்களை பல மொழிகளில் என்னுடைய புத்தகங்களின் அநேக பதிப்புகளை வெளிக்கொணரும்படிச் சொல்கிறேன். ஆசிரியருக்கு சன்மானமாக பிரசுரகர்த்தாக்களிடமிருந்து நான் எதையும் கேட்பதில்லை. அவர்கள் உரிமைப்பணம் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும், உலகம் முழுவதும் பரந்த அளவில் என்னுடைய புத்தகங்களைப் பரப்புவதற்காக நான் எத்தனை பிரசுரகர்த்தாக்களை வேண்டுமானாலும் அச்சிட முன்வருவதற்கு அனுமதிக்கின்றேன். பொதுவாக அவர்கள் வெளியிடும் ஒவ்வொரு 1000 பிரதிகளுக்கும் 100 பிரதிகள் எனக்குக் கொடுக்கின்றனர். நான் அந்தப் பிரதிகளை விற்று லாபம் சம்பாதிப்பதில்லை.

அப்பிரதிகளை விமரிசனத்திற்காக எல்லா நூல் நிலையங்கள், கல்வி, மத ஸ்தாபனங்கள், தினசரிப் பத்திரிகைகள் ஆகியவற்றிற்கு அனுப்பிவைக்கிறேன். இதனால் விளம்பரத்திற்கு ஒரு நல்ல மார்க்கம் ஏற்படுவதால் பிரதிகள் சீக்கிரம் விற்று விடுகின்றன; அதன் மூலம் பிரசுரகர்த்தாக்கள் லாபமடைகின்றனர். நான் எல்லோரும் வாழவேண்டும் என்று விரும்புகின்றேன்.

நான் அறிவைப் பரப்புவதிலே கவனமாயிருக்கின்றேன். இமயமலையிலே கங்கைக் கரையில் ஒரு சிறு குடீருக்குள் உட்கார்ந்துகொண்டு நான் எல்லா மொழிகளிலும் உலகமனைத்தும் பரப்புவதற்காக மிகவும் பயன்படத்தக்க நூற்றுக்கணக்கான நூல்களை வெளியிட்டிருக்கின்றேன். நான் எந்த விதமான வியாபார நோக்கத்திற்கும் இடம் கொடுக்காத காரணத்தினால் இது சாத்தியமாயிற்று. என்னுடைய தாராள மனப்பான்மை ஜெர்மனி, ஸ்விட்ஜர்லாந்து, அமெரிக்கா, இந்தோனேஷியா போன்ற தேசங்களிலுள்ள பிரசுரகர்த்தாக்களைக் கவர்ந்தது. சில பிரசுரகர்த்தாக்கள் உயர்ந்த வேதாந்தத்தை மதிப்புள்ள புத்தகங்களில் கையாள விரும்பவில்லை. மந்திரம், அற்புதங்கள், யோகம் ஆகியவற்றைப் பற்றிய புத்தகங்களை சீக்கிரமாக விற்று ஏராளமாக லாபம் சம்பாதிக்க விரும்புகின்றனர். வேதாந்தம், ஆரோக்கியம் ஆகியவற்றைப் பற்றிய முக்கியமான புத்தகங்கள் மெதுவாக விற்கின்ற காரணத்தால், பிரசுரகர்த்தாக்கள் அவைகளில் அவ்வளவு அக்கறை காட்டுவதில்லை. ஆகவே நானே எனது சொந்த பிரசுரங்களை வைத்துக்கொள்ள நினைத்தேன். வரப்போகும் தலைமுறைகளின் நன்மைக்காகவும், மதிப்பு மிக்க புத்தகங்களைக் காப்பாற்றி வைக்கவும், நான் இப்பொழுது என்னு

டைய எல்லா புத்தகங்களினுடைய உரிமைப் பதிவையும் தெய்வநெறிக் கழகம் அல்லது யோக வேதாந்த ஆரண்யப் பல்கலைக் கழகத்திற்குக் கட்டுப்படுத்திவிட்டேன். இருந்த போதிலும் நான் மற்றவர்களையும் என்னுடைய புத்தகங்களைப் பிரசுரிக்க அனுமதிக்கிறேன்.

நான் சன்மானப் பிரதிகள் ஏதும் கேட்கா விட்டாலும், பிரசுரகர்த்தாக்களிடம் வினயமாக மனம் சமாதானப்படும் முறையில், இலவச விநியோகத்திற்காக எனக்குச் சில பிரதிகளைக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் எனக்கு 100 அல்லது 150 பிரதிகள் (ஆயிரத்துக்கு) தாராளமாக கொடுக்கின்றனர். நான் இந்த சன்மானப் பிரதிகளை கணேஷ் பூஜை — இறைவனுக்கான அர்ப்பணம் என்று கூறுகின்றேன். 1936ல் இந்தியாவிலுள்ள ஒரு பிரசுரகர்த்தா வுக்குக் கீழ்கண்ட வரிகளை எழுதினேன்:—

தயவு செய்து அந்த கணேஷ் பூஜை பிரதிகளை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும். இது உங்களுடைய சொந்த நன்மையை முன்னிட்டே. ஒரு மரம் பழுக்க ஆரம்பித்தால் அதனுடைய முதல் பழம் அல்லது காய் கடவுள் அல்லது சந்நியாசிகளுக்குக் கொடுக்கப்படுகிறது. பிறகு அந்த மனிதன் பிரமாதமான வெற்றியுடன் செழிப்படைகின்றான். இதேபோல்தான் கணேஷ் பூஜைப் பிரதிகள் விஷயத்திலும். பிரசுரகர்த்தா இங்கு, இனிமேல் செழித்தோங்குகிறான். நான் அந்தப் பிரதிகளை அந்தப்புத்தகங்களுக்கு அற்புதமான விளம்பரத்தைக் கொண்டு வருவதற்காக பயன் படுத்துகிறேன்.

எல்லா புத்தகங்களும் யுனிவர்சிடி அச்சகத்திலேயே அச்சிடப்பட்டால் நான் மிகவும் மகிழ்ச்சியடைவேன். ஏனெனில் இங்கு எனக்கு பூரண சுதந்தரம் இருக்கிறது. அச்சகத்திலிருந்து பிரதிகள் வந்ததும் நான் எல்லா பிரதிகளையும் இலவசமாக ஆஸ்ரம வாசிகளுக்கும், பார்வையாளர்களுக்கும், யாத்ரீகர்களுக்கும், மற்றும் தபால் மூலமாக எல்லா பக்தர்களுக்கும், தெய்வ நெறிக் கழகக் கிளைகளுக்கும், எல்லா மத, கல்வி ஸ்தாபனங்களுக்கும் கொடுத்து விடுகிறேன். தினசரி நான் அலுவலகத்திலுள்ள எல்லா அலமாரிகளையும் காலி செய்து விடுகிறேன். இருந்தபோதிலும் புது சரக்கு இடை விடாமல் அச்சகத்திலிருந்து வந்து நிரம்பிய வண்ணமிருக்கிறது. இப்பொழுது இந்தியாவின் எல்லா பாகங்களிலும், ஹாங்காங்கிலும் என்னுடைய புத்தகங்களின் ஏராளமான பிரதிகளை அச்சிட்டு எல்லா பிரதிகளையும் இது போன்ற விநியோகத்திற்காக அனுப்பி விடுகின்ற பக்தர்கள் பலர் இருக்கின்றனர். பக்தர்கள் இந்த வெளியீட்டு வேலைகளுக்கும், ஆஸ்ரமத்திலுள்ள சாதகர்களின் பராமரிப்புக்காகவும், அல்லது ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளின் நிவாரணத்திற்காகவும் நன்கொடைகள் அனுப்பும்போது என்னுடைய மகிழ்ச்சி மிகவும் பெரிது.

## லாப நோக்கத்தைப்பற்றி அபிப்பிராயம்

ஒரு பிரசுரகர்த்தாவின் கணக்குகளில் சில தவறுதல்கள் இருந்தபொழுது, நான் என்னுடைய சிஷ்யர்களில் ஒருவரை நல்ல முறையில் நடந்துக் கொள்ளும்படியும், அமைதியான உள்ளத்தைக் கைக் கொள்ளும்படியும் கூறினேன். அவருக்கு எழுதிய கீழே கொடுக்கப்பட்டுள்ள சில கடிதங்கள் வியாபாரிகளிடம் என்னுடைய மனப்பாங்குஎப்படியிருக்கிறது என்பதை விளக்கும் :—

அமைதியாகவும், கலக்கமில்லாமலும் இருக்கவும். உம்மை ஒரு போதும் அலட்டிக்கொள்ள வேண்டாம். பெருந்தன்மையுடனும், கம்பீரத்துடனும் இருக்கவும். அகில உலகமும் உம்முடையதே. உம்முடைய உடல், உம்முடைய வீடாகும். ஒரு சாக்ஷியாக இருக்கவும். கவனித்துக் கொண்டிருக்கவும்.

சண்டை போட வேண்டாம். எல்லா நிலைமைகளிலும் மரியாதையாகவும், நாகரிகமாகவும், உபசரணையாகவும் இருக்கவும். பணம் முக்யமில்லை. பிரசுரகர்த்தாக்களிடம் எப்பொழுதும் சிநேகப் பான்மையோடு இருக்கவும். பயமற்றிருக்கவும். கணக்குகளைப்பற்றிச்சண்டை வைத்துக்கொள்ளாமலிருக்கவும். பெருந்தன்மையோடிருக்கவும். விவேகமான வழியில் போய்க்கொண்டிருக்கவும். அவர்கள் தவறினால் அவர்களிடம் தவறுகளை எடுத்துக் காட்டவும். அவர்கள் விடாப்பிடியாக இருந்து அவர்களுடைய தவறுகளையே இறுகப் பிடித்துக் கொண்டிருந்தால் மௌனமாக இருந்து விடவும். நமக்குப் பெருத்த நஷ்ட மேற்படினும் விஷயம் முழுவதையும் விட்டுவிடவும். உம்முடைய கடிதத்தில் கடினமான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டாம். பணிவும், மரியாதையும் ஒவ்வொரு வரியிலும் இழையோடவேண்டும். நீதி மன்றங்களுக்குப் போகாமலேயே கணக்குகளைச் சரிசெய்து கொள்ளவும். இது விஷயமாக ஒரு சட்ட நிபுணரைக்கலக்கவும். பொறுமையை இழக்க வேண்டாம். ஒரு சந்நியாசியைப்போல் நடந்து கொள்ளவும்.

---

# அத்தியாயம் ஒன்பது

# வாழ்க்கையின் லக்ஷியம்

## வாழ்க்கையின் தத்துவம்

தத்துவத்தின் குறிக்கோள் சரியான வாழ்க்கை. சரியான வாழ்க்கை என்பதன் பொருள் அதற்கு எவ்வாறு இலக்கணம் சொல்லப்படுகிறது என்பதைச் சார்ந்திருக்கிறது. தத்துவார்த்தமற்ற வாழ்க்கையைக் குறிக்கின்ற பூர்ணமற்ற தன்மையிலிருந்து விடுபட்ட ஒரு ஞான வாழ்க்கையே அது. தத்துவம் என்பது இவ்வுலகின் அனுபவ உண்மைகளைப் புறக்கணித்துச் செல்லுகின்ற அறிவாற்றலின் திருப்பமோ அல்லது படாடோபமான வித்யா கர்வமோ அல்ல. மேதாவிலாசத்தின் அற்புதச் செய்கையோ அல்லது கவலையற்ற உள்ளத்திற்கு ஒரு வெறும் பொழுதுபோக்கோ என்பதற்கு மாருக தத்துவம் என்பது அனுபவமாகிய சிக்கல்களை சாதுர்யமாகப் பகுத்துப் பார்த்தல் என்பதோடு இவ்வுலகின் பல்வேறு அனுபவங்களுக்கும் காரணமாக விளங்குகின்ற நடவடிக்கைகளையும் ஒழுங்குபடுத்தக் கருதி, அப்பேர்ப்பட்ட ' ஞானத்தியானங்களினின்றும் பரிணமித்த ஒரு விஞ்ஞான பூர்வமான தேற்றமேயாகும். ஆகவே, தத்துவம் என்பது, எங்கு வாழ்க்கையின் பொதுவான நோக்கம் ஊடுருவி பார்க்கப்பட்டு எங்கு வாழ்க்கையுடனேயே ஒன்றிவிட்ட அந்த அதிசிரேஷ்ட வாழ்க்கை உணரப்படுகின்றதோ அப்பேர்ப்பட்ட ஒருவகையான பூர்ணத்துவம் வாய்ந்த வாழ்க்கைப் பெருங்கலையாகும்.

என்ஞல் போதிக்கப்படும் தத்துவம் ஒரு கனவுலக, மானசிக, உலகை ஒதுக்கிய மாயைக் கொள்கையோ அல்லது மனிதவர்க்கத்தின் உலகை உறுதிப்படுத்துகின்ற ஒரு முரட்டுக் கொள்கையோ அல்ல. இது பிரபஞ்சத்தின் தெய்வத்தன்மையி னுடையவும், பிரபஞ்சத்தின் பூர்ணத்துவம் வாய்ந்த ஆத்மாவோடு அனன்னியமாக விளங்கு கின்ற மனிதனுடைய ஆத்மாவின் அழியாத்தன்மை யினுடையவும், இருக்கின்ற ஒரே உண்மைப் பொருளாகிய மிக உயர்ந்த பிரம்மனுடன் இப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பொருளின் அத்தியா வசிய ஒற்றுமையை விளக்குகின்றதுமாகிய கொள்கையேயாம். வேதாந்தத்தின் ராஜ்யம் உலகாயதத்திற்கு அப்பாற்பட்டிருந்தபோதிலும் அது மனதைப் பிளக்கின்ற, பரிதாபகரமான இவ்வுலக நிலையைக் கண்டு கண்ணை மூடிக் கொள்ளவோ அல்லது பிரத்யக்ஷ வாழ்க்கையை நோக்கிக் கீழ்முகமாக இழுக்கப்படும் இந்த உடலையும் உள்ளத்தையும் ஒதுக்கித்தள்ளிவிடவோ இல்லை.

## சம்பூர்ண வளர்ச்சி

இந்த ஒரு பிரம்மன் அல்லது மேலான ஆத்மா அதனுடைய எல்லா தலங்கள் அல்லது காட்சிப் படிகளின் எதிர்மாருன பிரபஞ்சமாகத் தென் படுவதால் சாதகன் உயர்ந்த பிரதரிசனத்திற்குள் நுழைவதற்கு முன்ஞல் தாழ்ந்ததற்கு வணக்கம் செலுத்தியாக வேண்டியிருக்கிறது. நல்ல ஆரோக் கியம், நன்ருகப் புரிந்துகொள்ளும் தன்மை, ஆழ்ந்த ஞானம், சக்திபொருந்திய மஞேபலம், நடத்தை யிலே நாணயம் ஆகியவை எல்லாம் வேதாந்தத்தால் உபதேசிக்கப்படுகிற, ''எடுத்துக்காட்டை'' உணர் வதற்கான முறையின் பாகங்களாகும். நான் தாழ்ந்த ஆத்மாவின் நாஞவித ஒழுக்கத்தையும்

வற்புறுத்துகிறேன். வேதாந்த உபதேசங்கள் யோகம், பக்தி அல்லது கர்மா ஆகியவற்றிற்கு மாறுபட்டவையல்ல. இவையனைத்தும் அதனுடைய அனுபவத்தின் பல்வேறு படிகளிலே ஒன்றுகின்ற மூலதத்துவங்களாக ஒன்று சேர்த்துக் கலக்கப் படுகின்றன.

அனுசரித்துப் போதல், இணக்கமாகப் போதல், சரிப்படுத்திக்கொண்டு போதல், ஒவ்வொன்றிலும் நல்லதைக் காணல், இயற்கையின் எல்லா தத்துவங்களையும் பயனுள்ள முறையில் ஆத்மானுபூதியை நோக்கிச் செல்லும் தனிப்பட்டவனுடைய பரிணும முறையில், மனித சக்திகளை சம்பூர்ணமான அனுசரணைப் பாதையோடு, உபயோகத்திற்குக் கொண்டுவருதல் ஆகியவைகள் என்னுடைய வாழ்க்கைத் தத்துவத்தை உருவாக்கப் போகின்ற சில முக்கியமான அம்சங்களாகும். ஏனெனில் கடவுள் எல்லாமாக இருப்பதால், எல்லோரையும் நேசித்தல், எல்லோருள்ளும் இறைவனைக் காணல், எல்லோருக்கும் சேவை செய்தல், இறைவனை எல்லோருடைய அபேதமாக பூரணத்துவமான ஒரு முழுப் பொருளாக உணர்தல் ஆகியவைகள் முக்கியமான விதிகள். முழுமுதற் பொருளை அறிதலாகிய இந்த மாபெரும் ஆத்மீக லக்ஷியத்தை நோக்கி இடையூறின்றி சாதகன் தன்னுடைய சாதனையில் செல்லவேண்டி, நான் என்னுடைய எல்லா புத்தகங்களிலும் இந்த உடல், ஜீவன், உள்ளம், அறிவு ஆகியவை சம்பந்தப்பட்ட எண்ணமாகிய தலங்களைத் தாண்டுவதைப் பற்றியும், அவற்றை அடக்கியாளுகின்றதைப் பற்றியும் வழிகள் சொல்லியிருக்கின்றேன். வேதாந்தம் என்பது ஒரு தத்துவமும் வாழ்க்கை முறையுமாகும்; அது ஆத்மீக உணர்வைப்பற்றிய முறைகளைப்பற்றியும், அழியாத்தன்மையின் நேரடியான அனுபவத்

தையும், ஆத்மாவின் எங்கும் நிறைந்த தன்மையைப் பற்றியும், உபதேசிக்கின்றது; அங்கு (ஆத்மாவில்) இந்த பிரபஞ்சம் ஆத்மாவோடு அனன்னியமாக இருப்பதை உணரப்படுகிறது; அங்கு ஆத்மனைத்தவிர மற்றொன்று இருக்க முடியாது; இந்த உயர்ந்த உணர்வின்பயனாக அனுபூதியடைந்த முனியானவர் இப்பிரபஞ்சத்தின் இரக்ஷகராக, சர்வபூத-ஹிதே ரதஹ ஆகிவிடுகின்றார்.

## என்னுடைய சித்தாந்தம்

ஆத்மனை ஒவ்வொரு ஜீவனிலும் அல்லது உருவத்திலும் காணுதல், பிரம்ம உணர்வை எங்கும் உணர்தல், எல்லா நேரங்களிலும், வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும், ஒவ்வொன்றையும் ஆத்மனாகப் பார்த்தல், கேட்டல், சுவைத்தல், முகர்தல், ஆகியவையே என்னுடைய சித்தாந்தம். பிரம்மனிலே வசித்தல், பிரம்மனிலேயே உருகுதல், பிரம்மனுடன் இரண்டறக் கலத்தல் என்னுடைய சித்தாந்தமாகும். பிரம்மனில் ஒன்றாக இருந்து கொண்டு கைகளையும், உள்ளத்தையும், இந்திரியங்களையும், உடலையும் மனித சமுதாய சேவைக்காகப் பயன்படுத்தவும், பக்தர்களை உயர்த்துவதற்காக இறைவன் திருநாமங்களைப் பாடவும், உண்மையான சாதகர்களுக்கு உபதேச மொழிகள் கொடுக்கவும், புத்தகங்கள், சிறு நூல்கள், துண்டுப்பிரசுரங்கள், சஞ்சிகைகள், மேடைப் பிரசங்கங்கள் ஆகியவற்றின் மூலமாக ஞானத்தைப் பாரெங்கிலும் பரப்புதல் ஆகியவை எனது சிந்தாந்தம்.

பிரபஞ்சத்திற்குரிய நண்பனாக இருத்தலும், பிரபஞ்சத்திற்குரிய ரக்ஷகனாக இருத்தலும், ஏழை, அனாதை, ஆதரவற்றவர், வீழ்ச்சியுற்றோர்

ஆகியோரின் நண்பனுக இருத்தலும் எனது சித்தாந்தம். நோயுற்ருேருக்குச் சேவை செய்தல், அவர்களுக்கு ஜாக்கிரதையாகவும், அனுதாபத் துடனும், அன்புடனும் சிகிச்சை செய்தல், மனமொடிந்தோருக்கு உற்சாக மூட்டுவது, எல்லோரிடத்தும் சக்தியையும் ஆனந்தத்தையும் ஊட்டுவது, ஒவ்வொரு ஜந்துவிடமும் ஒருமைப் பாட்டை உணர்வது, எல்லோரையும் சமநோக் கோடு நடத்துவது ஆகியவை என்னுடைய புனிதமான சித்தாந்தமாகும். என்னுடைய சித்தாந்தத்தில் முனிவர்களோ அல்லது பாவி களோ, விவசாயிகளோ அல்லது அரசர்களோ, பிச்சைக்காரர்களோ அல்லது சக்ரவர்த்திகளோ, நண்பர்களோ அல்லது பகைவர்களோ, ஆண்களோ, அல்லது பெண்களோ, குருக்களோ அல்லது சீடர் களோ கிடையாது. இது எல்லாம் பிரம்மன். இது எல்லாம் சச்சிதானந்தா.

## சக்தி, மாபெரும் வேலை இவற்றின் ரகசியம்

நான் இப்பொழுது 1958ல் 72 வயதுடையவன். நான் என்னை சுறுசுறுப்புடன் வைத்திருக்கிறேன். நான் எப்பொழுதும் பேரானந்தமும் சந்தோஷமும் உடையவனுக இருக்கிறேன். நான் இன்னும் அதிக மான வேலை செய்ய முடியும். நான் ஆஸ்ரமத்தி லுள்ள நூற்றுக்கணக்கான மாணவர்களை நேரடி யாகக் கவனித்துக்கொள்கிறேன். தெய்வ நெறிக் கழகம் ஆரண்யப்பல்கலைக்கழகம், ஜெனரல் ஆஸ்பத்திரி ஆகியவற்றின் நடவடிக்கைகளையும் கவனித்துக்கொள்கிறேன். தொலைவான இடங் களிலுள்ள ஆயிரக்கணக்கான மாணுக்கர்களுக்கு கடிதப்போக்குவரத்து மூலம் வழி காட்டுகிறேன். நான் அச்சகத்தின்பேரிலும், மாணுக்கர்களுக்கும், நூல் நிலையங்களுக்கும், மதஸ்தாபனங்களுக்கும்

புத்தகம் அனுப்புவதிலும் அதிக கவனம் செலுத்து கிறேன். நான் இன்னும் அதிகமாகச்செய்ய முடியும். இந்தச் சக்தி பொருந்திய வேலையைச்செய்வதற்கான என்னுடைய சக்தியின் ரகசியம் என்னவென்றால் நான் எப்பொழுதும் தெய்வீக உணர்வை வைத்துக் கொண்டிருப்பதுதான்.

பார்வைக் கோணத்தை மாற்றி எப்பொழுதும் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் இருங்கள். எங்கும் நல்லதையே காணுங்கள். ஆனந்தக் கூத்தாடுங்கள். தெய்வீக எண்ணங்களால் உள்ளத்தை நனைத்தெடுங்கள். உடனேயே நீங்கள் உள்ளிருந்து பிரமாதமான அந்தரங்க ஆத்மீக பலத்தையும், ஆத்மீக சக்தியையும் உணருவீர்கள். இப்பொழுது நீங்கள் அனுபவிக்கும் அமைதியை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. உன்னுடைய உள்ளத்தை உட்புறமாக நகரும்படிச் செய்கின்ற, உள்ளத்தை ஒரே நோக்கமுடையதாகவும், ஸ்திரமாகவும், இருக்கச் செய்கின்ற எந்த முறையை வேண்டுமானாலும் அனுசரித்துக் கொள்ளுங்கள். இந்திரியங்களின் மீது கட்டுப்பாடு வைத்திருங்கள். எச்சரிக்கையான விழிப்பும் தீவிரமான நம்பிக்கையும் கொண்டிருங்கள். மனோசக்தியை அபிவிருத்தி செய்யுங்கள். இல்லாவிடில் விக்ஷேபமும், ஆலஸ்யமும் (ஊசலாட்டமும், சோம்பேறித்தனமும்) உங்களை வென்று விடும்.

## பிரார்த்தனையின் மூலம் குணப்படுத்துதல்

உலகம் பூராவும் வைத்தியர்கள் ஏழை நோயாளிகளிடம் ஏராளமான மருந்துகளைக் கொண்டு சோதனை செய்து பார்க்கின்றனர். வைத்தியர்கள் மேலும் மேலும் செல்வம் சம்பாதிக்க வேண்டும் என்கின்ற சுயநல எண்ணத்துடன்

வேலை செய்யும்போது நிரந்தரமான, நீடித்திருக்கின்ற குணத்தை எப்படி எதிர்பார்ப்பது? ஆயுர் வேத முறையில் மேதாவிகள் கலப்பற்ற மருந்துகளை இமயமலை மூலிகைகளிலிருந்தும், விதைகளிலிருந்தும், வேர்களிலிருந்தும் தயாரிக்கின்றார்கள். அவர்கள் நோயாளிகளினுடைய நாடிகளைக் கவனித்து நோயை சரியாகக் கண்டுபிடித்து ஒரு நிரந்தரமான குணத்தை நோயாளிகளிடம் ஏற்படுத்த பலன்தரக் கூடிய மருந்துகளைக் குறிப்பிடுகின்றனர். நோயாளிகளும் பெருமளவு இயற்கை முறைகளையே பின்பற்றி தகுதியான உணவு வகைகளைத் தேர்ந்தெடுத்து கை தேர்ந்த வைத்தியர்களினுடைய ஆலோசனைகளைப் பின்பற்ற வேண்டும்.

இந்த ஆஸ்ரமத்தில் நான் சிவானந்தா பொது ஆஸ்பத்திரியில் எல்லா முறைகளையும் சேர்த்து வைத்திருக்கிறேன். எல்லா முறை மருந்துவகைகளிலும் கைதேர்ந்த வைத்தியர்கள் இருக்கின்றனர். இதைத்தவிர எனக்கு மந்திரத்தின் சக்தியிலும், இறைவனுடைய கருணையிலும் பெரும் நம்பிக்கையுண்டு. விஸ்வநாதர் ஆலயத்தில் நடத்தப்படுகின்ற விசேஷ பிரார்த்தனைகளின் மூலமாக தூரத்திலுள்ள இடங்களில் கூட நம்பிக்கையிழக்கப்பட்ட நோயாளிகளிடம் அதிசயிக்கத்தக்க குணம் ஏற்பட்டிருப்பதை நான் பார்த்திருக்கின்றேன். பிரார்த்தனைகள் மூலமாக குணப்படுத்துவதில் — மந்திரங்களை உச்சரித்தும், பிரார்த்தனைகள் செய்தும் நோய்களைக் குணப்படுத்துவதில் எனக்கு அபார நம்பிக்கையுண்டு பலன் அதிசயிக்கத்தக்கது. இறைவனுடைய திருநாமம் அவ்வளவு பலனளிக்கக் கூடியது. நான் இதை ''நாமாபதி'' என்று அழைக்கின்றேன்.

## அத்தியாயம் பத்து

# பரிணாமப் பாதையில் என்னுடைய முறை

### 1. பற்றின்மையிலும் ஜாக்கிரதையுடனிருக்கிறேன்

என்னுடைய குடீரில் நூற்றுக்கணக்கான மதிப்புமிக்க புத்தகங்களும், சாமான்களும், துணி மணிகளும் உள்ள பல பெரிய இரும்புப் பெட்டிகள் இருக்கின்றன. பெட்டிகளின் சரியான உள்ளடக்கம் (உள்ளேயுள்ள பொருள்கள்) எனக்குத் தெரியாது. என்னிடம் எந்த சாவிகளும் கிடையாது. நான் ''இரகசியம்'' என்று எதையும் வைத்துக்கொள்வதில்லை. என்னால் தனியாக எதையும் சாப்பிட முடியாது. என்னுடைய சொந்த உபயோகத்திற்குத் தேவையானவற்றை மற்றவர்கள் வைத்துக் கொண்டிருப்பர் என்று எதிர்பார்த்துக்கொண்டு நான் வெறுங்கைகளுடன் ஒரு வைராகியைப்போல் பாசாங்கு செய்வதில்லை. பிரசார யாத்திரையில் செல்லும்போது நான் என்னிடம் போதுமான அளவு பணத்தை இரண்டு அல்லது மூன்று ஜேபிகளில் வைத்துக்கொள்வேன். என்னைப் பின் தொடர்ந்து வருபவர்களிடம் நிறைய பணத்துடன் தனித்தனிப் பணப்பையை கொடுத்துவிடுவேன்.

எல்லா பெரிய மனிதர்களாலும், பக்தர்களாலும் கொடுக்கப்பட்ட பல்வேறு பொருள்களையும், பேனா, மூக்குக் கண்ணாடி, படிக்கும் புஸ்தகங்கள் போன்றவைகளையும் வைத்துக் கொள்வதில் நான் மிகவும் ஜாக்கிரதையுடன் இருக்கிறேன். முன்பு ஒரு சிறு துரிதநடைப் பயணத்திற்காக நான்

என்னுடைய குடிலைப் பூட்டும்பொழுது, சாவியை ஜாக்கிரதையாக என்னுடைய துணியின் நுனியில் முடிபோட்டு வைத்துக்கொள்வேன். நான் ஒட்டுகளுடன்கூடிய கிழிந்த மேல் சட்டையை உபயோகிக்கலாம். ஆனால் மற்றவர்களுக்கு உயர்ந்த ரகப் பொருள்களையே கொடுக்கவேண்டும். நான் கடன்களைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. தேவையான ஆதரவு தன்னைத்தானே தெய்வீக வழியிலிருந்து வருவதை நான் காண்கிறேன். நான் இறைவனுடைய பிரசன்னத்தை எல்லா நேரங்களிலும், எல்லா நாம ரூபங்களுக்குப் பின்பும் உணர்கின்றேன்.

## 2. வாழ்க்கை முடியும் வரை சாதனை

சாதுக்களும் யோகிகளும் கொஞ்சகாலம் சாதனையும் அத்தியயனமும் செய்துவிட்டுப் பிறகு கொஞ்சம் பெயரும் புகழும் கிடைத்ததும் அந்த வழக்கத்தை விட்டுவிடுகின்றனர். இது ஒரு பெரிய பரிதாபப்படத்தக்க விஷயம். அவர்களுடைய வீழ்ச்சிக்கு அது ஒரு காரணம். சாதுக்களும், பூர்ணமடைந்த மகாத்மாக்களும் அவர்களுடைய வாழ்நாளின் கடைசி வினாடி வரை சாதனையைத் தொடர்ந்து செய்தல் வேண்டும். அப்பொழுது தான் இறையுணர்வை வைத்திருக்க முடியும். அது மற்றவர்களுக்கும் ஒரு நல்ல உதாரணமாகவும் ஊக்கமாகவும் இருக்கும். முனிவன் பேசவோ, உபதேசிக்கவோ அவசியமில்லை. அவருடைய வாழ்க்கையே உலகத்தை விளங்க வைக்க ஒரு வேதமாகும். இன்றுகூட நான் என்னுடைய எல்லா கடிதங்களிலும் ஓம் ஓம் ஓம், ஹரி ஓம் தத் சத் மந்திரங்களை எழுதுகின்றேன். நான் என்னுடைய

கடிதத்தின் அரைப்பக்கத்தை மந்திரங்களாலும், தத்துவார்த்தக் கருத்துக்களாலும், நிரப்புகின்றேன். ஒரு நோட்டுப் புத்தகத்திலோ அல்லது மாணவர்களுக்கு கடிதங்களோ எழுத ஆரம்பிக்கு முன் நான் மந்திரத்தை எழுதுகின்றேன்.

நான் 24 மணி நேரமும் ஐந்து அல்லது ஆறு விதமான சாதனைகளைச் செய்கிறேன். ஜபம், தியானம், ஆசனப் பிராணாயாமம் உட்பட தேகப் பயிற்சிகள், வழிபாடு, அத்தியயனம், எழுத்து வேலை, உலகத்திற்குச்சேவை, மகாத்மாக்களுக்கும், நோயாளிகளுக்கும், ஏழைகட்கும் உதவுதல் இவ்வாறு நான் எனது உள்ளத்திற்கு எல்லா நேரத்திலும் தெய்வீக உணர்வால் சக்தியூட்டுகிறேன். நான் ஒய்வையும், இளக்கத்தையும் ஆழ்ந்த மூச்சுப் பயிற்சிகளுடன் மிருதுவாக இணைக்கின்றேன். இவ்வாருக நான் ரிஷிகேசத்தில் என்னுடைய 35 வருஷ வாழ்க்கையைக் கழித்து அதிசயிக்கத்தக்க புது ஆத்மீக சக்தியையும் பலத்தையும் ஏராளமாகப் பெற்றிருக்கின்றேன். நான் ஒவ்வொரு விஞடியிலும் அமைதியையும், பேரானந்தத்தையும் அனுபவித்து வருவதோடு நல்ல உயர்ந்த ஆரோக்கியத்தையும் காப்பாற்றி வருகிறேன். நான் என்னுடைய குடீரிலிருந்து காலையில் ஒரே மணி நேரம்தான் வெளியே வருகிறேன். அந்த நேரத்தில் ஆஸ்ரமத்தில் வசிப்போருக்கு வேலை கொடுத்துவிட்டு தூரமான இடங்களில் உள்ளவர்களைப்பற்றி நினைக்கிறேன். இருந்த போதிலும் நான் தினமும் இன்னொரு பத்துமணி நேரம் வேலை செய்ய முடியும் என்று உணர்கின்றேன். ரகசியம் என்னவென்ருல் என்னுடைய முறையான சாதனையும், இறைவனுடைய அருளுமேயாகும்.

## 3. இத்தனை புகைப் படங்கள் ஏன்?

புனிதமான ஆலயங்களில் அதிகாரிகள் விக்கிரகங்களைப் படம் பிடிக்க அனுமதிப்பதில்லை. பத்ரி, கேதார் ஆகிய இடங்களில் மக்கள் கோயிலுக்குள் கேமராப்பெட்டிகளை எடுத்துச்செல்ல அனுமதிப்பதில்லை. இது விநோதமாக இருக்கிறது இந்தியாவின் சில முனிவர்களும், பெரிய மனிதர்களும் தங்களுடைய புகைப்படங்களை எடுப்பதற்குப் பெரும் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர். புகைப் படங்கள் எடுப்பதன்மூலம் ஆத்மீக சக்தி குறைந்து விடும் என்று அவர்கள் நினைக்கின்றனர். இப்பேர்ப் பட்ட விஷயங்களில் நான் நம்பிக்கை வைப்பதே கிடையாது. நான் உட்கார்ந்திருக்கும்போதும், ஓடிக்கொண்டிருக்கும் போதும், நடந்து கொண்டிருக்கும் போதும், பேசிக்கொண்டிருக்கும் போதும், சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதும், விளையாடிக் கொண்டிருக்கும் போதும், கங்கையில் நீந்திக் கொண்டிருக்கும் போதும், தியானத்திலிருக்கும் போதும், படிப்பு அல்லது கோயிலில் வழிபாட்டிலிருக்கும் போதும், யாரையும் எத்தனை படங்கள் வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ள அனுமதிக்கின்றேன். பக்தர்கள் ஒரு படத்தைப் பார்க்கும் போது அவர்கள் உணர்வைப் பெறுகின்றனர். இனிமையான நற்போதனையான படங்களை தொடர்ச்சியாக சேர்ப்பதன் மூலம் புத்தகங்களுக்கும், சஞ்சிகைகளுக்கும் ஒரு விசேஷ கவர்ச்சி இருக்கச் செய்கிறது. என்னிடம் எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லை. நான் ஒவ்வொன்றிலும் நல்லதையே காண்கின்றேன்.

எல்லா தேசங்களிலிருந்தும் பெரிய மனிதர்கள் ஆஸ்ரமத்திற்கு வருகின்றனர். உலகின் எல்லா பாகங்களிலிருந்தும் மனப்பூர்வமான பக்தர்கள்

வந்து என்னுடன் சில மாதங்களோ, வருஷங்களோ தங்கியிருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் அவர்களுடன் சேர்ந்து எடுத்துக் கொண்ட என்னுடைய புகைப்படத்தின் பிரதியொன்றை விரும்புகின்றனர். நான் ஏன் அநாவசியமாக மறுத்து அவர்களை மனம் நோகச் செய்யவேண்டும்? விடுமுறை நாட்களில் ரிஷிகேசம் வரும் மாணவ கோஷ்டிகள் என்னை நடுவில் வைத்து கோஷ்டி புகைப்படம் எடுத்துக்கொள்ள விரும்புகின்றனர். நான் உலகின் பெரிய மனிதர்களோடும், மகாராஜாக்களோடும், சாதுக்கள், சந்நியாசிகளோடும், பக்தர்களுடனும், ஆஸ்ரம வேலைக்காரர்களுடனும், ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளுடனும், பள்ளிப் பிள்ளைகளுடனும் படம் எடுக்கப்பட்டிருக்கிறேன். நான் என்னுடைய தொப்பி, உடை ஆகியவற்றுடனும், இடுப்பத்துணி, மேலங்கியுடனும், உபாத்தியாயரைப் போன்ற தலைப்பாகையுடனும் மோட்டார் காரிலும், ஆகாய விமானத்திலும், 1950ல் அகில இந்திய யாத்திரையின்போது ராமேஸ்வரத்தில் ஒரு காளை மாட்டு வண்டியிலும், 1953ல் ரூர்க்கியில் தங்கியிருக்கும்போது ஒரு சைக்கிள் ரிக்ஷாவிலும், இவ்வாறெல்லாம் நான் படமெடுக்கப்பட்டிருக்கின்றேன்.

மகாராஜாக்கள், அல்லது பக்தர்கள் அல்லது ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்துக் கூலிகள் ஆகியவர்களுடனோ இமயமலையிலிருக்கும் பெரும் மகாத்மாக்கள் அல்லது ஆஸ்ரம தோட்டிகளுடனோ படம் பிடித்துக்கொள்வதில் எனக்கு எந்தவித பாகுபாடும் கிடையாது. நான் ஆஸ்ரமத்திலுள்ள சுறுசுறுப்பான குரங்குகள், பூனைகள், நாய்கள் ஆகியவைகளையும், மீன்கள், பசுக்கள், யானைகள், சிறுத்தைகள் ஆகியவற்றையும்கூட சேர்த்துக் கொள்கிறேன். கெட்ட பார்வையால் (கண்களால்)

என்னுடைய சக்தி இழக்கப்பட்டுவிடும் அல்லது வசப்படுத்தப்பட்டு விடும் என்று சொல்வதை நான் நம்புவதில்லை. உலகம் அடையும் அதிசயிக்கத் தக்க பயனை நான் கவனிக்கின்றேன். என்னைச் சுற்றியுள்ள ஜனங்கள் சந்தோஷமும் உற்சாகமும் அடையும்போது நான் குதூகலமடைகின்றேன்.

## 4. தற்சார்பு

அறையைச் சுத்தம் செய்தல், கங்கையிலிருந்து குடிப்பதற்கு தண்ணீர் கொண்டுவருதல், துணிகள், பாத்திரங்கள் சுத்தம் செய்தல், என்னுடைய பிக்ஷைக்கு க்ஷேத்திரத்திற்குச் செல்லுதல் போன்ற என்னுடைய வேலைகளை நானே கவனித்துக் கொள்கிறேன். என்னுடைய கட்டுரைகளையும், சாதகர்களுக்கான கடிதங்களையும் நானே டைப் அடிப்பது வழக்கம். நான் ஜாக்கிரதையாக பாக்கெட்டுகளைக் கட்டி அவைகளைத் தபாலில் சேர்த்துவந்தேன். நான் ஒருபொழுதும் என்னுடையமாணவர்களை நம்பியிருக்கவில்லை. அவர்கள் அடிக்கடி என்னுடைய குடீருக்குள் வந்து என்னுடையதினசரி வழக்கமான வேலைகளுக்கு இடையூறு விளைவிப்பதை நான் விரும்புவதில்லை. நான் வெளியிலே பிரயாணம் சென்றால் என்னுடைய மூட்டைகளை நானே எடுத்துச் செல்கிறேன். இலவச விநியோகத்திற்கான துண்டுப் பிரசுரங்களும், புத்தகங்களும் அடங்கிய மூட்டைகள் சிலவற்றைக் கூலி ஆட்கள் எடுத்துவரும்பொழுது அவர்களுத் தாராளமாகப் பணம் கொடுப்பதுண்டு. இரண்டு அணு காசுக்காக பிளாட்பாரத்தில் போர்டர்களிடமும் கூலிகளிடமும் சண்டை போட்டுக் கொள்ளும் தனவந்தர்களைக்கண்டு நான் அனுதாபப் படுகிறேன்.

ஆஸ்ரமத்தில் வேலைகள் அதிகமாகவே, இந்த வகையான வேலைகளைக்கவனிக்க நேரம்போதவில்லை. மனப்பூர்வமான மாணவர்கள் இவ்வேலைகளில் சில வற்றைச் செய்ய முன்வந்தனர். தன்னலமற்ற சேவை உள்ளத்தூய்மையை ஏற்படுத்துவதால் நான் அவர்களை இவ்வேலையைச் செய்யவும் மற்ற மகாத்மாக்களையும் நோயாளிகளையும் கவனிக்கவும் அனுமதித்தேன். நான் பார்வையாளர்கள், ஆஸ்ரமவாசிகள் ஆகியோருடைய தேவைகளை ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தேன். நானே நேரில் அவர்களுக்கு லாந்தர்களும் (அப்பொழுது மின்சாரம் இல்லை), கட்டில்களும், படுக்கைகளும், படிப்பதற்குப் புத்தகங்களும், அவர்களுடைய அறைகளில் இருக்கின்றனவா என்றும், அவர்களுக்கு காலா காலத்தில் டீ, பால், ஆகாரம் ஆகியவைகள் கிடைக்கின்றனவா என்றும் கவனித்து வந்தேன். இப்பொழுது நூற்றுக்கணக்கான மாணவர்கள் ஆஸ்ரமத்திற்கு வந்திருக்கின்றனர். வேலைகள் ஒழுங்கான முறையில் தானுகவே நடந்துவருகின்றன. நான் பேசாமல் உட்கார்ந்து, கவனித்துக் கொண்டு இறைவனுடைய அருளை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு பிரிவிலும் நடக்கும் வேலையை நான் மேற்பார்வை பார்த்து, எல்லா அங்கத்தினர்களுக்கும் உபதேசங்கள் கொடுத்து எல்லாவேலைப் பிரிவுகளிலும் தகுதிவாய்ந்த ஆட்களை நிர்ணயம் செய்து வைத்தும் இருக்கிறேன். திறமையும், யோக்கியதாம்சமும் இல்லாதவர்கள் கூட நான் அவர்களுக்குப் பூரணசுதந்திரமும், பொறுப்பும் கொடுத்து அவர்களிடம் நம்பிக்கை காட்டும் பொழுது அவர்களுடைய வேலையை குறுகிய காலத்தில் புரிந்து கொள்கின்றனர்.

## 5. ஒவ்வொன்றிற்குப் பின்பும் ஒரு நோக்கம்

நான் இயற்கையிலேயே கண்டிப்பானவன். இன்று கூட நான் என்னுடைய சாதனை, படிப்பு, சேவை ஆகியவற்றில் கண்டிப்பாய் இருக்கிறேன். என்னுடைய மன ஒருமைப்பாட்டையும், அமைதியையும் ஒன்றும் தொந்தரவு செய்ய முடியாது. நான் எல்லா சந்தர்ப்பங்களிலும் பேரானந்தத்துடன் இருக்க இயலும்; என்னுடைய வேலைகளை உறுதிப் பாட்டுடன் கவனிக்க முடியும். சில வேளைகளில் நான் மனமொடிந்தோரை உயர்த்தவும், சோர்வுற்றோரை ஊக்குவிக்கவும் தமாஷாக இருப்பதுபோல் காணப்படுகின்றேன். நான் என்னுடைய மாணுக்கர்களோடும், பார்வையாளர்களோடும், கேலி செய்து விளையாடி அவர்களைக் குழந்தைகளைப்போல் சிரிக்க வைக்கலாம். ஆனால் ஒவ்வொரு கேலி, வேடிக்கை, தமாஷ் ஆகியவற்றிற்குப் பின்னும் ஒரு காரியம் இருக்கிறது. ஒவ்வொன்றிற்கும் எனக்கு ஒரு எல்லையுண்டு. ஒவ்வொரு செய்கை, அல்லது வார்த்தைக்கும் என்னைச் சுற்றியுள்ளோரின் பரிணமத்தில் ஒரு குறிப்பிட்ட காரியம் இருக்கிறது. வேடிக்கை, தமாஷ் மூலம், பிஸ்கோத்துகள் கொடுப்பதின் மூலம், பழங்களும் துணிகளும் கொடுப்பதின் மூலம், மாணவர்களுடைய ருசி, மனப்பான்மை, குறைபாடுகள், ஆகியவற்றை நான் கண்டுபிடித்து அவர்களுடைய கஷ்டங்களையும் குறைகளையும் நிவர்த்திக்க அவர்களுக்கு ஒரு வழியை உபதேசிக்கின்றேன்.

நான் வீண் பேச்சு, கிளுகிளுப்புச் சிரிப்பு, உரத்துக் கலகலவெனச் சிரித்தல் ஆகியவற்றிற்குப் பரம விரோதி. நான் என்னுடைய மாணுக்கர்களை வீண் பேச்சுக்களை தவிர்த்து, உள்நோக்குடன் அல்லது வேலையுடன் தனிமையாக இருக்கும்படிச்

சொல்கிறேன். அவர்கள் கங்கையில் குளிப்பதற்கும் அல்லது சாப்பாட்டிற்கு அல்லது மாலையில் உலாவுவதற்கு வெளியில் செல்லும்போதும் நான் அவர்களைத் தனியாகவும் ஜபம் செய்து கொண்டும் செல்லும்படிக் கூறுகின்றேன்.

## 6. எளிய வாழ்க்கையும் தாராள மனப்பான்மையும்

நான் சிக்கனமானவன். நான் எனது சொந்த தேவைகளுக்காக அதிகம் செலவழிப்பதில்லை. நான் பல வருஷங்கள் க்ஷேத்திர சாப்பாட்டை நம்பி கடினமானதொரு வாழ்க்கை நடத்தியிருக்கிறேன். கரடுமுரடான, கடினமான வாழ்க்கை நடத்தும்பொழுது நான் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். எளிய வாழ்க்கை உயர்ந்த எண்ணத்திற்கும், உள்ளத்தையும் உடலையும் அடக்கியாளவும் உதவுகிறது. இன்று கூட க்ஷேத்திரத்திலிருந்து கிடைக்கும் பிச்சையை விரும்புகிறேன்; கிழிந்த உடைகளை உபயோகிக்கிறேன். "கௌபீன வந்தஹ கலு பாக்ய வந்தஹ" — அபிமான மற்றவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள், என்ற வார்த்தைகளைக் கொண்டு நான் எப்பொழுதும் உள்ளத்தை அடக்குகிறேன். ஆஸ்ரமத்தில் எல்லா சுக சௌகரியங்களுடனும் பல அரண்மனை போன்ற கட்டடங்கள் இருந்த போதிலும் நான் புனித கங்கை நதிக்கரையில் ஒரு வாடகைக் கட்டிடத்தில் வசித்து வருகிறேன். எளிய வாழ்க்கையில் ஒரு விசேஷ ஆனந்தம் இருக்கிறது. ஆனால் தபஸ் என்ற பெயரில் நான் கஷ்டப்படுவதில்லை. ஆஸ்ரம முன்னேற்றத்திற்கோ அல்லது யாராவது ஒரு தனிப்பட்டவரின் பரிணமத்திற்கோ குறிப்பிட்ட அம்சங்களுக்கு அவசியமேற்பட்டால் நான் அந்தத் தேவைகளை உடனடியாகச் செய்து முடிப்பதை வற்புறுத்துகின்றேன்.

ஒவ்வொரு படியிலும் நான் உலகத்தின் நன்மைகளையும், சாதகர்களின் பரிணமத்தைப் பற்றியும் எண்ணுகிறேன். பக்தர்கள் எனக்கு மதிப்புள்ள அம்சங்களையும், தித்திப்புகளையும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் கொடுக்கும் பொழுது நான் அவற்றை மிகுந்த அன்போடும் நேசத்தோடும் பெற்றுக் கொள்கிறேன். கொடுத்தவர்களை மகிழ்விக்கவேண்டி நான் அவற்றை உபயோகிக்கவோ அல்லது அவற்றை உடனே தகுதிவாய்ந்தவர்களுக்குக் கொடுத்துவிடவோ செய்கிறேன். மற்றவர்களுக்கு சேவையும் உதவியும் செய்யும் போது ஒவ்வொன்றிலும் மிகஉயர்ந்த ரகத்தையே விரும்புகிறேன். எனக்கு ஒரு உயர்ந்தரகப் பேனு, மேலங்கி, சால்வை அல்லது சாய்வுநாற்காலியோ கிடைத்தால் உடனே அதுபோன்ற பொருட்களை எல்லா வேலைக்காரர்களுக்கும், ஆஸ்ரமத்தில் முக்கிய மானவர்களுக்கும் கொடுக்க விரும்புகிறேன். அவைகளை வாங்குவதற்கு ஒருசந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருக்கிறேன். ஏனெனில் இஷ்டப்பட்டுக் கொடுக்கும் நன்கொடைகளின் மூலம் சக்திபொருந்திய வேலையைச் செய்துவரும் வளர்ந்து கொண்டிருக்கும் ஒருஸ்தாபனத்தில் உடனடியாக பொருள்வசதியைக் கண்டுபிடிப்பது கடினம். நான் சந்தர்ப்பங்களுக்காகக் காத்திருக்கின்றேன். நான் ஒவ்வொருவராக ஆஸ்ரமத்தில் இருப்பவர் அனைவருடைய தேவைகளையும் கவனிக்கிறேன். எனக்கு தித்திப்புப் பண்டங்களோ, பழங்களோ கிடைக்கும்பொழுது நான் என்னுடைய குடீரில் எதையும் ரகசியமாகச் சாப்பிடுவது கிடையாது. அந்த மூட்டையை சத்சங்க மண்டபத்திற்குக் கொண்டு வந்து அவற்றை அங்கு கூடியிருக்கும் எல்லோருக்கும் விநியோகம் செய்து விட்டு முடிவில் ஒரு சிறு பகுதியை பிரசாதமாக எடுத்துக் கொள்கிறேன். என்னுடைய நீரிழிவு நோயிலும்

கூட சில சமயங்களில் பக்தர்களால் மிகுந்த பக்தி யுடனும், அன்புடனும், நேசத்துடனும் கொண்டு வரப்படும் தித்திப்புக்களை ஏராளமாக எடுத்துக் கொள்கிறேன். நான் பாதிக்கப்படுவதே கிடையாது.

## 7. படாடோபத்திற்கும் பகட்டுக்கும் அடிமையல்ல

எனக்கு மோஸ்தர் அல்லது பகட்டு என்பது தெரியாது. இது ஒரு சாபக்கேடு. நான் இந்திரிய சுகங்களுக்காக வாழவில்லை. இது மாயை, மயக்கம் ஆகியவற்றின் பொருள். ஆணவம் பிடித்தவர், அறியாதவர்கள் ஆகியோரின் வழி. நான் என்னுடைய வேட்டியை எப்பொழுதும் முழங்காலுக்கு மேல் தான் உடுத்திக்கொள்கிறேன். நடை, உடை, பேச்சு, நடத்தை ஆகியவற்றிலிருந்து நான் பல வகைப்பட்ட ஆட்களினுடைய ஆணவத்தைச் சுலபமாகக் கண்டுபிடித்து அதை அழிக்க வழி சொல்லுகிறேன். சில சமயங்களில் நான் தலைப் பாகை அணிந்து கொண்டு ஒரு நீண்ட ஊன்று கோலை வைத்துக் கொள்கிறேன். ஸ்வர்க்காஸ்ரமத்தில் மாலையில் உலாவப்போகும் பொழுது இந்த நீண்ட ஊன்று கோலை வைத்திருந்தேன். நான் அதை ஒரு நாசியிலிருந்து மற்றொரு நாசிக்கு சுவாசத்தை மாற்றுவதற்கு யோகதண்டமாகப் பயன் படுத்தினேன். இவ்வாறு ஸ்வர சாதனையைக்காத்து வந்தேன். என்னுடைய ஆரம்ப நாட்களில் நான் ஒரு பொழுதும் ஷூவோ அல்லது குடையோ உபயோகித்தது கிடையாது. ஷூ, கைத்தடி, குடை ஆகியவற்றை தொடர்ந்து உபயோகிப்பதால் ஒருவனுடைய அங்கவியல், வழிகள், ஒழுக்கம் ஆகியவைகள் முற்றிலும் மாறுபட்டவைகளாக ஆகிவிடுகின்றன.

## 8. ஒவ்வொருவருக்கும் பரிணாமம்

பரிணாமத்தின்படி, ஆணவத்தின் பலம், குறைபாடுகள், கீழான ஆத்மாவின் குணம் ஆகியவற்றைப் பொறுத்து சாதனைகள் மாறுகின்றன. ஒரு பலம் பொருந்திய கட்டுமஸ்தான உடலமைப்பு, நல்ல ஆரோக்கியம் ஆகியவைகளே மாணுக்கனுக்கு ஒரு நல்ல யோக்கியதாம்சமாகும் மற்ற யோக்கியதாம்சங்கள் ஒருவன் சாதகமான சூழ்நிலையில் வைக்கப்பட்டால் அபிவிருத்தி செய்துகொள்ளலாம். ஆத்மீகப்பாதையில் சிரத்தை, யதார்த்தம், நம்பிக்கை ஆகியவற்றுடன் கூடியிருந்தால் எந்த ரகமான மாணவனும் முன்னேற்ற மடையலாம், பரிணமிக்கலாம். விசேஷமான திறமைகளோ, யோக்கியதாம்சங்களோ தேவையில்லை. வருஷக் கணக்கான ஆழ்ந்த அத்யயனமோ, பத்தாண்டுக் கணக்கில் ஒற்றைக்காலில் நின்றுகொண்டு ஜபமோ அவசியமில்லை. தேவைப்படுவதென்னவெனில் விருப்பமுள்ள, ஆசைப்படுகின்ற ஒரு மனமேயாகும். வீதி கூட்டுதல், டைப் அடித்தல்; எழுதுதல், தண்ணீர் சுமத்தல், நோயுற்றோரைக் கவனித்தல், ஏழைக்குதவுதல் — இந்த எல்லா வகையான சேவையும் சரியான உள்ளப்போக்கினால் யோகமாக மாற்ற முடியும். மாணவனுக்கு ஒரு புதிய நோக்கம் அவசியம்; அவன் ஒவ்வொரு படியிலும் ஆணவத்தை, ஒழுக்கம், பகுத்தறிவு, சாந்தம் ஆகியவற்றால் அடக்கவேண்டும். இடைவிடாத ஜபம், பிரார்த்தனைகள், முறையான தியானம் ஆகியவற்றின் மூலம் உள்ளத்திற்கு இறையுணர்வாம் சக்தியூட்டு.

## 9. நேரடி கவனிப்பும், தாராள மனப்பான்மையும்

ஆஸ்ரமத்திலே சமையலறைதான் யுத்த கேந்திரமாகும். எல்லா வகையான தொந்தரவுகளும் தப்பபிப்பிராயங்களும், வெறுப்பும், பொருமையும், வேலை செய்வோரிடையே சமையலறையிலிருந்து கிளம்புகின்றன. சமையலறை பக்கமிருந்து கேட்கும் கதைகளிலிருந்து மாணவர்களுடைய ருசி, குணம், ஆத்மீக முன்னேற்றம், இந்திரிய அடக்கம் ஆகியவற்றை நான் சுலபமாகக்கண்டு பிடித்து விட முடியும். ஒரு ஆஸ்ரமத்தில் அதுதான் குழப்பத்தின் பிரதான கேந்திரமாக இருக்கிறது. ஆனல் வேலை செய்வோருடைய துரிதமான ஆத்மீக பரிணமத்திற்கும், இறையன்பு, தயை, இரக்கம், பொறுமை, பெருந்தன்மை ஆகியவற்றை வளர்ப்பதற்கும் இதுதான் மிகச்சிறந்த இடமாகும். இங்கு ஜனங்கள் அதிசயிக்கத்தக்க முறையில் அனுசரித்துப்போகவும், சரிப்படுத்திக் கொண்டு போகவும் பயிற்சியளிக்கப் படுகிருர்கள்.

அதிக எண்ணிக்கையிலிருக்கும் ஆசிரமவாசிகள், பார்வையாளர்களின் மிகுந்த கூட்டம் ஆகியவை காரணமாக ஒரு பொது ரகமான உணவை அதிக அளவிலும், மற்றும் இந்தியாவின் பல்வேறு மாகாணங்கள், இதர நாடுகள் ஆகியவற்றைச் சேர்ந்த பல்வேறு ஜனங்களின் ருசிக்குத்தக்கவாறு இரண்டு அல்லது மூன்று ரகமான சாப்பாட்டிற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நான் தமாஷாக மக்களிடம் சொல்வதுண்டு — ''உங்களுக்கு நெய் கிடைக்காவிட்டால் பால் சாப்பிடுங்கள். பால் கிடைக்காவிட்டால் மோரைக் கேளுங்கள். அதுவும் கிடைக்கவில்லையானல் வேண்டுமளவு கங்கை

ஜலத்தை எடுத்துக்கொள்ளுங்கள்.'' அவர்கள் முணுமுணுக்கக் கூடாது. ஒருவன் அமைதியை அனுபவிக்க வேண்டுமானால் பல்வேறு சந்தர்ப்ப சூழ்நிலைகளையும் அனுசரித்துச் சரிசெய்து கொண்டு போவதில் மிகவும் எச்சரிக்கை யாக இருக்கவேண்டும். நான் அவர்களிடம் தங்களுடைய உடலைப்பற்றியோ, அல்லது தாடியைப் பற்றியோ அல்லது ரொட்டியைப் பற்றியோ (உணவு) அதிகமாக எண்ண வேண்டாம் என்று சொல்கிறேன். அவர்கள் எல்லோரும் இடைவிடாமல் எங்கும் நிறைந்த பிரம்மனை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

ஆஸ்ரமத்தில் பொறுப்புள்ள வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் சிலருக்கும் அல்லது தீவிரமான மௌன சாதனையில் ஈடுபட்டிருப்போருக்கும், அதிக சத்து தேவைப்படுவோர்க்கும் சத்துள்ள உணவையும் பழங்களையும் கொடுப்பதில் நான் விசேஷ கவனம் செலுத்துகிறேன். விசேஷமான பழங்களையும் பிஸ்கோத்துகளையும், வெண்ணெயையும் அவர்களுடைய குடீர்களுக்கே அனுப்பிவைக்கிறேன். கேட்காமலேயே நான் அவர்களுக்குச் சேவை செய்கிறேன். தபஸின் பெயரால் அவர்களுடைய ஆரோக்கியம் பாதிக்கப் படக்கூடாது. இதே முறையில் பார்வையாளர் களையும் நான் ஜாக்கிரதையாகக் கவனிக்கிறேன். அவர்களால் ஒருநாளில் ஆஸ்ரமத்தில் தங்களுடைய வழக்கத்தை மாற்றிக்கொள்ள இயலாது. அது அவர்களுடைய ஆரோக்கியத்தைப் பாதிக்கும்; மேலும் அவர்கள் உணவு, உடை, ஓய்வெடுத்துக் கொள்ளுதல் ஆகியவற்றில் பலமான திடீர் மாற்றத்தை ஏற்படுத்தினால் அவர்களால் எந்த விதமான சாதனையும் செய்ய முடியாது. ஆகவே நான் யாருக்கும் ஆகாரத்தைப் பொறுத்தமட்டில்

கடுமையான சட்ட திட்டங்களையும் கட்டுப்பாடு களையும் வற்புறுத்துவதில்லை.

டீ, காபி, புகை பிடித்தல் போன்ற சில கெட்ட வழக்கங்கள் இருந்தாலும் கூட கொஞ்ச காலத்திற்கு அவர்கள் தங்கள் வழக்கத்தைத் தொடர்ந்து செய்ய அனுமதிக்கிறேன். அவர் களுக்கு உள்ளத்தூய்மையும், மனோ சக்தியும் வந்து விட்டால் கெட்ட வழக்கங்கள் தானாகவே விலகி விடுகின்றன. விநோதமான ஆஸ்ரம சூழ்நிலையின் சக்திக்கு ஒரு தனிப்பட்ட பலன் இருக்கிறது. சாதகர்களுக்கு இவ்வாறு கொடுக்கப்படும் சுதந்திர மானது ஒரு மந்த ரகமான சாதகனுக்குக் கூட ஆஸ்ரமத்தில் சௌகரியமாக இருப்பதை உணர்ந்து தன்னை சக்தி பொருந்திய வேலையில் ஈடுபடுத்தி அவனுடைய மறைந்து கிடக்கும் திறமைகளை அபிவிருத்தி செய்ய உதவுகின்றது. குறிப்பாக நோயாளிகளைப் பொறுத்தமட்டில் நான் மிகவும் தாராளமானவன். உள்ளூர் கடைவீதியில் பழங்கள் கிடைக்கவில்லையானால் நான் இதற்கென்று ஒரு தனி ஆளை டில்லிக்குக்கூட அனுப்பி, இவ்வாறு ஏராளமாக செலவிட்டு, ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளுக்கு ஆரஞ்சுப் பழங்கள் வாங்கி வரச் செய்கிறேன். சரியான நேரத்தில் போடப்படும் ஒரு தையல் ஒன்பதை மிச்சப்படுத்துகிறது.

## 10. கட்டாயம் இல்லை, ஆனால் பூரண சுதந்திரம்

நான் சில காலத்திற்கு மக்களை அவர்கள் வழியி லேயே விட்டு அவர்களுடைய ருசி, சார்பு, ஆகியவற்றிற்குத்தக்கபடி எந்தத்துறையிலும் வேலை செய்ய அனுமதித்து அவர்களிடம் சரியான வேலை முறைக்கும், சாதனைக்கும் ஒரு இயற்கையான

ருசியை உண்டு பண்ணுகிறேன். நான் யாரையும் கட்டாயப்படுத்துவதில்லை. 1938-ல் என்னுடைய மாணாக்கர்களில் ஒருவருக்கு நான் எழுதிய கடிதங்களில் சில என்னுடைய மாணாக்கர்களின் நலத்திலும், குணத்திற்குத் தக்கபடி முதன்மையளிப்பதிலும் என்னுடைய வேலை முறையையும், கருத்தையும் விளக்கிக்காட்டும்:—

''உங்களுக்கு இப்பொழுது நிறைய ஓய்வு தேவை. இப்பொழுது செய்துவரும் வேலை முடிந்ததும் உங்களுக்கு அது கிடைக்கும். நீங்கள் கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டியதில்லை. அவசரம் ஒன்றுமில்லை. வேண்டுமளவு அவகாசம் எடுத்துக் கொள்ளுங்கள் எதைப்பற்றியும் அநாவசியமாக கவலை கொள்ள வேண்டாம். எல்லா பொறுப்புகளையும் தவறுகளையும் என் தலையில் சுமத்திக் கொள்கிறேன். தெய்வநெறிக் கழக நடவடிக்கைகளைப்பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை. உங்களால் செய்யக்கூடிய எந்த சிறு உதவியையும் இனிமேல், நீங்கள் விரும்பினால், செய்யலாம். இப்பொழுது நீங்கள் போதுமான அளவு செய்துவிட்டீர்கள். உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் இருங்கள். உங்களுடைய செலவுகளுக்கு இன்னும் கொஞ்சம் பணம் அனுப்பட்டுமா?''

''ஒன்று அல்லது இரண்டு புத்தகங்களை முடித்துவிட்டதும் நீங்கள் ரிஷிகேசம் திரும்பிவந்து விடலாம். ஆனால் ஒரு விஷயம். ஒரு கிராமத்தில் இரண்டு வாரம் ஓய்வு எடுத்துக் கொள்ளவும். எல்லா அச்சு வேலையையும் முற்றிலும் நிறுத்தி விடவும். பிறகு வேலையில் சேருங்கள். ஓரிரண்டு மாதங்கள் தங்கியிருந்தால் நீங்கள் ஓரளவு கணிசமான வேலை செய்ய முடியும். இரண்டு வருஷம்

வெளியில் செல்லாமல் ரிஷிகேசத்தில் தங்கி யிருக்கலாம். உங்களுடைய ஆரோக்கியம் இடங் கொடுத்தால் இவ்விஷயத்தைப்பற்றி யோசிக்கவும். இல்லாவிடில் உடனே ரிஷிகேசம் வந்து விடவும். தீர்மானிக்கவேண்டியது உங்களிடம் விடப் பட்டது. எல்லாம் உங்களுடைய சௌகரியத்திற்கும் விவேகத்திற்கும் விடப்பட்டுள்ளது.''

''தெய்வநெறிக் கழகத்துடன் உங்களுடைய பெயரைச் சம்பந்தப்படுத்தவில்லை. நீங்கள் விரும் பினால் விலாசமின்றி, உங்களுக்கு நேரம் கிடைக்கும் பொழுது, நீங்கள் விரும்பியபொழுது எனக்கு உதவி செய்யலாம். நீங்கள் எப்பொழுதும் சுதந்திர முடையவர்.''

''நீங்கள் உங்களுடைய உண்மையான அன்பின் மூலம் என்னை அடிமையாக்கிக்கொண்டிருக்கிறீர் கள் என்பதை நான் கவனித்து வருகிறேன். என்னுடைய இந்த உடம்பின்மேல் மோகம் சிறிதும் கொள்ளாதீர்கள். சுயேச்சையாளராக ஆகுங்கள். நான் உங்களை விடுவித்து விட்டேன். நீங்கள், தூரத்தில் இருக்கும்பொழுது நான் உங்களுக்கு அதிகம் உதவமுடியும் நான் யாரையும் என்னுடன் நீண்ட காலம் வேலை செய்வதை விரும்பவில்லை.''

வேலையைக் கண்டு பயப்படவேண்டாம். அடுத்த வருஷம் நீங்கள் உத்தரகாசிக்குப் போக லாம். நீங்கள் எந்த வேலையையும் கவனிக்க வேண்டியதில்லை. ஆனால் நல்ல திறமைசாலிகளை உங்களுடைய வேலையைத் தொடர்ந்து செய்ய தயார் செய்து பயிற்சி கொடுக்கவும். இங்கு தட்டெழுத்து இயந்திரத்திலேயே ஊன்றி, ஒன்றியிருக்கும் நல்ல ஆட்கள் இருக்கின்றனர். என்னுடைய புத்தக வேலையை நிறுத்திவிட வேண்டாம் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

சில புத்தக வரிசைகள் முடிவின்றித் தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கட்டும். நடைமுறைப் பாடங்களுக்காகவும் அதில் கொடுக்கப்பட்டுள்ள உபதேசங்களுக்காகவும் மக்கள் என்னுடைய புத்த கங்களைத் தேடித் திரிவார்கள் என்பது எனக்கு நிச்சயம் தெரியும்.

## 11. வேலைகளைச் செய்து முடிக்க வழி

முன்பு பல்வேறு வேலைக்காரர்களுக்கும் நான் ஒப்படைத்த வேலை விவரங்களைக் குறித்து வைக்க நான் ஒரு குறிப்புப் புத்தகம் வைத்திருந்தேன். இதை நான் ''சாட்டை'' என்று அழைத்தேன். வேலைப்பளு காரணமாக மாணுக்கர்கள் அவற்றை மறந்துவிட்டாலும்கூட அந்த வேலை முடிவடையும் வரை நான் அவர்களை விடுவதில்லை. மரியாதை யான முறையில் இவர்களை அடிக்கடி ஞாபக மூட்டுவேன். ஆனால் இது வேடிக்கையான அன்பு கலந்த முறையில் செய்யப்பட்டு வந்தது. ஒரே வேலைக்காக நான் பல முறை ஞாபகப்படுத்திய போதிலும் யாரும் என்னிடம் வெறுப்படையவில்லை. தாமஸ ரகத்தைச் சேர்ந்தவர்களுக்கு நான் கடிந்தும் கடிதங்கள் எழுதியிருக்கிறேன். ஆனால் கடைசியில் அவர்களை உற்சாகப்படுத்தவும் சந்தோஷப்படுத்த வும் சில உபதேசங்களடங்கிய வரிகளையும் சேர்த்தேன். சில கடிதங்களின் மூலத்தை கீழே கொடுத்திருக்கிறேன். முதலில் அவர்களு டைய தேகாரோக்கியத்தைப்பற்றியும் ஆத்மீக முன்னேற்றத்தைப்பற்றியும் கேட்டுவிட்டுப் பிறகு ஒப்படைத்த வேலையைப்பற்றிக் கேட்பேன்.

சௌக்கியமா? பல்வேறு வேலைகளுக்கும் மத்தியிலும் அவனுடைய நாமத்தை நினைத்துக் கொண்டும், எங்கும் அவனிருப்பதை உணர்ந்து

கொண்டும், எல்லா முகங்களிலும் அவனை கண்டு கொண்டும் தெய்வீகச் சுடரை எரிய வைத்துக் கொண்டிருக்கிறீரா? கஷ்டப்பட்டு வேலை செய்யவும். தியானம் செய்யவும். ஸ்வாத்யாயம் செய்யவும். அதிகமாக பேச வேண்டாம். கலக்க வேண்டாம், செய்திகளைப்பற்றி ஆவலுடையவனாக இருக்க வேண்டாம். மாலையில் தனியாக உலாவச் செல்லவும். ஆத்மீக நாட் குறிப்பு எழுதுவதைத் தள்ளி விட வேண்டாம். அது உனக்குப் பக்கத்தில் உள்ள குருவாகும். ''ஹரி ஓம்'' மந்திரத்தை பத்து தடவை உனது கடிதங்களின் தலைப்பில் எழுதவும். இது தீவிரமான வேலைகளுக்கு மத்தியில் ஆத்மானுபூதி அடையவும், இறைவனை நினைத்துக் கொண்டிருக்கவும் ஒரு சுலபமான சாதனையாகும். உன்னுடைய ஆரோக்கியத்தை மிகவும் ஜாக்கிரதையாகப்பார்த்துக்கொள்ளவும். ஜபம், தியானம், அத்யயனம் இவற்றில் ஒழுங்காக இருக்கவும். கொஞ்சம் கொஞ்சமாக உம்முடைய குணத்தையும் பழக்கத்தையும் மாற்றிக் கொள்ளவும்.

பிரம்ம சிந்தனையுடன் நல்ல ஆரோக்கியத்தை கர்மயோகத்துடன் காத்து வருகிறீர் என நம்புகிறேன். ''பிராணாயாம விஞ்ஞானம்'' என்னவாயிற்று? அது தயாராக இருக்கிறதா? இது விஷயமாக ஏன் மௌனமாக இருக்கிறீர்? கடைசி மாதிரிப் பிரதியின் தொகுப்பு ஒன்றை எனக்கு தயவு செய்து அனுப்பி வைக்கவும்.

நீங்கள் பூரண சௌக்கியமாக இருக்கிறீர்கள் என நம்புகிறேன். உம்முடைய வேலையுடன் ராமன், கிருஷ்ணன் அல்லது சிவனுடைய ஸ்மரணை வைத்திருக்கவும். நீங்கள் ஒரு யோகியாகவும் ஒரு ஞானியாகவும் ஆவீர்கள். பல்வேறு வேலைகளுக்கிடையில் இது உமக்கு சுலபமான

யோகமாகும். விடியற்காலேயில் குறைந்தது ஒரு சில நிமிஷ நேரமாவது மௌன தியானத்தின் மூலம் ஆத்ம சக்தியையும், அமைதியையும் பெற்றுக்கொள்ளவும். நான் திருப்பித் திருப்பி வற்புறுத்திக் கூறவேண்டியிருக்கிறது: உலகம் ஒரு ஜாலம். உள்ளத்தின் செப்பிடு வித்தை. அது பிரமை. (வெறும் தோற்றம்). நீ ஆத்மா. (சச்சிதானந்தா). அறி. உடலே மற. பெருமுயற்சியுடன் இந்த பாவத்தில் உன்னே நிலே நிறுத்து. உணர்: 'நான்' ஒன்று — ஏகம், சிதாகாசா, அகண்ட பிரம்மன், எல்லா ஜீவன்களின் ஆத்மா, நான் சாக்ஷி, நான் அகர்த்தா. சீறுகின்ற இந்திரியங்களேயும் வாசனைகளேயும் நசுக்கித் தள்ளு.'' இதுதான் உபநிஷத்துக்களின் சாரம் — அஞ்ஞானத்தை அழிக்க முற்றிலும் போதுமானது. தயவு செய்து நீர் எப்படி ஒரு நாளின் 24 மணி நேரத்தையும் செலவழிக்கிறீர் என்பதைப் பற்றி ஒரு அறிக்கை அனுப்பவும்.

நான் ஒருபோதும் என்னுடைய மாணுக்கர்களின் ஆத்மீக நன்மைகளே மறப்பதில்லே. அவர்களுக்குத் தொடர்ந்து வாழ்க்கையின் நோக்கம், சாதனேயின் முக்கியத்துவம், இவைகளே இந்த தெய்வீக இயக்கத்தில் ஏராளமாக வேலே இருந்தபோதிலும், ஞாபகமூட்டி வருகிறேன். இங்கே மற்ருெரு கடிதம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த உலகம் தீர்க்க ஸ்வப்பனம். நீ வ்யாபக ஆத்மா. இந்த ஒரு கருத்தில் நிலேத்திரு. நான் இந்த விஷயத்தை அடிக்கடி அடித்துக் கூறவேண்டியிருக்கிறது. ''சத்குரு மணி மாலே'' என்ற கட்டுரை வந்து சேர்ந்ததைத் தெரிவிக்கவும். இதை நீர் செய்யாவிட்டால் ஒன்றன்பின் ஒன்ருக எனக்கு

பதில் கிடைக்கும்வரை ஞாபகக் கடிதம் அனுப்பப் படும். இந்த தலைவேதனையைத் தவிர்க்க ''ஆம், சத்குரு மணி மாலை வந்து சேர்ந்தது'' என்று சொல்லிவிடவும். இது ஏராளமான நேரத்தையும் சக்தியையும் மிச்சப்படுத்தும்.

நான் உமக்கு எழுதிய கடிதங்களனைத்தையும் புத்தக ரூபத்தில் தொகுக்குமாறு பல தடவை எழுதியிருக்கிறேன். திருப்பிச் சொல்லப் பட்டிருப்பவைகளை லேசாக நீக்கிவிட்டு சாதகர் களுக்குப் பயன்படக் கூடியவைகளைப் பொறுக்கி யெடுக்க வேண்டியது; அவ்வளவுதான். உம்மிட மிருந்து எனக்கு ஒரு பதிலும் வரவில்லை. இந்த வேலையை இப்பொழுது செய்ய உமக்கு மனமில்லை யானல் நான் காத்திருக்கிறேன். இது உம்மை அதிகம் வருத்தாது. இதை நீர் மெதுவாகச் செய்யலாம்.

## 12. உற்சாகமூட்டும் செய்தி

தூஷணை வியாபாரத்தை நான் நம்புவதில்லை. மிக மோசமான பாவியைக்கூட மன்னிக்கவும். ஆத்மீகப் பாதையில் ஒவ்வொருவருக்கும் அபிவிருத்தியடைய நம்பிக்கையுண்டு. நான் என்னுடைய மாணக்கர்கள் பலமுள்ளவர் களாகவும், தைரியமும் உற்சாகமும் உடையவர் களாகவும் இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன். அவர்கள் இறைவனுடைய காரியத்தை சக்தியுடன் நடத்திச்செல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். என்னுடைய கடிதங்கள் இக்கருத்தை ஆமோதிக் கின்றன.

அநாவசியமாக கவலைப்பட்டுக் கொண்டிருப் பதில் உன்னுடைய சக்தியை வீணக்க வேண்டாம்.

நமது வேலை எல்லையின்றி வளர்ந்து கொண்டு போகிறது. நாம் தூஷணைகளையும், கண்டனங்களையும் கவனிப்பதா அல்லது யோக வேலைகளில் முன்னுக்குச் சென்று கொண்டிருப்பதா? மறந்து விடு. மன்னித்துவிடு. மன்னித்துவிடு.

மக்கள் தினசரிப் பத்திரிகைகளில் உன்னுடைய பக்கத்தில் ஒரு பெண்ணுடன் உன்னை விளம்பரப் படுத்தினுல் கூட நான் நம்பமாட்டேன். இது தூஷணை செய்கின்ருேரின் குறும்புச் செயல். நான் உன்னை ஒரு பெண்ணுடன் கையும் களவுமாகப் பிடித்தால் கூட உன்னை மன்னித்து விடுவேன். இவையெல்லாம் வழியில் ஏற்படுகின்ற தவறுதல்களேயொழிய கொடிய குற்றங்களல்ல. நான் உனக்குச் சொல்வேன். ''இதை இனிமேல் செய்யாதே. ஒளி மார்க்கத்திலே முன்னேக்கி நட.'' நீ அனுவசியமாக உன்னை அலட்டிக் கொள்கிருய். நான் உன்னை ஊக்குவிக்க ஒரு தந்தி அனுப்பலாமென்று விரும்புகிறேன். நீ பல மேன்மையான காரியங்கள் செய்ய வேண்டி இருக்கின்றன. நான் உன்னுடைய எதிர்கால ஆத்மீக வேலைகளுக்கு இடத்தைத் தயார் செய்து கொண்டு வழிவகுத்துக் கொண்டு இருக்கின்றேன்.

உன்னைப்போன்ற பல மாணுக்கர்கள் உலகிற்கு உதவி செய்ய இந்தியாவில் உதிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். தைரியத்துடனிரு. எப்பொழுதும் உற்சாகத்துடனிரு. உண்மையை எங்கு பார்த்தாலும் பிரகடனப்படுத்து. எழுந்து நில். இடுப்பு வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு எங்கு பார்த்தாலும் வேதாந்தம், யோகம், பக்தி ஆகியவற்றை உபதேசம் செய். ஒரு சிறிது கூட கவலைப்பட்டுக் கொள்ளாதே. இவ்வுலகிலுள்ள யாரும் துன்புறுத்த முடியாது. நீ வெல்லப்பட

முடியாதவன். உண்மையிலே தங்கியிருந்து கொண்டு எந்த மேடையின்மீதும் சிங்கம் போல் கர்ஜனை செய். உன்னிடமுள்ள சிறு குறைகள் உடனே மறைந்துவிடும். கவலைப்பட வேண்டாம். ஆத்மனில் தூய்மை இருக்கிறது. அது நிரஞ்சன மானது, களங்கமற்றது. நீ நிரஞ்சனமானவன். இக்கருத்தில் ஒட்டியிரு. அசுத்தங்கள் மறைந்து போகும். குறைகளை நிவர்த்திக்கவும்—ஒழித்துக் கட்டவும். இதுவே சரியான வழி. பலம், சந்தோஷம், அமைதி, பேரானந்தம், இறவாத் தன்மை உன்னுடைய குணமே. உறுதிப்படுத்து, உணர்.

## 13 தூஷணையைப்பற்றிய அபிப்பிராயம்

இங்கே 1937ல் என்னுடைய மாணுக்கர்களில் ஒருவருக்கு, அவர் பஞ்சாபிலுள்ள ஒரு பிரசித்திப் பெற்ற ஆஸ்ரமத்தின் ஸ்தாபகரைத்தாக்கி ஒரு துண்டுப்பிரசுரம் வெளியிட்டிருந்த சமயம், எழுதப் பட்ட கடிதம் கொடுக்கப்பட்டுள்ளது.

பஞ்சாபிலுள்ள ஒரு ஆஸ்ரமத்தை மறைமுக மாகத் தாக்கி நீர் ஒரு சிறு துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருப்பது எனக்குத் தெரிய வந்தது. நீர் இதைச் செய்திருக்கக்கூடாது. இது தூஷணை யாகும். கடந்து சென்றதை மறந்து விடவும். இது சந்நியாசிக்கு ஒரு பெருந்தன்மையான செயல் அல்ல. சிறிய புத்தி படைத்த இல்லறத் தார்கள்தான் இது மாதிரி நடந்து கொள்வார்கள். சந்நியாசம் என்பது பெருந்தன்மையாகும். இனி மேல் இது போன்ற காரியம் எதையும் செய்ய வேண்டாம். இது மறைமுகமாக என்னைப் பாதிக் கிறது. உமது உடல் நிலை எப்படி இருக்கிறது?

நான் என்னுடைய மாணுக்கர்கள் தங்களுடைய வேலையைக் கவனித்துக் கொண்டு அவர்களுடைய சக்தியையும் நேரத்தையும் மற்றவர்களைக் குற்றம் கண்டுப்பிடிப்பதில் செலவிடாமலிருக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன். உள்ளச் சமநிலையை அடையவும்; பொறுமை, மன்னிப்பு ஆகிய குணங்களை வளர்க்கவும். அவர்களுக்கு பரந்த நோக்கம் (திருஷ்டி) இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். கடிதம் தொடருகிறது.

ஒரு சிறிது கலக்கமிருந்தாலும் உன்னுடைய வேலை பாதிக்கப்படும். மௌனமாக இருந்து சிதருத கவனத்துடன் வேலை செய்யவும். யாருடனும் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம். ஒவ்வொன்றும் அமைதியான முறையில் முடியட்டும். எல்லாவற்றையும் மறந்து விடவும். நீர் இன்னும் பலஹீனமாகவே இருக்கிறீர். நீர் ''வார்த்தைகளி''ஞல், ஜால வித்தையினுல் கலக்கப்பட்டு அல்லது அலேக்கழிக்கப்பட்டு விட்டீர். உறுதியுடையவஞக ஆகு — ''பழிக்குப் பழி'' இல்லறத்தார்களின் குணமேயன்றி சந்நியாசிகளுடையதல்ல. அவமானத்தையும். கெடுதியையும் தாங்கிக்கொள்வது சந்நியாசிகளின் சுபாவம். அது ஆத்மீக பலம். அதுதான் சமநிலே. அற்ப விஷயங்களில் மனம் கலங்குவது, மாதக்கணக்கில் கவலைப்படுவது, பயனற்ற வழியில் சக்தியை விரயமாக்குவது ஆகியவை ஞானமாகா.

அமைதியாக இருக்கவும். பழைய விஷயங்களைப் பற்றி ஒரு போதும் நினைக்க வேண்டாம். நீங்கள் தவருன வழிகளில் எண்ணிக்கொண்டு இருப்பதின் மூலம் உங்களுடைய சக்தியை வீணுக்கிக் கொண்டிருக்கிறீர்கள். இது அமைதியான வேலையில் குறுக்கிடும். அத்துண்டு பிரசுரத்தின் மிகுதியுள்ள

பிரதிகளை விற்பதை நிறுத்திவிட்டு அவற்றை அழித்து விடவும். அந்த ஆஸ்ரம ஸ்தாபகர் என்னுடைய ஆத்ம நண்பர், சகோதரர். மறைமுகமாகக்கூட அவரை பாதிக்கக்கூடிய முறையில் நீங்கள் எதையும் செய்யக்கூடாது. அதில் எழுதியுள்ள சில இடையூறு விளைவிக்கக்கூடிய விஷயங்களைப் பற்றி நீங்கள் அறிவீர்கள். எல்லாவற்றையும் மறந்து விடவும். அமைதியில் தங்கியிருக்கவும். அதுபோன்ற புத்தகங்கள் எதையும் வெளிக்கொணர வேண்டாம். தத்துவம், யோகம், பக்தி, வேதாந்தம் ஆகியவைகளைப்பற்றித் தூய்மையாக எழுதவும். இதுமாதிரியான சிறு புத்தகங்களை வெளிக்கொணர வேண்டாம். நீங்கள் சரியாக இருந்தாலும்கூட மற்ற கட்சிக்காரர் வருத்தப்படும்பொழுது நீங்கள் அனுதாபத்துடன் இருக்க வேண்டும். உங்களுக்கு நல்ல கருத்துக்கள் இருந்தாலுங்கூட அதுபோன்ற சிறு புத்தகங்களை வெளியிடாதீர்கள். ஜாக்கிரதையாக இருக்கவும். சம்பந்தப்பட்டவர் அதிகமாக வருந்தும்பொழுது நீங்கள் எப்படி அவ்விஷயங்களைத் திரும்பத் திரும்பத் துளைக்கவோ அல்லது எழுப்பவோ முடியும். இது ஒரு சந்நியாசியினுடைய தர்மமல்ல. இம்மாதிரி வேலையை எவ்வளவு காலம் நீடிக்கப் பிரியப்படுகிறீர்கள்? உள்ளத்தை அமைதியாக வைத்திருக்கவும்; உம்முடைய கவனத்தை நமது வெளியீடுகள், தியானம், மற்றும் இதர உபயோககரமான வேலைகள் ஆகியவற்றில் செலுத்தவும்.

## 14. கண்டனத்தை பொருட்படுத்தாதே

பயனற்ற தர்க்கங்களில் நான் அக்கறை காட்டுவதில்லை. ஆனால் நான் துரிதமான செய்கை, கீழ்ப்படிதல் இவற்றிலேயே கவனம் செலுத்துகிறேன். கண்டனத்தினால் என்னுடைய சிஷ்யர்கள் நிலை

இழந்து விடுவதை நான் விரும்புவதில்லை. ஆகவே என்னுடைய பலமான உபதேசம் :—

இந்த விஷயம் மிகவும் அபாயகரமானது. இனிமேல் பூர்ணமௌனம் நீர் அனுஷ்டிக்கவேண்டு மென்று நான் விரும்புகிறேன். உம்முடைய உடனடியான நடவடிக்கை இதற்குத்தேவைப்படுகிறது. எனக்கு உம்முடைய விவாதங்கள், நியாயம் முதலியன எதுவும் வேண்டாம். விஷயம் பூரணமாக நிறுத்தப்பட வேண்டும். நான் பக்ஷபாதமுடைய வனாகவும் நியாயமற்ற முறையிலும் இருக்கலாம். நீங்கள் பதில் அனுப்பவேண்டிய அவசியமில்லை. ஆனால் தயவுசெய்து என்னுடைய வேண்டுகோளுக்கு இணங்க உடனடியாக தவறாமல் நடந்து கொள்ளவும். சந்நியாசம் அமைதியான நிர்மாண வேலைக் காகத்தான். நான் மேல்கொண்டு உமக்கு என்ன எழுதப் போகிறேன்? நீர் ஆத்மாவா அல்லது உள்ளமும் உடலுமா? என்னுடைய எல்லா புத்தகங்களையும் 1001 தடவை படித்திருந்தாலும், இன்னும் நீங்கள் உள்ளத்துடனும் உடலுடனும் உங்களை ஒன்றாக்கி விடுகிறீர்கள். நீங்களே உங்களுடைய உடலையும் உள்ளத்தையும் வெறுக்கின்றீர்கள். உங்களுடைய உடலைக் கண்டிக் கிறவர்கள் உங்கள் உண்மையான நண்பர்களாவர். அப்படியானால், ஏன் கலக்கமடைகின்றீர்கள்? நீங்கள் மெலிந்து இருக்கிறீர்கள். கண்டனங்களை ஒதுக்கித்தள்ளவும். நீங்கள் ஏன் கடந்ததை நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? இது ஒரு கெட்ட பழக்கம். உங்களுக்கு மன அமைதி இருக்க முடியாது. கண்டனங்களையும் புகார்களையும் பொருட்படுத்தாதீர். உமக்கு விஷம் வைத்து உம்மைக் கொல்ல நினைத்த அந்த மனிதனுக்கு நல்லதைச் செய்யவும். அதை செய்கையில் காட்டவும்.

உங்களைக் கவலைக்குள்ளாக்கிக் கொண்டிருந்த அந்த மகிழ்ச்சியற்ற, வெறுக்கத்தக்க நிகழ்ச்சியிலிருந்து நீங்கள் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் சில அனுபவங்களைப் பெறவேண்டுமென்று இது அந்த மாபெரும் திட்டத்தில் இருந்தது. கெட்டதிலிருந்து நல்லது வருகிறது. இது உங்களுக்கு பலத்தையும் ஞானத்தையும் கொடுத்திருக்கிறது. இப்பொழுது அமைதியில் நிலைத்து சிங்கம்போல் வேலை செய்யவும். சந்தோஷம், பேரானந்தம், சக்தி, பலம், தேஜஸ், மகிமை ஆகியவைகள் உங்களுடைய தெய்வீக உரிமையாகும். நீங்கள் இவ்வுலகின் சக்ரவர்த்தி என்று எண்ணிக்கொள்ளுங்கள். இன்னல்களை தைரியத்துடன் சமாளியுங்கள். உம் சக்தியைப் பெறுங்கள். கடவுள் உங்களுக்கு விசேஷ சலுகை கொடுத்திருக்கிறார். அவர் உங்களை பிரம்மச்சாரியாக்கி எல்லா பந்தங்களையும் அறுத்து உங்களை முற்றிலும் விடுவித்திருக்கிறார். பிறகு புலம்பல், ஏக்கம், துயரம், துன்பம் அல்லது சோர்வுக்கு இடமேது? புன்னகை புரியுங்கள். யோக நடவடிக்கைகள், ஞானத்தைப் பரப்புதல், உற்சாகம், அமைதி, தெய்வீக சேவை ஆகியவைகள் உங்களுடன் இரண்டறக் கலந்து இருக்கின்றன. நான் உங்களுக்குச் சேவை செய்ய தங்கள் பாதங்களில் எப்பொழுதும் சித்தமாயிருக்கின்றேன். நம்புங்கள். நம்புங்கள். நம்பிக்கையுடனிருங்கள். ஆனந்தத்தால் குதியுங்கள். பரவசத்தால் நர்த்தன மாடுங்கள். சிங்கம்போல் நடக்கவும். சுற்றிலுமுள்ள எல்லோருக்கும் சந்தோஷம், அமைதி, பலம் ஆகியவற்றை அள்ளி வீசுங்கள்.

## 15. மனவுறுதியும் நன்றியறிதலும்

இந்த தெய்வீக இயக்கத்திற்கு என்னுடைய சிஷ்யர்களால் செய்யப்பட்டிருக்கும் சேவைகளை என்னால் ஒருபொழுதும் மறக்க முடியாது. ஒருவேளை ஏதாவது காரணமாக என்னிடமிருந்து அவர்கள் போய்விட்டாலும்கூட நான் அவர்களால் செய்யப்பட்ட வேலையை மறக்கமாட்டேன். அவர்கள் என்னுடைய மனதில் தொடர்ந்து வசித்து வருவர். கடிதம் தொடருகிறது.

ஒருபொழுதும் உங்கள் கருத்தை மாற்ற வேண்டாம். நான் தங்களுடைய சேவகன், நலம் நாடுவோன், நண்பன், சகோதரன். நீங்கள் என்னை விட்டகன்றாலும் என்னால் உங்களை விடமுடியாது. நான் உங்களை விடப்போவதில்லை. நீங்கள் எப்பொழுதும் என்னுடைய மனதிலே வசித்து வருகிறீர்கள். நீங்கள் எப்பொழுதும் எனக்குப் பிரியமானவர். என்னால் யாரிடமும் கடுஞ்சொல் சொல்ல முடியாது. யாராவது ஒருவர் ஒரு கடுஞ்சொல் சொன்னால் நான் அந்த மனிதனுக்காக வருந்துகிறேன். நான் அவரைத் திருத்த விரும்புகிறேன். நீங்கள் இதை அனுபவிக்கலாம். நீங்கள் இதை அனுபவித்திருக்கலாம். குறைந்தது இந்த ஒரு நற்குணத்தில் ஒரு கிரணத்தையாவது எனக்கு அளித்திருக்கும் இறைவனுக்கு நான் நன்றியுடையவனாக இருக்கிறேன். நான் இன்னும் உயர்ந்த ஞானத்திற்காக ஆசைப்படவில்லை. இறைவன் எனக்கு இந்த குணத்தை அளித்திருக்கிறான். இது அவனுடைய கருணை.

இப்பொழுது முழு விஷயமும் தெளிவாகி விட்டிருக்கிறது. அவனுடைய தயையையும்,

கருணையையும் உணருங்கள். நானே தபாலாபீஸிற்குச் சென்று இந்தக் கடிதத்தைப் போடுகிறேன். நீங்கள் ஒரு மனிதனுடன் ஒன்ருக மிகநெருங்கி வருஷக்கணக்கில் பழகியிருந்தாலும் அவனுடைய உள்ளத்தை, ஏன் ஒருவனுடைய சொந்த உள்ளத்தையேகூட, புரிந்துகொள்வது மிகக் கடினம். கடவுள் மட்டுமே உண்மையான குற்றவாளியை அறிவார். நீங்கள் நெருங்கிய பழக்கத்தின் மூலமாக என்னை நன்ருக அறிவீர்கள்; உங்களுக்கு கையெழுத்து, மேலுறை ஆகியவற்றிலிருந்து சந்தேகப்பட காரணமிருப்பினும் இந்தப் பொய்க் கடிதம் சம்பந்தப்பட்ட கடிதப் போக்குவரத்தை முற்றிலும் விட்டு விட்டு, அதைப்பற்றி நீங்கள் இங்கு வரும்பொழுது என்னிடம் தனியாகப் பேசியிருந்திருந்தால் இது ஒரு புத்திசாலித்தனமான காரியமாக இருந்திருக்கும். இது எல்லாம் உங்களுக்கும், எனக்கும், எல்லோருக்கும் அநாவசியமான அலட்டலாகும். இந்த விவகாரங்களையெல்லாம் கவனித்துக்கொண்டிருக்கவும் இந்த உபயோகமற்ற விஷயங்களில் நேரத்தையும் சக்தியையும் வீணுக்கவும் உங்களுக்கோ அல்லது எனக்கோ நேரமில்லை. நாம் நமது வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியையும் அவனுடைய சேவையிலும் தியானத்திலும் செலவழிக்க வேண்டும்.

நான் உங்களுக்கு ஒருபொழுதும் அதுமாதிரியான கடிதம் எழுதமாட்டேன் என்கின்ற திடமான நம்பிக்கை உங்களுக்கு இருந்திருக்க வேண்டும். இங்கு நீங்கள் தவறி விட்டீர்கள். பரவாயில்லை. மனிதன் தவறுகளினுல் கற்றுக்கொள்கிருன்; வளருகிருன்.

ஓராயிரம் பேர் உங்களைப்பற்றித் தவருகப் பேசி என்னுடைய காதுகளுக்கும் மனதிற்கும்

விஷம் வைத்தாலும்கூட நான் கேட்கமாட்டேன். நீங்கள் எனக்கும், இந்தியாவிற்கும், உலகிற்கும் ஒரு கௌரவமாக இருக்கிறீர்கள்.

## 16. நீங்கள் தீமையைவிட்டு விலகிச்செல்ல முடியாது

இந்த உலகம் ஒரு விநோதமான உலகம். நாம் பல பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. இயேசுகிறிஸ்துவின் சிஷ்யர்களில் ஒருவன் இயேசுவைக் காட்டிக் கொடுத்தான். முன்னேறும் சாதகனுக்கு ஒவ்வொரு படியிலும் பல இடையூறுகள் வரும். நாம் நமது பலத்தைக் காட்டவேண்டும். சிறு விஷயங்களால் கலக்கப்பட வேண்டாம். உற்சாகத்துடனிருங்கள். புன்னகை புரியுங்கள். தைரியமாக வேலை செய்யுங்கள். ஒன்றும் நடக்காதமாதிரி எண்ணிக்கொண்டு உணரவும். சிறு விஷயங்களைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீங்கள் இன்னும் பல பெரும் காரியங்களைச் செய்யவேண்டியிருக்கிறது. பிரகிருதி உங்களை பல்வேறு வகைகளில் தயார் செய்து கொண்டிருக்கிறது. இதை உணரவும். இறைவனுக்கு நன்றியுள்ளவராக இருக்கவும்.

இந்த விஷயங்கள் நடந்துவிட்டன, இருந்த போதிலும் உங்களையோ அல்லது ஸ்ரீ ''B'' அல்லது ஸ்ரீ ''A'' அல்லது Sri ''Y''யையோ நான் விடமுடியாது. எல்லோரும் தவறுகளையும் பெரும் பிழைகளையும் செய்து வளருகின்றனர். நீங்கள் கடந்ததை முற்றிலும் மறந்துவிட வேண்டும். நான் மேலே எழுதியுள்ளபடி உங்களுடைய இருக்கைக்கு பிரம்மானந்தா ஆஸ்ரமத்தில் ஏற்பாடு செய்து உங்களுக்கு தனியாக ஆகாரம் கொடுக்கச் செய்கிறேன். நீங்கள்

யாருடனும் கலக்கவேண்டியதில்லை. நீங்கள் தெய்வீக திட்டத்திற்கு சில வேலை செய்ய முடியும். நீங்கள் தீயவர்களை உலகின் எப்பகுதியிலிருந்தும் நீக்கிவிட முடியாது. நீங்கள் எங்கு சென்றாலும் அவர்களுக்கு மத்தியில் இருக்கவேண்டியிருக்கிறது. ஆனால் ஆத்ம பாவத்தை உடையவராக இருக்கவும். இது நிலைமையை மாற்றும்.

நீங்கள் எல்லோரையும் நேசிக்க முயற்சிக்க வேண்டும். உங்களை அழிக்கவிரும்பும் மிக மோசமான மனிதனையும்கூட நேசிக்க முயற்சிக்கவும். இது சந்நியாசம். ஒரு சந்நியாசி என்பவன் தனக்கு யாரும் இல்லை என்று உணர்பவனேயாவான். நாம் நம்மை அழிக்க விரும்புவோரிடை, சாதகமல்லாத சூழ்நிலையில், வசித்துக்கொண்டு பிறகு வேலை செய்யவும், தியானம் செய்யவும் வேண்டும். அப்பொழுதுதான் நாம் வளர முடியும். அப்பொழுதுதான் உங்களுக்கு ஒரு முனிவனுடைய கலங்காதஉள்ளம் இருக்கும். இதற்கு உங்களுக்கு சாதனையின் மூலமாக பிரமாதமான அந்தரங்க ஆத்மீக பலம் இருக்கவேண்டும்.

## 17. சிஷ்யர்களிடையேயுள்ள வாக்கு வாதத்தைக் குறித்து என்னுடைய மனோபாவம்

என்னுடைய மாணாக்கர்களில் ஒருவர் என்னுடைய பொய்க்கையெழுத்திட்டு சென்னையிலுள்ள மற்றொரு முக்கியமான தொண்டருக்கு ஒரு பொய்க் கடிதம் எழுதினார். அது அவரை இடையூற்றுக்காளாக்கி நிலை குலையச் செய்து விட்டது. அமைதியையும் சரியாகப் புரிந்து கொள்ளும் தன்மையையும் நிலைநாட்ட

என்னுடைய வேலை முறையைக் காட்டுகின்ற கடிதம் இங்கே இருக்கிறது. கடிதம் 1937 செப்டம்பர் 8 தேதியிடப்பட்டது. இது என்னுடைய மனோபாவம், என்னுடைய வேலையின் தன்மை, முறை இவற்றைத் தெளிவாக விளக்குகிறது. ஆஸ்ரமம் முழுவதும் பாதிக்கப்பட்டாலும்கூட நான் எனது கொள்கையை விட்டுக்கொடுப்பதில்லை. அது பின்வருமாறு கோடிடப் படுகிறது.

நான் யாருடைய உணர்ச்சிகளையும் என்னுடைய கனவிலும்கூட புண்படுத்த முடியாது. நான் எல்லோரையும், என்னுடைய வாழ்க்கைக்கே குறிவைக்கும் மகா மோசமானவனையும்கூட நேசிக்கிறேன். மாணுக்கர்கள் என்னை விட்டுச் சென்றாலும் கூட நான் அவர்களை விடமுடியாது. நான் அவர்களை என்னுடைய ஆத்மீக வஜ்ரப் பசையாகிய ''ஓம் நமோ நாராயணுய'' மந்திரம், பிரார்த்தனைகள் ஆகியவை மூலமாக ஒன்று சேர்க்கின்றேன்.

மேற்கூறிய என்னுடைய மனோபாவத்தை எடுத்துக் கூறுகின்ற அந்தக் கடிதத்தின் முழு வாசகமும் இங்கே இருக்கிறது :

அன்பிற்குரிய ஸ்ரீ ஸ்வாமிஜி,

வணக்கங்கள். நான் அதுபோன்ற கடிதம் ஏதுவும் உங்களுக்கு எழுதவில்லை. அது ஒரு பொய்க் கையெழுத்திட்ட கடிதம். அந்தக் கையெழுத்தை அன்பு கூர்ந்து மற்றவற்றோடு ஜாக்கிரதையாக ஒப்பிட்டுப் பாருங்கள். நீங்கள் திருடனைக் கண்டு பிடித்து விடுவீர்கள். அன்பு கூர்ந்து அக்கடிதத்தை ரெஜிஸ்டர் தபால் மூலமாக என்னுடைய பார்வைக்கு அனுப்பிவைக்கவும். அது ஒரு டைப் அடித்த கடிதமாக இருக்கவேண்டுமென்று நான்

யூகிக்கின்றேன். அது நம்முடைய மிஷினில் அடிக்கப்பட்டதா அல்லது வேறு ஏதாவது மிஷினில் அடிக்கப்பட்டதா, நம்முடைய குழுவில் யாரால் அடிக்கப்பட்டது என்பதை உங்களால் கண்டு பிடிக்க முடிகிறதா ?

சில நாட்களுக்கு முன்பு இங்கு ஒரு தொந்தரவு இருந்தது. ஸ்வாமி ''B'' சில விஷமத்தை உண்டு பண்ணினுர். ஆகவே நான் அவரை ஆஸ்ரமத்தை விட்டு விலகிச்செல்லுமாறு சொன்னேன். அவருடைய நண்பர்களான ஸ்ரீ ஸ்வாமி ''A''யும் ''R''ம் இந்த இடத்தை விட்டகன்றனர். அவர்கள் எல்லோரும் இப்பொழுது ரிஷிகேசத்தில் வசித்து வருகின்றனர். அவர்கள் உங்களுக்கும் எனக்கும் இடையே சில தவருன அபிப்பிராயங்களை உண்டு பண்ணவும் அவர்களுடைய விரோதியான ஸ்வாமி ''Y''யை விரட்டவும் இந்தக் குறும்புத்தனத் திற்குத் திட்டமிட்டிருக்கின்றனர் இதுதான் அவர்களுடைய திட்டம். இப்பொழுது நான் யூகிக்கின்றேன். ஸ்ரீ ''B'' இந்த ஆஸ்ரமத்திற்குப் பரம விரோதியாக இருப்பதுடன் யாரோ சிலர் ஸ்ரீ ஸ்வாமி ''N''னுடைய படுக்கைக்கும் தீ வைத்து விட்டனர்.

நீங்கள் உடனே புரிந்துகொண்டிருந்திருக்க வேண்டும்! ஸ்வாமிஜி ஒருபொழுதும் இதுபோன்ற தொரு விரைப்பான கடிதம் எழுதமாட்டார். இது மற்றவர்களால் செய்யப்பட்ட குறும்புத்தன மாக இருக்கக் கூடும். எல்லாம் சரியாகிவிடும். தொந்தரவுக்காளாக வேண்டாம். நீங்கள் இங்கு வரும்பொழுது நீங்கள் தனியாக பிரம்மானந்தா ஆஸ்ரமத்தில் வசித்து வரலாம். நீங்கள் எங்களுடைய சமையலறையிலிருந்து சாப்பாடு எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. உங்களுடைய

உணவிற்கு நான் தனிப்பட்ட ஏற்பாடுகள் செய்கிறேன். வேலை முடிந்தவுடன் இங்கு தாமதமின்றி வந்து விடவும். ஒரு விநாடி கூட காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. பொய்க் கையொப்பமிட்ட கடிதத்தைப்பற்றி ஒரு சிறிதும் கவலைப்பட வேண்டாம். அது தூஷணை செய்வோருடைய குறும்புச் செயல். தவறான செய்கையைச் செய்பவன் அதன் பலனை அடைந்தே தீருவான். கர்மாவினுடைய சட்டம் தயவு தாட்சண்யமற்றது. நான் உங்களுக்கு ஒரு தந்தி கொடுக்கலாமென்று விரும்பினேன் — "கவலைப்பட வேண்டாம். அது பொய்க் கையெழுத்து. அது யாரோ ஒருவரால் செய்யப்பட்ட குறும்புத்தனம். கடிதம் பின்னால் வருகிறது". பிறகு விவரமானதொரு கடிதம் விஷயத்தைத் தெளிவாக விளக்கும் என்று நான் எண்ணினேன்.

## 18. விஷயத்தை மறுமுறை கிளப்பிவிடுவதால் பிரச்சினைகளைத் தீர்த்துவிட முடியாது

நான் சாதாரணமாக புகார்களை ஏற்றுக் கொள்வதில்லை. பல்வேறு கோஷ்டியைச் சேர்ந்தவர்களாலும் கொடுக்கப்படுகின்ற வாதங்களுக்கு முடிவே இருக்கப்போவதில்லை. ஒரு விசாரணை நிலைமையை இன்னும் மோசமாக்கிவிடும் என்பதை நான் நன்கு அறிகிறேன். அந்தச் 'சதி'யில் ஈடுபட்டிருப்பவர்களைத் திருப்திப்படுத்துவதற்காகவே நான் அவ்விஷயத்தைப்பற்றிச் சில விசாரணைகள் செய்துவிட்டு என்னுடைய முடிவை கீழே கொடுக்கப்பட்டுள்ள கடிதத்தில் கொடுத்தேன். நிலைமை அபிவிருத்தியடைய நான் "சமயம்" கொடுக்கிறேன். கடிதம் தொடருகிறது:

நான் இன்று காலை எல்லா ஆஸ்ரமவாசிகளை யும் அழைத்து இந்த விஷயத்தைப்பற்றி விசாரித் தேன். ஒரு முடிவும் ஏற்படவில்லை. கடவுளுக்குத் தான் உண்மை என்ன என்பது தெரியும். எனக்கு குற்றவாளி யார் என்று கண்டுபிடிக்கக் கூடிய திவ்ய திருஷ்டி இல்லை. டைப் அடித்திருக்கும் முறையிலிருந்து உண்மையானவனை உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா? நீங்கள் ஒருவேளை முடிவாகவே கண்டுபிடித்து விட்டாலும்கூட அம் மனிதன் ஒத்துக்கொள்ளப் போவதில்லை. எதைப் பற்றியும் இப்பொழுது சிறிதும் கவலை வேண்டாம். உற்சாகத்துடனிருக்கவும். ஒவ்வொன்றும் பொய்; சில குறும்புத்தனம் பொறாமை காரணமாகச் செய்யப்பட்டிருக்கின்றது.

துஷ்டத்தனம் செய்பவர்களைக் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். அங்கு வேலை இருந்தால், இந்த சம்பவத்தால் உண்டான மனக்குழப்பம் காரண மாக இங்கு சீக்கிரம் வரவேண்டியதில்லை. அமைதி யாக இருக்கவும். போதுமான அளவு வேலை செய்யவும். உள்ளத்தின் எல்லாக் கிரணங்களையும் ஒன்று சேர்த்து அமைதியாக இருக்கவும். கடந்ததை மறந்து விடவும். எவ்வளவு வேலை செய்ய முடியுமோ அவ்வளவு வேலை செய்யவும். வேலையில் குதித்துவிடவும். கலக்கப்பட வேண்டாம். இந்தச் சிறு இடையூறுகள் வழியில் உங்களை பலப்படுத்தவும் என்னைப் பலப்படுத்தவும் வருகின்றன. நாம் கலக்கப்படக்கூடாது. இந்த விஷயங்களெல்லாம் நம்மை பலமுள்ளவர் களாக்கவே நிகழ்கின்றன. இது எல்லாம் உங்களுடைய வளர்ச்சிக்கும் அபிவிருத்திக்குமே யாம்.

ஒரு விஷயம் நான் கண்டுபிடித்து விட்டேன். நீங்கள் சீச்கிரம் கலக்கப்பட்டு விட்டீர்கள். நான் உங்கள் கடிதத்தைப் படித்த உடனே மிகுந்த ஆச்சரியப்பட்டேன். நீங்கள் யாருக்கு எழுதியிருக்கிறீர்கள் என்பதையே என்னுல் கண்டுகொள்ள முடியவில்லை; ஏனெனில் நான் ஒருபொழுதும் அதுமாதிரி எதுவும் உங்களுக்கு எழுதவில்லை. நீங்கள் அது என்னுடைய கையெழுத்தென்றே கண்டுபிடித்து விட்டாலும் மேலுறை என் கையெழுத்தைத் தாங்கியிருந்தாலும்கூட நீங்கள் யாரோ குறும்புத்தனம் செய்திருக்கிருர்கள் என்று நினைத்திருக்க வேண்டும். ஒருவேளை நானே அதுபோன்ற ஒரு கடிதத்தை எழுதியிருப்பதாக வைத்துக்கொண்டாலும் நான் உங்களுடைய சொந்த நன்மைக்காகவோ அல்லது வேறு யாராவது ஒருவருடைய நன்மைக்காகவோதான் அப்படிச் செய்திருப்பேன். நீங்கள் மிக மோசமாகத் தவறி விட்டீர்கள். நான் யாருடைய உணர்ச்சியையும் புண்படுத்த முடியாது, கனவிலும்கூட, உச்ச அளவுக்கு என்னைத் துன்புறுத்துகின்ற மனிதனைக் கூட புண்படுத்த முடியாது. நான் இந்த ஒரு நற்குணத்தை வளர்த்து வருகிறேன். இதைப்பற்றி உறுதியாயிருங்கள் — இனிமேல் இதுபோன்ற விஷயங்கள் நடந்தாலுங்கூட.''

## வெற்றிக்கு வழி

எப்பொழுது ஏதாவது ஒரு வேலையை நான்
எடுத்தாலும்

அதை எப்படியும் முடித்துவிடுகிறேன்.

ஒரு புத்தகத்தை நான் எழுத ஆரம்பித்தால்,

அதை எப்படியாவது முடித்துவிடுகிறேன்.

ஒரு புத்தகத்தை நான் படிப்பதற்கு எடுத்தால்

வேறொரு வேலையை எடுக்குமுன் அதை
முடித்துவிடுகிறேன்.
நான் எதையும் பாதி செய்து விடுவதில்லை.
நான் அந்த விஷயத்தில் முழுக்கவனத்தையும்
செலுத்தி
கவனச் சிதைவின்றி தீவிரமாக எண்ணுகிறேன்.
நான் உறுதியாக, நிலைபெயராமல், அசையாமல்
இருக்கிறேன்.
எனக்கு வேலையில் தீவிரமான ஈடுபாடு உண்டு.
எனக்கு நோக்கத்தில் விடாப்பிடியும்,
தீவிரத்தன்மையும் உண்டு.

## ஒரு மனிதனுடைய இயற்கையை மாற்றுவது எப்படி?

கெட்டவர்களாக இருப்பவர்களுக்கு மரியாதை செய்யவும். போக்கிரிக்கு முதலில் சேவை செய்யவும். அவனை வருங்கால முனிவனாக—முனிவனாக—முனிவனாகவே நடத்தவும். இது உன்னுடைய மனதைத் தூய்மைப்படுத்தவும் அவனையும் உயர்த்தவும் ஒரு வழியாகும். அப்பேர்ப் பட்டவர்களுக்கு ஜாக்கிரதையாக சேவை செய்வதில் நான் ஒரு விசேஷ ஆனந்தத்தை எடுத்துக் கொள்கிறேன். என்னை நிந்திக்கின்ற, என்னைத் தூற்றுகின்ற, என்னை அவமானப்படுத்துகின்ற, என்னைத் துன்புறுத்த முயற்சிக்கின்றவர்களைக்கூட எத்தனை பேர்களை வேண்டுமானாலும் என்னைச் சுற்றிலும் வைத்துக்கொள்கின்றேன். நான் அவர்களுக்குச் சேவை செய்யவும், அவர்களுக்கு அறிவைப் புகட்டவும், அவர்களை உயர்த்தவும், அவர்களை மாற்றவும் விரும்புகின்றேன். நான் அவர்களை மிக மிக மரியாதையான வார்த்தை

களால் அழைக்கின்றேன். ஒரு போக்கிரி அல்லது திருடனை முனிவன் என்று போற்றி வெளிப்படையாக அவனை மரியாதை செய்யுங்கள், அவன், தன்னுடைய கெட்ட செய்கைகளைச் செய்ய வெட்கப்படுவான். ஒரு முன்கோபியை விடாப்பிடியாக ''நீங்கள் ஒரு சாந்தமூர்த்தி'' என்று சொல்லிப்பாருங்கள், அவன் கோபப்படுவதற்கு வெட்கப்படுவான். ஒரு சோம்பேறியை ''நீ ஒரு சக்திபொருந்திய தொண்டன்'' என்று அழைத்துப் பாருங்கள், அவன் தன்னுடைய சோம்பேறித் தனத்தை உதறி எறிந்துவிட்டு சேவையில் குதித்து விடுவான். இது என்னுடைய முறை. அந்தப் புகழ்ச்சி மனதின் அடித்தளத்திலிருந்தே வரவேண்டும். உன்னுடைய ஆத்ம சக்தியை ஒவ்வொரு வார்த்தைக்கும் நீ கொடுக்கவேண்டும். பிரத்யக்ஷ எதிர்மறை குணத்திற்குப் பின்னல் ஒரு சிறப்பான, நிஜமான நற்குணம் அந்த மனிதனிடம் மறைந்து கிடக்கின்றது என்பதை நீ மனப்பூர்வமாக உணரவேண்டும். பிறகு நீங்கள் இருவரும் பயனடைவீர்கள்.

## குண்டர்களைப்பற்றி எனது கருத்து

நல்ல மனிதர்கள் ஏற்கனவே நற்குண
முடையவர்கள்

நான் குண்டர்களைத்தான் திருத்தி
உருவாக்க வேண்டியிருக்கிறது.

இது என்னுடைய விசேஷ வேலை.

குண்டன் ஒரு எதிர்மறையான நல்ல மனிதன்.

அவன் நற்குணவான்களின் மகிமையை
விளங்கச்செய்ய இருக்கின்றான்.

குண்டனும் பகவான் கிருஷ்ணனே.

பகவான் கிருஷ்ணர் கீதையில் சொல்லுகிறார்:
''த்யுதம் ச்சலயதாமஸ்மி''—
நான்தான் ஏமாற்றுக்காரரின் சூதாட்டமாக
இருக்கிறேன்.''

ருத்ரம் சொல்கிறது: 'தஸ்கராணும் பதயே
நமஹ:—

திருடர்களின் இறைவனே சாஷ்டாங்க
நமஸ்காரம்'!

நான் ஆஸ்ரமத்தில் எல்லா ரகமான
மாணவர்களையும் வைத்திருக்கிறேன்.

இந்த உலகம் என்னை திருடர்களுக்கும்,
போக்கிரிகளுக்கும் குரு என்று அழைக்கிறது.

தெய்வீக இயக்கத்தின் மகிமை விளங்குவதாக.

இந்த புனித கேந்திரத்தின் ஆத்மீக அலைகள்

அவர்களை தெய்வீக ஜீவன்களாக, யோகிகளாக,
முனிவர்களாக மாற்றட்டும்!

## அபிமானத்தை அழி

சத்வம், ரஜஸ், தமஸ் ஆகியவற்றிற்கு சாதகனை பின்னுலிழுத்து வைக்கவும், உன்னதமான ராஜ்யத்திற்கு உயரக் கிளம்புவதிலிருந்து தடுத்து நிறுத்தவும், அவைகளுக்கென சொந்தமான ''கொக்கிகள்'' இருக்கின்றன என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வது நல்லது. சத்வக் கொக்கியானது எல்லாவற்றையும்விட மிகவும் கூர்மையானது. ஆகவே பார்ப்பதற்கும் கண்டு பிடிப்பதற்கும் மிக மிகக் கஷ்டம். சந்நியாசத்துடன் சந்நியாச அபிமானம் மிதக்கிறது. அது மாணுக்கனுக்கு மற்றவர்களைக் காட்டிலும் ஒரு சிறிது அதிகமாக சுற்றித்திரிவதற்குச் சற்று அதிகமான சுதந்திரத்தைக் கொடுக்கக் கூடும், ஆனல்

அவனும் கட்டுப்பட்டிருக்கிறுன். தியாகத்தின் மூலமாக, தியாக அபிமானம் நுழைந்து விடுகிறது, மிகவும் நுட்பமானது, மிக மிக அபாயகரமானது, தாண்டுவது பெரும்பாலும் முடியாது. இதேபோல் தான் சேவா அபிமானத்தின் விஷயமும். ஆத்மாபிமானம் பல உருவங்களை எடுக்கிறது. அதனுடைய போர்வைக்குள்ளே, சந்நியாசம், தியாகம், சேவையும்கூட அதனுல் மாற்றப் படுகின்றது. ஆத்மானுபூதிக்காகப் போராட விரும்பும் சாதகன் தன்னை நன்ருகப் பாதுகாத்துக் கொள்ளுவதுடன் இந்த அபிமானத்தின் மிக நுட்ப மான உருவங்களுக்கு இடம் கொடுக்காமலும் இருத்தல் நன்மை பயக்கும்.

## ஒரு லக்ஷண ஆசிரியர்

நான் எப்பொழுதும் ஒரு தாகம் நிறைந்த
மாணவன்

நான் ஒரு ஆசிரியன் அல்ல.

ஆனல் இறைவன் என்னை ஆசிரியனுக்கிவிட்டார்.

மாணுக்கர்கள் என்னை ஆசிரியனுக்கிவிட்டனர்.

நான் என்னுடைய மாணுக்கர்களை சீக்கிரத்தில்
ஆசிரியர்களாக ஆக்குகிறேன்.

நான் அப்பேர்ப்பட்ட ஆசிரியன்.

நான் அவர்களை மரியாதையான வார்த்தைகளால்
நடத்துகிறேன்.

''மகாராஜ்'', ''ஸ்வாமிஜி'', ''பகவான்'',
''நாராயணன்'' என்பதுபோல,

நான் அவர்களை எனக்குச் சமமானவர்களாக
நடத்துகிறேன்.

நான் அவர்களுக்கு சமமான இருக்கைகள்
தருகிறேன்.

நான் அப்பேர்ப்பட்ட ஆசிரியன்.

நான் என்னுடைய சொந்த வாழ்க்கையிலிருந்தே
கற்றுக்கொள்ள அவர்களை அனுமதிக்கிறேன்.

நான் அவர்களை மஹந்த்துகளாகவும்,
மனிதவர்க்கத்தின் சேவகர்களாகவும்,

தலைவர்களாகவும், சொற்பொழிவாளர்களாகவும்,
எழுத்தாளர்களாகவும், ஸ்வாமிகளாகவும்,
யோகிகளாகவும்,

ஆத்மீக ஸ்தாபனங்களின் ஸ்தாபகர்களாகவும்,
கவிகளாகவும், பத்திரிகாசிரியர்களாகவும்,

பிரசாரகர்களாகவும்,
தெய்வீகத் தோட்டிகளாகவும், ஆரோக்கிய,
யோக கலைஞர்களாகவும்

தட்டெழுத்தாளர்களாகவும்,
யோக அரசர்களாகவும், ஆத்ம சாம்ராட்களாகவும்
கர்மயோக வீரர்களாகவும்,
பக்தி பூஷணங்களாகவும்
சாதனை ரத்னங்களாகவும் செய்கிறேன்.

எல்லா உண்மைநாடிகளுக்கும் நான்
அப்பேர்ப்பட்ட ஆசிரியன்.

## எனது நண்பர்களே, வாருங்கள் வாருங்கள்

என்னுடைய அறைகூவல் தடுக்க முடியாதது,
இது எண்ணற்ற உயிர்களை மாற்றியிருக்கிறது.
இந்த மதிப்புமிக்க வாழ்க்கையை
வீணாக்க வேண்டாம்
சீட்டாடுவதிலும், வீண் பேச்சுப் பேசுவதிலும்,
காரசாரமான விவாதங்களையும்,
தர்க்கம் செய்வதையும் விட்டுவிடவும்.

எல்லா உல்லாச கேந்திரங்களையும்
அழித்துவிடவும்.
சௌகரியத்திற்கான ஆசையை விட்டுவிடவும்
சிற்றின்ப இச்சையாகிய விறகுக்கு
நெருப்புவைத்து விடவும்.
ஆத்மாபிமானக் கோட்டையை அழித்துவிடவும்.
சீக்கிரம், சீக்கிரம், நண்பர்களே!
இறைவனுடைய திருநாமத்தை இரவும் பகலும்
பாடுக
இப்பொழுது பேரானந்த சாகரத்தில் குதியுங்கள்
அந்தரங்கத்திலுள்ள ஆத்மாவின் எல்லையற்ற
சாம்ராஜ்யத்தினுள் நுழையுங்கள்.
வாருங்கள், வாருங்கள், எனது நண்பர்களே,
குதியுங்கள், சீக்கிரம்
தாமதம் வேண்டாம், காலந்தாழ்த்த வேண்டாம் —
ஞானப் பேரானந்தத்தை அனுபவியுங்கள்.

---

## அத்தியாயம் பதினொன்று

# ஆத்மீக வழியில் நடைமுறைக் குறிப்புகள்

### 1. தபால் மூலம் மாணாக்கர்களைப் பயிற்றுவித்தல்

தபால் மூலம் மாணவர்களைப் பயிற்றுவிக்க யோக சம்பந்தமாக என்னிடம் ஒரே மாதிரியான அச்சடித்த பாடங்கள் கிடையா. நான் வழக்கமாக மாணவர்களுடைய ருசிக்குப் பிடித்தமான

என்னுடைய புத்தகங்களில் சிலவற்றை அவர்களுக்கு அனுப்புகிறேன். தபால் போக்குவரத்து மூலம் நான் அவர்களுக்குப் பாடங்கள் கொடுக்கிறேன். பாடங்கள் நன்றாக வகைப்படுத்தப் பட்டவை. அவர்கள் தங்களுடைய தினசரி வழக்கத்தையும், நலத்தையும், முன்னேற்றத்தையும் பற்றி எனக்கு எழுதுகின்றனர். அவர்கள் ஆத்மீக நாட்குறிப்பைக் குறித்து வருவதுடன் என்னுடைய ''இருபது முக்கிய ஆத்மீக உபதேசங்களை''யும் கடைப்பிடித்து வருகின்றனர். நான் அவர்களுக்கு உபதேசங்கள் கொடுத்து உதவி அவர்களுடைய இன்னல்களையும் இடையூறுகளையும் நீக்கி வருகிறேன். நான் என்னுடைய அமைதி எண்ண ஓட்டத்தை அனுப்புகிறேன். எல்லா தேசங்களிலு முள்ள ஆயிரக்கணக்கான மாணவர்கள் இந்த நேர் முகக் கவனிப்பினால் அதிசயிக்கத்தக்க முன்னேற்ற மடைந்திருக்கின்றனர். மேல்படிப்புக்காக அவர்கள் ஆஸ்ரமத்திற்கு வந்து என்னுடன் சில வாரங்களோ மாதங்களோ தங்கி தீக்ஷை பெற்றுக்கொள் கின்றனர்.

அவர்கள் எல்லோரும் இது போன்ற தனிப் பட்ட கவனிப்பை விரும்புகின்றனர். நான் யாரிட மிருந்தும் யோகத்தில் பயிற்சியளிப்பதற்காக எந்த கட்டணமும் எடுத்துக்கொள்வதுமில்லை. ஆஸ்ர மத்தில் அவர்களுடைய நிர்வாகத்திற்காக எந்தப் பணமும் கேட்பதுமில்லை. என்னிடம் வருபவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியாக எனக்கு தாராளமாக கொடுக்கின்றனர். அல்லது அவர்களுடைய சக்திக் கேற்றவாறு ஸ்தாபனத்தின் முன்னேற்றத்திற்காக தாங்களாக நன்கொடையளிப்பதிலும், சங்கம் தன்னுடைய ஞானப்பிரசாரத்தைச் செய்ய உதவு வதிலும் அவர்கள் ஆனந்தமடைகின்றனர். அம்மாதிரி செய்கைகளின் மூலமாக அவர்கள் சித்த

சுத்தியையும் ஆத்மீக முன்னேற்றத்தையும் அடைகின்றனர்.

கீழ்க்கண்ட பக்கங்களில் பல்வேறு சாதகர்களுக்கும் நான் எழுதிய மாதிரிக்கடிதங்களில் சில கொடுக்கப்பட்டிருக்கின்றன; அவைகளில் ஆத்மீக திருஷ்டியாகிய யோக வழியில் என்னுடைய பயிற்சியளிக்கும் முறைகள் விளக்கப்பட்டுள்ளன. நான் எல்லோருக்கும் நடத்தை, நீதி சம்பந்தமான கொள்கைகளை வற்புறுத்துகின்றேன். நான் மற்றவர்களைப் போட்டி போடும்படி உற்சாகப் படுத்துகிறேன் — சுருங்கச் சொன்னால் தெய்வீக வாழ்க்கையை நடத்த வழிகாட்டுகிறேன்.

## 2. அமைதிக்கு வழி

ஸ்வர்க்காஸ்ரமம்,
16, ஆகஸ்ட், 1930.

மதிப்பிற்குரிய சகோதர,

உன்னுடைய அன்பார்ந்த கடிதம்; உனக்கு மிக்க நன்றி. காலையில் 4 மணிக்கு எழுந்திருக்கவும். ஒரு தியான அறையை பூட்டுடன் வைத்துக்கொள்ளவும். யாரையும் அதனுள் நுழையவிட வேண்டாம். ஒரு காயத்ரி படம், கீதை முதலியவற்றை அறையில் வைத்திருக்கவும். காயத்ரியைத் தியானம் செய்யவும். காயத்ரி மந்திரத்தை அர்த்தத்துடன் திருப்பித் திருப்பிச் சொல்லவும். மூடிய கண்களுடன் புருவமத்தியான த்ரிகூடியில் மனதை ஒருமுகப்படுத்தவும், பத்மாசனத்தில் அமரவும். தொடர்ந்தார்ப் போல் இரண்டு மணி நேரம் உட்கார்ந்திருக்க முயற்சிக்கவும். கீதையை ஒழுங்காகப் படிக்கவும். எக்காரணத்தைக் கொண்டும் உண்மையே பேசவும். கோபத்தை அடக்கவும்.

ஏழைகள், நோயாளிகள், முனிவர்கள் ஆகியவர் களுக்குச் சேவை செய்யவும். தர்மத்திற்காகக் கொஞ்சம் பணம் செலவிடவும். அது உன்னுடைய மனதைத் தூய்மைப்படுத்தும். உலகாயத மக்களுடன் சேர வேண்டாம். ஒவ்வொருவருக்கும் சேவை செய்யவும், அன்பு காட்டவும், மரியாதை செய்யவும். நிந்தை (குறைகூறல்), காணுமல் பேசுதல், குறைகண்டுபிடித்தல், கோள் சொல்லுதல் ஆகியவற்றை விட்டுவிடவும். பணிவுடன் இருக்கவும். தாழ்மையுடன் இருக்கவும். இனிமை யாகப் பேசவும். நீ அமைதிக்குள் நுழைவாய். தினமும் ஒருமணி நேரமும் விடுமுறை நாட்களில் 3 மணி நேரமும் மௌனம் அனுஷ்டிக்கவும்.

இப்படிக்கு,
உன்னுடைய சகோதர அன்புடன் கூடிய,
சுவாமி சிவானந்தா

## 3. ஞானத்திற்காக தீவிர ஆவல் கொள்

துறவுப் பாதையை எடுத்துக்கொள்ளும் சாதகர் களுக்கு எளிதில் மனக்கிளர்ச்சி கொள்ளும் தன்மைக்கும், உக்கிரத்திற்கும் எதிராக உபதேசிக் கிறேன். ஆனல் உலகத்திலிருந்துகொண்டிருக்கும் போதே ஆத்மீக வாழ்க்கைக்காக தீவிரமான ஆவலே விடாமுயற்சியுடன் வளர்த்து வருமாறு ஆலோசனே கூறுகிறேன்.

ஸ்வர்க்காஸ்ரமம், குடீர் 22,
29, ஆகஸ்ட், 1930.

ஓம் சத்—சித்—ஆனந்தா,

நீயே ஆத்மா. நீ அழியாதவன். பயமற்றிரு. உன்னுடைய ஆத்மாவின் காம்பீர்யத்தை அறி. உன்னை விடுவித்துக்கொள். இந்த உள்ளத்தின் கள்ளத்தனத்திலிருந்தும், உலகாயதப் பொருட்களி லிருந்தும் விடுவித்துக் கொள். எனதன்பார்ந்த யோகி, இறைவன் உம்மை ஆசீர்வதிப்பாராக. நிகழும் 21ந் தேதிய உம்முடைய கடிதத்தைப் பார்த்து நான் எல்லையில்லா ஆனந்தமடைந்தேன். நீர் ஆத்மீக ஸம்ஸ்காரங்கள் நிரம்பிய ஒரு மனிதன். அவைகளை போஷிக்கவும், அவைகளைக் காப்பாற்றவும். அவைகளை அதிகப்படுத்தவும்.

## என்னிடம் வரவேண்டாம்

உம்மால் சமாளிக்க முடியுமானால், சமூகத்திற்கு நீர் ஒரு பயமுறுத்தலாக மாட்டீர் என்று உறுதியாக நம்பினால், உம்மால் இச்சையை அடக்க முடியு மானால், ஆயுள் முடியும் வரை பிரம்மச்சாரியாக (நைஷ்டிக பிரம்மச்சாரி) இருக்கவும். நீர் பணக் காரனாக இல்லை. எப்படி ஒரு குடும்பத்தையும் குழந்தைகளையும் நிர்வகிக்கப் போகிறீர்? அது உம்முடைய ஆத்மீக முன்னேற்றத்தைத் தடுக்கும்.

யௌவன உற்சாகம் மட்டும் போதாது. ஆத்மீக வழியில் வெறும் மனக்கிளர்ச்சி மட்டும் ஒன்றும் செய்ய முடியாது. இது ஒரு ரோஜா மலர்ப்பாதையல்ல. இது முட்களும், தேள்களும், பாம்புகளும் நிறைந்தது. பாதை கரடு முரடானதும், செங்குத்தானதும், மிகமிகக் கடின மானதுமாகும். ஆனால் "நான் உணர்ந்தேயாக வேண்டும் — உயிரை வேண்டுமானாலும் விட்டு

விடுவேன்'' என்ற வைரம் போன்ற உறுதி பூண்டவனுக்கு சுலபமானது. ஞானத்திற்கு இந்த வகையான தீவிர தாகம் தேவைப்படுகிறது.

சத்துவ குணங்களை படிப்படியாக அபிவிருத்தி செய்து வரவும் — கோபத்தை எதிர்த்து நிறுத்த பொறுமை, பேராசையைத் தடுக்க திருப்தி, கர்வம், மமதை ஆகியவற்றை அழிக்க சேவை (சேவா பாவம்), பணிவு, உண்மை பேசுதல், திதிக்ஷ (உஷ்ணம், குளிர், வலி இவற்றைத் தாங்கிக் கொள்ளுதல்) ஆகியவற்றை அபிவிருத்தி செய்யவும். எல்லோரையும் நேசிக்கவும். எல்லோரிடமும் அன்பு காட்டவும். ஒருபோதும் ஆத்திரமோ, கோபமோ படவேண்டாம். ஆத்மீக முன்னேற்றத்தைப்பற்றி ஒரு நாட்குறிப்பு வைத்துக்கொள்ளவும். ஒவ்வொன்றையும் பதிவு செய்யவும். அபிவிருத்தியடைந்தவர்களிடையே வசித்து வரவும். ராம கிருஷ்ண மிஷனுக்குச் சென்று பார்வையிட்டு மகாத்மாக்களுக்குச் சேவை செய்யவும். மூத்தவர்களுக்கு உற்சாகத்துடனும், அன்புடனும், ஆதரவுடனும் (ஆழமான), சேவை செய்யவும். உம்முடைய சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ளவும். உமக்கு அமைதியையும், பரம பதத்தையும் விரும்பும்,

உம்முடைய
சிவானந்தா.

ஹரி ஓம் தத் சத்
ஓம் சாந்தி !

என்னுடைய ''யோக வேதாந்த சாதனை''யின் ஒரு பிரதியைப் பெற்றுக்கொள்ளவும்.

இனிமேல் என்னுடைய பதிலுக்காக பதில் அஞ்சலட்டையோ அல்லது உறையோ அனுப்பி வைக்கவும்.

## 4. உலகத்தைவிட்டு நீங்குவதில் அவசரப்பட வேண்டாம்

C/o. விஜயநகரம் ஹௌஸ்,
கேம்ப் : கல்கத்தா,
12, டிஸம்பர், 1930

ஓம் சத்—சித்—ஆனந்தா

கொஞ்சகாலம் ரிஷிகேசத்திற்கு வரவும். சந்தேகமில்லாமல் நீங்கள் இந்த தனிமையையும் ஆத்மீக அலைகளையும் அனுபவிப்பீர்கள். என்னுடைய பெயரைச் சொல்லவும். மக்கள் உங்களுக்கு இருக்கை தந்து சேவை செய்வார்கள். ஸ்ரீ ஸ்வாமி அத்வைதானந்தஜி, ஸ்ரீ ஸ்வாமி தபோவன்ஜி மஹராஜ், ஸ்ரீ ஸ்வாமி புருஷோத்தமானந்தஜி ஆகியவர்களுடைய தரிசனத்தைப் பெறவும். அவர்கள் எல்லோரும் என்னுடன் நெருங்கிய தொடர்பு வைத்திருக்கின்றனர்— முன்னேறிய ஆத்மாக்கள்.

இவ்வுலகை விட்டு நீங்குவதில் அவசரப்பட வேண்டாம். பல்வேறு சத்வ குணங்களை அபிவிருத்தி செய்துகொள்ள இவ்வுலகம் ஒரு அங்கமாகும். லாபமடைய விரும்புகிறவர்களுக்கு இவ்வுலகம் ஒரு மிக நல்ல ஆசிரியன். அங்கு இன்னும் கொஞ்சகாலம் அதிகமாக தங்கியிருக்கவும். சம்பாதித்து அனுபவிக்கவும். வைராக்கியம் போகத்திலிருந்துதான் வருகிறது. பிறகு அது பலம்பொருந்தியதாகவும், உறுதியுடையதாகவும், தீவிரமானதாகவும் இருக்கும்.

## திருமணம் செய்துகொள்ள வேண்டாம்

அது வேறு விஷயம். இவ்வுலகம் ஒரு நரக மல்ல. அபிமானமும், ராக—த்வேஷமும் இறந்து படும்பொழுது அது எல்லாம் ஆனந்தமே. மனோ பாவத்தை மாற்றிக்கொள்ளவும். இங்குள்ள எல்லா இடங்களையும் மகாத்மாக்களையும் வந்து பார்க்கவும். உங்களுக்கு உணர்வு கிடைக்கும்.

நீங்கள் அங்கிருக்கும்போது தெய்வீக வாழ்க்கையை நடத்தவும். ஆத்மீக வழியானது ரோஜா மலர் போன்றதல்ல. இது முள் நிறைந்தது. உங்களைத் தகுதியுடையவராக்கிக் கொள்ளவும். ஜபம், தியானத்தின் மூலம் தூய்மையையும், ஆத்மீக பலத்தையும் அடையவும். உம்மை உற்சாகப்படுத்திக் கொள்ளவும்.

உமக்கு கைவல்ய மோக்ஷத்தை விரும்பும்,
சுவாமி சிவானந்தா

ஹரி ஓம் தத் ஸத்
தத் த்வம் அஸி.

## 5. சிந்தித்து செயல்படு

எனது மாணுக்கர்களுள் ஒருவருக்கு எழுதிய முன்னேயுள்ள இரண்டு கடிதங்களும் எந்த ஒரு அவசரமான முடிவுக்கும் வருவதை எதிர்த்து சாதகர்களை நான் எப்படி எச்சரிக்கிறேன் என்பதைக் காட்டும். ஆனுல் ஒருவருக்கு தீவிரமான வைராக்கியமும், அசைக்க முடியாத உறுதிப்பாடும் இருப்பதைக் கண்டால் நான் உடனே

சந்தோஷத்தாலும் ஆனந்தத்தாலும் பூரிப் படைகிறேன். நான் தனியாகவும், எனக்கென்று சொந்தமான ஒரு ஆஸ்ரமம் இல்லாமலிருந்த அந்த நாட்களில் எனக்குப் பக்கத்தில் சிஷ்யர்கள் யாரையும் வைத்துக்கொள்ள அதிக விருப்ப மில்லாமலிருந்தேன். நான் யாரையும் என்னிடம் வந்து தங்குவதை விரும்பவில்லை. ஆகவே மேற் குறித்த அந்த சாதகனுடைய விஷயத்தில் நான் அவருக்கு தீவிரமான அபிலாஷையும், அசையாத விருப்பமும் இருப்பதைக் கண்டு அவர் ஒரு சுறுசுறுப்பாக வேலைசெய்யும் ஆஸ்ரமத்தில் தங்கி இருப்பது காரணமாக அவர் அங்கு துரிதமாக அபிவிருத்தியடைய முடியும் என்று நான் உணர்ந் தேன். இவ்வாருக சாதகர்களுடைய சேவையை நானே எடுத்துக்கொள்ளாமல் என்னுடைய நன்மையை விட்டுக்கொடுப்பதையே விரும்பியதோடு நான் எப்பொழுதும் அவர் களுடைய சொந்த நலத்தையும் மற்ற மதசம்பந்த மான ஸ்தாபனங்களின் முன்னேற்றத்தையும் கவனித்து வந்தேன்.

அன்பார்ந்த ஆத்மா,

உம்முடைய கடவுள், மதபக்தி சந்தேகமின்றி உம்மை சம்சாரத்திலிருந்து உயர்த்திவிடும். இறைவன் உம்மீது வாழ்க்கையின் லட்சியமாகிய இறை உணர்வை அடைதற்கு ஆத்மீக பலத்தையும் சக்தியையும் கொடுத்தருள்வாருக. தயவுசெய்து ஸ்ரீ அரவிந்தர் ஆஸ்ரமம் அல்லது ராமகிருஷ்ண மிஷனில் சேர்ந்து கொள்ளவும். அங்கு நீங்கள் அதிகம் முன்னேறலாம். நான் உங்களுக்கு வாக்குறுதியளிக்கிறேன். நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். சில வருஷங்கள் ஆஸ்ரமத்தைப் பற்றிக் கொள்ளவும். நீங்கள் இங்கு தற்காலிகமாக

பார்த்துவிட்டுப் போக வரலாம்; நிரந்தரமாக தங்குவதற்கு அல்ல. செயல்படுவதற்கு முன் சிந்தித்துப் பார்க்கவும். எண்ணிப் பார்க்கவும். நன்றாக ஆலோசனை செய்யவும். உலகம் மிகச்சிறந்த ஆசிரியன். நீங்கள் இன்னும் ஏராளமாக கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவசரப்பட்டு இமயமலைக் குகைகளுக்கு ஓடிவிட வேண்டாம். இளமை மனோ உல்லாசமும் யௌவன உற்சாகமும் உங்களுக்கு அதிகம் உதவாது. இவ்வழியானது கஷ்டமானதும், அபாயகரமானதுமான ஒரு வழியாகும். இங்கு நேரத்தை பயனுள்ள முறையில் எப்படி செலவழிப்பது என்பது உங்களுக்குத் தெரியாமல் போகலாம்.

நான் ஒரு சாதாரண சாது. நான் உங்களுக்கு அதிகம் உதவமுடியாமலிருக்கலாம். மற்றும் நான் சிஷ்யர்களை உண்டாக்குவதில்லை. நான் என்னுடைய வாழ்நாள் முழுவதும் உங்களுடைய மனமார்ந்த நண்பனாக இருக்க முடியும். நான் எனக்குப் பக்கத்தில் நீண்ட காலத்திற்கு ஆட்களை வைத்துக்கொள்ள விரும்பவில்லை. நான் ஒருசில மாதங்கள் பாடம் சொல்லிக்கொடுத்து அவர்களை காஷ்மீர் அல்லது உத்தரகாசியிலுள்ள சில தனிமையான இடங்களில் தியானம் செய்யும்படி சொல்லுகிறேன்.

நான் வற்புறுத்திக் கூறுகிறேன்: ஒரு நல்ல ஆஸ்ரமத்தில் சேரவும். அங்கு ஆத்மீக பலன் உங்களுக்கு கிடைக்கும். அந்த கேந்திரத்தைப் பற்றிக் கொள்ளவும். கஷ்டங்களை தாங்கிக் கொள்ளவும். முடிவு — அழியாத்தன்மை, எல்லையற்ற ஆனந்தம்.

தங்கள் ஆத்மாவேயான,
சுவாமி சிவானந்தா.

உங்களை உற்சாகப்படுத்திக் கொள்ளுங்கள். சுதந்திரமாகவும், தைரியமாகவும், பயமற்றும் இருக்கவும். நீங்கள் அமிர்த குமாரன்; ஹரி ஓம் தத் ஸத். பொறுமையை வளர்க்கவும். உண்மையே பேசவும். கோபத்தை அடக்கவும். திதிக்ஷையை வளர்க்கவும். சேவை செய்யவும். அன்பு காட்டவும். கொடுக்கவும். மற்றவர்களை மன்னிக்கவும். கொஞ்சமாகப் பேசவும். இனிமையாகப் பேசவும்.

## 6. பரிணமத்திற்கான பொறுக்குமணிகள்

இங்கு சில மதிப்புமிக்க உபதேசங்கள் மாத்திரை ரூபத்தில் — விஷயத்தைச் சுருக்கி உடனடியாகப் பயன்படுத்தக்கூடிய வகையில் பிரிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்வர்க்காஸ்ரமம்,
3, அக்டோபர், 1930.

(அ) பயப்படாதே.

(ஆ) துயரப்படாதே.

நீ சத்—சித்—ஆனந்த ரூபம், அமிர்த ஆத்மா.

நீ இந்த ஜட உடல் அல்ல.

இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக.

தயவு செய்து என்னுடைய "உள்ளமும், அதன் விநோதங்களும், அதை அடக்குதலும்" என்ற புத்தகத்தைப் படித்துப் பார்க்கவும். அந்த பாடங்கள் தியானத்தில் முன்னேற காரியாம்சத்தில் மிகவும் உபயோகமாக இருக்கும். எவ்வளவு சேர்க்க முடியுமோ அவ்வளவு பணம் சேர்க்கவும்.

இந்நாட்களில் இல்லறத்தார்களிடமிருந்து ஆதரவு இல்லாத காரணத்தால் சந்நியாசிகளுக்குக் கூட பணம் தேவைப்படுகிறது. இந்த இரண்டு முக்கிய இன்ப கேந்திரங்களை உடையவனாக இரு:- அத்யயனமும் தியானமும். புற இன்ப கேந்திரங்கள் அனைத்தையும் துண்டித்து விடவும்.

1. தேடு, புரிந்துகொள், உணர்.
2. பகுத்துப்பார் (பொருள்களை). உணர் (அவைகளின் உண்மை குணங்களை). விட்டுவிடு.
3. உன்னை அறிந்து விடுதலையுடனிரு.
4. எப்பொழுதும் ஆத்ம சிந்தனையுடையவனாயிரு.
5. பிரார்த்தித்து நற்குணமுடையவனாயிரு.
6. விரும்பிப்பெறு.
7. நிலையாமை உணர் (உடல்). நிலைப்படுத்து (பிரம்மனை).
8. தத் த்வம் அஸி — இதை ஒருபோதும் மறக்காதே.

சிவானந்தா.

## 7. மறைந்துள்ள தெய்வீகத்தை வெளிப்படுத்து

என்னுடைய உபதேசத்திற்கிணங்க அந்த சாதகன் ராமகிருஷ்ண மிஷனில் சேர்ந்து விட்டார், இருந்தபோதிலும் என்னுடன் தொடர்ந்து தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறார். நான் அவருக்கு என்னுடைய இடையறாத கவனத்தையும் பரிணாமத்திற்கான உபதேசங்களையும் மறுக்கவில்லை,

ஏனெனில் நான் எல்லா ஆஸ்ரமங்களையும் என்னுடையதாகவே கருதுகிறேன்; மேலும் என்னிடம் உபதேசத்திற்காக வரும் எந்த ஒரு சாதகன் மீதும் நான் ஏகபோக உரிமை கொண்டாடுவதில்லை.

ஸ்வர்க்காஸ்ரமம்,
ரிஷிகேசம்.

மதிப்பிற்குரிய சகோதர,

ஓம் நமோ நாராயணா. இறைவன் உம்மை ஆசீர்வதிப்பாராக.

நான் நீண்டதொரு கைலாச யாத்திரையிலிருந்து திரும்பிவிட்டேன். நீங்கள் ராமகிருஷ்ண மிஷனில் சேர்ந்துவிட்டதாகக் கேள்விப்பட்டு மிக்க மகிழ்ச்சியடைகின்றேன். எனது மனமார்ந்த ஆசிகள். ஆஸ்ரமத்தில் அட்டை போன்ற உறுதியுடன் ஒட்டிக்கொள்ளவும். ஆஸ்ரமம் உங்களுக்கு சொந்தமானது. இதை உணரவும். நீங்கள் முன்னேறக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் சூரியர்களுக்கெல்லாம் சூரியன். நீங்கள் உலகத்திற்கு ஒரு நம்பிக்கை. நீங்கள் பொறுப்புள்ள ஒரு உடையை எடுத்திருக்கிறீர்கள். தெய்வீகத் தன்மையை வெளிப்படுத்திக் காட்டவும். புனிதத் தன்மை, தேஜஸ், பிரகாசம் உம்மை வந்து அடைவதாக.

நீங்கள் உலக பந்தங்கள் எல்லாவற்றையும், துண்டு துண்டாக அறுத்தெறிந்துவிட்டீர்கள். இப்பொழுது நீங்கள் உங்களுடைய வழியில் தடையின்றி முன்னேறலாம். மிஷனில் ஒட்டிக்கொண்டு உனக்கு மூத்தவர்கள் எல்லோருக்கும் மரியாதையுடனும், மனப்பூர்வமாகவும், பக்ஷபாதமின்றியும்

சேவை செய்யவும். எக்காரணத்தை முன்னிட்டும் உண்மையே பேசவும். உண்மை பேசுவதால் யாருக்கும் தொந்தரவு கொடுக்க முடியாது. அது உங்களுக்கு ஆத்மீக சக்தியைக் கொடுக்கும். உண்மையை உண்மை பேசுவதன் மூலமே அடைய முடியும். பொறுமை, க்ஷமா, தெய்வீக அன்பு, சேவை, தயை ஆகியவற்றை வளர்ப்பதின் மூலம் கோபத்தை அடக்கவும். பணிவு, பெருந்தன்மை, தைரியம் ஆகியவற்றை நீங்கள் வளர்க்க வேண்டும்.

ஆறு மணி நேரப் படிப்பும், ஆறு மணி நேர தியானமும் தடையின்றி போய்க்கொண்டிருக்க வேண்டும். அதுவே என்னுடைய முறை. கடந்ததை மறந்து விடவும். நிகழ்காலத்தில் வசிக்கவும். எல்லாவிதமான கற்பனை ஆசைகளையும் விட்டுவிடவும். மக்கள் உங்களைத் துன்புறுத்தினும், உங்களை வெறுத்தாலும், உங்களைப் பார்த்து ஏளனம் செய்தாலும் பேசாமலிருக்கவும். பழிதீர்த்துக்கொள்ள வேண்டாம். நீங்கள் வேலையைத் தொடங்குமுன் ''குன்றின் மேல் செய்த உபதேச''த்தைப் படிக்கவும். நான் ஒரு பகுதியை எடுத்துக் கூறுகிறேன். நீங்கள் தினமும் ஒருமுறை ஞாபகப்படுத்திக் கொண்டால் உங்களுக்கு ஞானமுண்டாகும். இதை இடைவிடாமல் பயிலவும்.

''உன்னுடைய எதிரிகளை நேசிக்கவும். உன்னை சபிப்பவர்களை ஆசீர்வதிக்கவும். உன்னை வெறுப்பவர்களுக்கு நன்மை செய்யவும். உன்னை நிந்திப்பவர்களுக்காகவும் உனக்கு இடைஞ்சல் செய்பவர்களுக்காகவும் பிரார்த்தனை செய்''.

..செயிண்ட் மத்தேயு.

கடைப்பிடித்தல் மிகவும் கஷ்டமானது. ஆனால் கட்டாயம் செய்ய வேண்டும், செய்ய முடியும். இது மகாத்மா காந்தியடிகளால் கடைப் பிடித்து வரப்படுகிறது. இதுவே அவருடைய வெற்றியின் ரகசியம்.

மதிப்பும், பிரேமையுமுள்ள,

தங்கள் பணிவான சகோதரன்,

சுவாமி சிவானந்தா

## 8. தாழ்ந்த குணத்தை புனருத்தாரணம் செய்தல்

என்னுடைய தயக்கத்திற்கும், ஆரம்ப மறுப்புக்குப் பின்பும்கூட சாதகன் பிறகு என்னிடம் வந்து துறவுணர்ச்சியையும், அசைக்க முடியாத மனோபலத்தையும் பற்றி திடமான அபிப்பிரா யத்தை ஏற்படுத்தினால் நான் மனப்பூர்வமாக அவரை சந்நியாச ஆஸ்ரமத்திற்கு தீக்ஷை கொடுத்து விடுகிறேன். அவரும் உடனே தெய்வீக வேலையாகிய களத்தில் குதித்துவிடுகிறார். அவ்வேலை அப்பொழுது ஆரம்ப நிலையில் இருந்தது. விரைவில் உலக முழுவதிலுமுள்ள லக்ஷக்கணக்கான சாதகர் களுக்கு ஆத்மீக மறுமலர்ச்சியும் தெய்வீகக் கிளர்ச்சியுமாகிய பிரமாதமான சுழற் காற்றினால் உலகத்தை திகைக்கவைக்கும் அளவுக்கு பூதாகார மான அளவை எடுக்கும் நிலையில் இருந்தது. இருந்த போதிலும் நான் வாழ்க்கையின் லக்ஷியத்தையும், ஒருவன் எந்த நோக்கத்தோடு உலகத்தைத் துறக் கிறான் என்பதையும் ஒருபோதும் மறக்கவில்லை. ஆகவே திரும்பத்திரும்ப அவரை நடைமுறை சாதனையிலும் ஆத்ம ஒழுங்கிலும் கவனம் செலுத்து மாறு தூண்டியவண்ணமிருந்தேன்.

சிவோஹம் சிவஹ் கேவலோஹம். இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக.

நான் உங்களிடம் மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கிறேன். நீங்கள் இந்தியாவிற்கும் பொதுவாக உலகத்திற்கும் ஒரு கௌரவமாக இருக்கிறீர்கள். உம்மிடம் எப்பொழுதும் தெய்வீக ஒளியும், தெய்வீக தேஜஸும், பிரகாசமும் பிரகாசிக்குமாக. உண்மையில் ஜீவித்திருக்கவும். உண்மையை உணரவும். உண்மையை அறியவும். உண்மையைப் பரப்பவும். உம்முடைய சக்தியை ஒழுங்கு படுத்தவும். அதைப் பாதுகாக்கவும். அதைத் தேவைப் படும்போது பயன்படுத்தவும். நன்ருக தியானிக்கவும். மூடிய அறையில் வசிக்கவும். அதிகம் கலக்க வேண்டாம். நண்பர்களைப் பெருக்கிக்கொண்டு போகவேண்டாம். உண்மையான மனப்பூர்வமான நண்பன் ஒருவன் போதும். பிச்சையெடுக்கும் மனேபாவத்துடன் பிச்சையெடுக்காதே. கட்டளையிட்டு உனக்குத் தேவையானதைப் பெற்றுக்கொள். அகில உலகமும் உமது வீடு. பிரகிருதியும் ஒன்பது ரித்திகளும் கட்டிய கைகளுடன் உமக்குச் சேவை செய்யத் தயாராக இருக்கின்றன. இந்திரியங்களை அடக்கு. பெண்களை விட்டு விலகியிரு. உக்கிரத்துடன் இருக்கவும். சோம்பேறி—ஜெஞ்ஞ வேதாந்தியாகவோ அல்லது மீசையுள்ள—மாது சந்நியாசியாகவோ இருக்கவேண்டாம். ஒவ்வொரு கண்ணறையிலும் ஒவ்வொரு வார்த்தையிலும் அக்கினி இருத்தல் வேண்டும். குறுகிய காலத்தில் நீங்கள் அதிசயங்களைச் செய்ய முடியும் என்பதை நான் அறிவேன். உபநிஷத்துக்களையும் கீதையையும் படிக்கவும். அவைகளில் நல்ல புலமையைப் பெறவும். அந்த வழியில் நீங்கள் ஒரு பூஜ்யமாக இருக்கின்றீர்கள்.

உங்களுக்கு முறையான, ஒழுங்கான அத்யயனம் (படிப்பு), தியானம், ஜபம் ஆகியவைகள் இருக்க வேண்டும். இ ந் த ம ா தி ரி நினைக்கவேண்டாம்: ''நான் வேலையில்லாமல் தனியாக இருக்கும்போது உத்தரகாசியில் படிப்பேன்''. அது தவறு. அது மடமை. உங்களுக்கு தி ன ச ரி வழக்கம் இருக்க வேண்டும். அந்த ''ந ா ளை க் கு'' ஒருபொழுதும் வரப்போவதில்லை. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளவும். வெயிலடிக்கும்போதே வைக்கோலை உ ல ர் த் த வு ம் . ஒ ரு மு க ப் ப டு த் த வு ம் . தி ய ா ன ம் செய்யவும். தனிமையாக சில மணி நேரம் இருக்கவும். பணிவோடு இருக்கவும். ஒரு போதும் கர்வத்துடன் இ ரு க் க வே ண் ட ா ம். பொறுமையும் சகிப்புத் தன்மையும் உடையவனாக இருக்கவும். பேசும்போது இந்த நற்குணங்களை வெளிப்படுத்தவும். ஒவ்வொரு எண்ணத்தையும் கவனிக்கவும். வி ளை ய ா ட் டு என்பது இல்லை. நீங்கள் ஒரு பொறுப்பான ஆடையை எடுத்திருக் கிறீர்கள். இதை நீ ங் க ள் உணருகின்றீர்களா? பெண்களிடமிருந்து வி ல கி யி ரு க் க வு ம். அவர் களுடன் கேலியோ, சிரிப்போ கூடாது. இவைகள் எல்லாம் இன்ப நுகர்ச்சியின் பிரதரிசனமேயாகும் (பிரத்யக்ஷம்).

யாசிக்க வேண்டாம். பிச்சையெடுக்கும் மனோ பாவத்தில் யாசிக்க வேண்டாம். கட்டளையிடவும். எல்லாம் வரும். அகில உலகமும் உமது இல்லம். இதை உணரவும் — இதை உ ண ர வு ம். எனக்கு உங்களுடைய முறையான சாதனையின் அறிக்கை யைக் காட்டவும். மு றை யு ம், ஒ ழு ங் கு ம் உங்களுடைய தினசரி வ ழ க் க த் தி ல் இருத்தல் வேண்டும். உங்களுடைய உ த் தே ச த் தை த் சோதித்துப் பார்க்கவும். சு ய ந ல உத்தேசங்களை அழித்து விடவும். எல்லாவிதமான இழி குணங்

களையும் நசுக்கிவிடவும். உங்களுடைய செய்கையின் ஒவ்வொரு அசைவிலும் பெருந்தன்மை யுடையவராக ஆகவும். சில்லரை விஷயங்களுக்காக சண்டை போட வேண்டாம். புறங்கூறுதல், கோள் சொல்லுதல் இவைகளை விட்டுவிடவும். அசுர குணத்தை புனருத்தாரணம் செய்தல் அவசியம்.

ஓம்
சிவோஹம்.

## 9. சிற்றின்ப வாழ்க்கையின் விஷமங்கள்

நான் மறுமுறையும் சாதனையின் முக்கியத்து வத்தையும், சிற்றின்ப வாழ்க்கையின் விஷமப்பலன் களிலிருந்து ஒருவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் வற்புறுத்துகிறேன். அந்த அழுக்கு மலத்தை மறுபடியும் பார்க்க வேண்டாம். உங்களையே அழித்துக்கொள்ள வேண்டாம். நீங்கள் ஆத்மீக வழியில் சந்தோஷமும் பேரானந்தமும் கலந்த ஒரு வாழ்க்கையை போது மான அளவு அனுபவித்து இருக்கிறீர்கள். யோகத்தின் மூலமாக நீங்கள் பூரணமாக மலர்ச்சி யடைந்தால் மேற்கொண்டு உள்ள மகிமையைப் பற்றி என் சொல்வது. ஜாக்கிரதை. ஜாக்கிரதை. உங்களுடைய இந்திரியங்களுக்கு ஒரு அடிமையாகி விடவேண்டாம். உங்களுடைய அறையிலிருந்து வெளிவர வேண்டாம். எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்திவிடவும். ஒரு அறையில் உங்களை மறைத்துக் கொள்ளுங்கள் அல்லது உடனே ஆனந்த குடீரத் திற்குத் திரும்பி வந்துவிடுங்கள். தற்சோதனை செய்யவும்; தியானம் செய்யவும்.

உங்களால் மோகத்தை தடுக்க முடியவில்லை யானால் நீங்கள் நகரத்தை விட்டு உடனே விலகி விடுவது உத்தமம். மாதிரிப் பிரதிகள் தங்களைத் தாங்களே கவனித்து கொள்ளும். வேலையைப்பற்றி

நான் கவலைப்படவே இல்லை. போதிய அளவு சக்தியுடனிருந்தால் நீங்கள் அங்கு இன்னும் கொஞ்சகாலம் தங்கியிருந்து வேலையை முடிக்கலாம். எப்படியும் சீக்கிரம் ரிஷிகேசம் வருவதற்கு ஏற்பாடு செய்யவும்.

லக்ஷியமற்ற வாழ்க்கையும், 'நான்' என்ற நினைவிலே நிலை பெற்றிருத்தலும், திரும்பத் திரும்ப 'தான் தனது' என்ற எண்ணங்களிலேயே ஊடுருவிச் செல்லும் புலன்வழி வாழ்க்கை ஒரு சுமையாக ஆகிவிடுகிறது. இது மிருக வாழ்க்கைக்குச் சரிசமமாகிவிடுகிறது. இந்த உலகம் ஒரு கனவு. சாரம் அல்லது 'சத்'தே உண்மைப் பொருளாகும். ஒரு பொழுதும் இதை மறந்துவிட வேண்டாம். நீயே ஆத்மா, அகர்த்தா, சாக்ஷி.

## 10. சாதனை தினசரிப் பழக்கமாக இருக்க வேண்டும்

கீழே கொடுக்கப்பட்டுள்ளவைகள் யோக மார்க்கத்திலே சில முக்கியமான குறிப்புகளாகும். இவைகள் சாதகர்களுக்கு நான் எழுதிய பல கடிதங்களிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்டவை. இவைகள் சகலருக்கும் ஆத்மீக வழியில் சில நடைமுறை அம்சங்களின் சரியான அறிவைப் பெறுவதற்கு மிகவும் உபயோகமாக இருப்பது தெரியவரும்.

உங்களுக்கு ஒழுங்கான, முறையான தியானம், ஜபம், அத்யயனம், சேவை ஆகியவைகள் இருக்க வேண்டும். ''நான் என்னுடைய பொறுப்புக்கள் எல்லாவற்றையும் முடித்தபிறகு, இமயமலைக் குகைகளில் தனியாக இருந்து அத்யயனமும், தியானமும் செய்வேன்'' என்று எண்ணவேண்டாம். சிலமணி

நேரம் தனியாக இருந்து உள்ளத்தை அலசிப் பார்க்கவும். தனிமையிலிருக்கும் வாழ்க்கைக்கு இப்பொழுதே நிதானமாகத் தயார் செய்யவும்.

## 11. தன்னலமற்ற சேவை

இதற்கு ஒன்றும் பெரும் நிதி தேவையில்லை. மனிதவர்க்கத்திற்குச் சேவை செய்ய நீங்கள் தகுதி உடையவர்களாக இருந்தால் இறைவன் உங்களுக்கு எல்லாவற்றிற்கும் ஏற்பாடு செய்து கொடுப்பார். சில உபயோகமான மருந்துகளை வாங்கி நோயுற்றோருக்கு விநியோகம் செய்யவும் அல்லது அவர்களுக்கு நல்ல முறையில் பணியாற்றவும். நீங்கள் செய்யும் சேவைக்காக யாரிடமிருந்தும் எதையும் எதிர்பார்க்க வேண்டாம். உங்களுடைய கிராமத்திலிருக்கும் ஏழைப் பையன்களுக்குக் கல்வி புகட்டவும். 4 அல்லது 5 வீடுகளிலிருந்து பிக்ஷை யெடுத்து உம்மைக் காப்பாற்றிக்கொள்ளவும். தனிமையில் வசிக்கவும். சாதனை செய்யவும். மனோ ராஜ்யத்தை — ஆகாயத்தில் கோட்டைகட்டுவதை அழித்துவிடவும். அமைதிக்கு அது ஒரு விரோதி. உங்களுடைய திறமை, தகுதி, வழி ஆகியவற்றிற்குத்தக உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு, சரியான உள்ளத்துடனும், மனோ பாவத்துடனும் சேவை செய்யவும்.

## 12. பிராணாயாமத்தின் மூலம் தொந்தரவுகள்

பிராணாயாமம், கிரியா யோகம் ஆகியவற்றின் பலாத்கார முறைகளின் மூலம் குண்டலினி சக்தியை எழுப்ப முயற்சித்த பல மாணவர்களிட மிருந்து தொந்தரவுகள் சம்பந்தமான ஒரே மாதிரி யான புகார்கள் எனக்குக் கிடைத்திருக்கின்றன.

நான் அவர்களுடைய அளவுக்கு மீறிய உற்சாகத்தையும், நிறைவிலா ஞானத்தையும் கண்டு அனுதாபப் படுகிறேன். ஆகாரத்தைக் குறைத்துக் கொள்வது அல்லது விட்டுவிடுவதால் உமக்குப் பயனில்லாமலே போகலாம். தினசரி, ஒழுங்கான பயிற்சியின் மூலம் இத்துறையில் மிருதுவாக செயல்பட வேண்டும். முன்னேறிய படிகளில் உங்களுக்கு யோக மார்க்கத்தில் பூர்ணத்துவமும், முதன்மையும் பெற்ற மூத்தோர்களுடைய நேர்முக உபதேசம் தேவை. உள்ளத்தூய்மை, பொருத்தமான சேர்க்கை, கிரந்தங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளும் தன்மை, ஆத்மீக அலைகளால் சக்தியேற்றப்பட்ட சாதகமான சுற்றுப்புற சூழ்நிலை ஆகியவைகள் உங்களுடைய துரித வெற்றியில் முக்கிய அங்கம் வகிக்கின்றன. அவசரப்படவோ, பொறுமையிழக்கவோ கூடாது. ஒருபக்கத்து அபிவிருத்தி உங்களுக்கு உதவாது. அளவுக்கு மிஞ்சிய உபவாசத்தினுல் உங்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம். அது உங்கள் முறைகளை பலஹீனப்படுத்திவிடும். சக்தி கொடுக்கக்கூடிய; சீக்கிரம் ஜீர்ணிக்கக்கூடிய, சத்துள்ள ஆகாரத்தையும், பழங்களையும் பாலையும் ஏராளமாகச் சாப்பிடுங்கள். சில மாதங்கள் சுவாசம் உள்ளுக்கிழுத்தலும் வெளிவிடுதலும் மிக மிக மெதுவாகசெய்து வரவும். மூச்சை நிறுத்த வேண்டாம் (கும்பகம்). ஒரு சிறிது நீங்கள் முன்னேற்றமடைந்த பிறகு, வேனிற்காலத்தில் குளுமையானதொரு இடத்திற்குச் சென்று பிராணுயாமத்தில் மூன்று முறை உட்காருங்கள். 1:4:2 என்ற விகிதத்தை உட்சுவாசம், கும்பகம், நிச்சுவாசம் ஆகியவற்றிற்குப் பின்பற்றவும். நன்மைகள் கணக்கிலடங்கா. முன்னேறிய மாணவர்களுக்கு இது ஒரு தொந்தரவற்ற பயிற்சியாகும்.

## 13. சோர்வையும், வியாகூலத்தையும் வெல்க

திறந்த வெளியில் ஓடவும். லேசான பிராணுயாமம் செய்யவும். 'ஓம்' பிரணவத்தை உச்சரிக்கவும். பக்தியுடன் பாடவும். பரவசத்தில் ஆடவும். சோர்வு சீக்கிரம் மறைந்துவிடும். நீங்கள் ஆனந்த ஸ்வரூபம். சோர்வும் வியாகூலமும் எங்கிருக்கிறது? அவைகள் கற்பனையே தவிர வேறில்லை. மௌனமாக இருக்கவும். மௌனத்தின் மூலம் நீங்கள் அதிக லாபமடைய முடியும். இரவில் சில பாதாம் கொட்டைகளை தண்ணீரில் ஊற வைக்கவும். விடியற்காலையில் அவற்றை கற்கண்டுடன் கலந்து சாப்பிடவும். இது சாதகர்களுக்கு மிகுந்த சக்தியுள்ள 'மூளை' டானிக்காக பயன்படுகிறது. அமலக தைலத்தை தலையில் தடவிக்கொள்ளவும். ஹக்ஸ்லேஸ் சர்பத்தையும் சாப்பிடவும்.

## 14. நீங்கள் மனவதிர்ச்சியிலிருக்கும்போது

ஜபத்தையும், சாதனையையும் ஒரு நாள் கூட விடவேண்டாம். அனுசரித்துச் சரிசெய்து கொள்ளவும். அவமானத்தையும் இன்னல்களையும் தாங்கிக்கொள்ளவும். அற்ப விஷயங்களை மறந்து விடக் கற்றுக்கொள்ளவும். ஜனங்களுடன் சாதுர்யமாகப் பழகவும். ஒவ்வொருவரையும் பஜனையிலும் கீர்த்தனத்திலும் பயிற்றுவிக்கவும். நீங்கள் போகுமிடமெல்லாம் ஆத்மீக அலைகளை உண்டுபண்ணவும். பிறகு அமைதி, ஆனந்தம், சந்தோஷம், செழிப்பு ஆகியவற்றை நீங்கள் காண்பீர்கள். எல்லா முகங்களிலும் ஆனந்தம் களிநடம் புரியும். இதுவே ஒற்றுமைக்கு வழி. நீங்கள் கலக்கமுற்றிருந்தாலோ, கோபமூட்டப்பட்டிருந்தாலோ

ஜபம் செய்யவும் அல்லது கொஞ்ச நேரம் அந்த இடத்தைவிட்டு அகன்று சென்றுவிடவும். எல்லோரையும் நேசிக்கவும். எல்லோருக்கும் சேவை செய்யவும்.

## 15. யோகத்தில் வரம்பு மீறிச் செல்வதைத் தவிர்க்கவும்

யோகப் பயிற்சிகளில் நீங்கள் சௌகரியமாக எவ்வளவு செய்யமுடியுமோ அவ்வளவு செய்யவும். அளவுகடந்து செய்வதைத் தவிர்க்கவும். உங்களை வருத்திக்கொள்ளவேண்டாம். மேல் நாட்டிலுள்ள மக்கள் பத்மாசனம் (தாமரைபோல் கால்களை மடித்தல்), சிரசாசனம் (தலை கீழாக நிற்றல்), ஆகியவைகளைச் செய்ய கஷ்டப்படுகின்றனர். பிரார்த்தனை, தியானம் ஆகியவற்றிற்கு உங்களுக்கு சௌகரியமான எந்த நிலை வேண்டுமானாலும் இருக்கலாம். நீங்கள் நீண்டநேரம் சௌகரியமாக உட்கார்ந்திருக்கக்கூடிய ஒரு நல்ல ஆசனத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் ஒரே நிபந்தனை என்னவென்றால் உங்கள் கழுத்தும் முதுகும் நிமிர்ந்து நேராக இருக்க வேண்டுமென்பதே. கண்களை மூடிக்கொண்டு, மூச்சை மிக மெதுவாக உள்ளுக்கும் வெளியேயும் சுவாசித்துக்கொண்டு மானஸீகமாக ஓம் ஓம் ஓம் என்ற மந்திரத்தை ஜபித்துக் கொண்டு இறைவனுடைய தெய்வீக குணங்களைப் பற்றி எண்ணிக்கொண்டிருக்கவும். இப்பொழுது நீங்கள் மௌனத் தியானத்தினுள் நுழைகின்றீர்கள். நீங்கள் பேரானந்தத்தை அனுபவிப்பீர்கள்; அந்தரங்க ஆத்மீக பலத்தைப் பெறுவீர்கள்.

## 16. உண்மையான யோகம் என்பது என்ன ?

யோகம் என்பது ஆறு மணி நேரம் கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டிருப்பது அல்லது இருதயத் துடிப்பை நிறுத்துவது, அல்லது பூமிக்கடியில் தன்னைப் புதைத்து வைத்துக்கொண்டு ஒரு வாரமோ அல்லது ஒரு மாதமோ இருப்பது ஆகியவைகள் அடங்கியது அல்ல. இவைகள் எல்லாம் உடல் சம்பந்தமான அற்புதச் செய்கைகள் தான். யோகம் என்பது உங்களுக்கு, தனிப்பட்ட சித்தத்தை இறைவனுடைய சித்தத்தோடு ஒன்று சேர்க்கின்ற முறையைக் கற்றுக் கொடுக்கின்ற விஞ்ஞானமாகும். யோகம், புனருத்தாரணம் செய்யப்படாத குணத்தை வேற்றுருவாக்கி, சக்தி, பிராணன், வீரியம் ஆகியவற்றை அதிகப்படுத்தி, நீண்ட ஆயுள், உயர்ந்த ஆரோக்கியம் ஆகியவற்றைக் கொடுக்கிறது. ஒருமுகப்படுத்தும் சக்தியை அதிகப்படுத்த முயற்சிக்கவும். ஒருமுகப் படுத்தப் பட்ட உள்ளத்தையும் அடைய ஜபம் உங்களுக்கு உதவி புரியும்.

---

# அத்தியாயம் பன்னிரண்டு

# ஆத்மீக அனுபவங்கள்

## 1. வாழ்க்கையின் உதயம்

நான் சிற்றின்பமாகிய மாயா வாழ்க்கையில்
சலிப்படைந்தேன்.
இந்தச் சிறையாகிய உடம்பின்மேல் நான்
முற்றிலும் வெறுப்படைந்தேன்.

என்க்கு மகாத்மாக்களுடன் சத்சங்கம் கிடைத்தது.
அவர்களுடைய அமிர்தோபதேசங்களை
கிரகித்தேன்.

நான் (விருப்பு வெறுப்பாகிய) பயங்கரக்
காட்டைக் கடந்தேன்.
நான் நல்லது கெட்டதால் ஆகிய உலகத்தை
விட்டு வெகு தூரத்திற்கப்பால் அலைந்து திரிந்தேன்.
நான் பிரமிக்கத்தக்க மௌனத்தின் எல்லைப்
பிரதேசத்திற்கு வந்தேன்.
உள்ளேயிருக்கும் ஆத்மாவின் மகிமையைக்
கைப்பற்றினேன்.

இப்பொழுது என்னுடைய துயரமனைத்தும்
முடிந்துவிட்டன.
என்னுடைய உள்ளம் இப்பொழுது ஆனந்தத்தால்
தளும்பிக்கொண்டிருக்கின்றது.
அமைதி என்னுடைய ஆத்மாவுக்குள் நுழைந்து
விட்டது.
நான் திடீரென்று என்னுடைய வாழ்க்கையிலிருந்து
வெளியே தூக்கியெறியப்பட்டேன்.
புது வாழ்வொன்று மலர்ந்தது.

நான் உண்மையாகிய அந்தரங்க உலகத்தை
அனுபவித்தேன்.
காணமுடியாதது என்னுடைய ஆத்மாவையும்
உள்ளத்தையும் நிரப்பியது.
நான் வர்ணனைக்கப்பாற்பட்ட ஒரு மகா ஜோதி
வெள்ளத்தில் மூழ்கினேன்.
எல்லா நாம ரூபங்களுக்கும் பின்னல் இறைவனைக்
கண்டேன்.
நானே ஒளி என்பதை அறிந்தேன்.

## 2. பூர்வாங்க ஆத்மீக அனுபவங்கள்

### I

மேலும் மேலும் இச்சையடக்கமும், பகுத்தறிவும்,
மேலும் மேலும் விடுதலை வேட்கை,
அமைதி, உற்சாகம், திருப்தி,
பயமற்ற தன்மை, கலங்காத உள்ளத்தின் நிலை,
கண்களிலே ஒளி, உடலிலே சுகந்தம்,
கவர்ச்சிகரமான நிறம், இனிமையான
சக்திபொருந்திய குரல்,
பிரமிக்கத்தக்க ஆரோக்கியம், சக்தி, வீர்யம்,
பலம்; நோய், சோம்பேறித்தனம், சோர்வு
ஆகியவற்றிலிருந்து விடுதலை,
உடலின் மென்மை, (கனமற்ற தன்மை),
உள்ளத்தின் சுறுசுறுப்பு,
சக்திபொருந்திய ஜாடராக்கினி அல்லது ஜீர்ண
அக்னி
நீண்ட நேரம் உட்கார்ந்து தியானம் செய்ய ஆவல்,
உலகாயத பேச்சுக்களிலும், உலகாயதத்தாருடைய
சேர்க்கையிலும் வெறுப்பு,
இறைவனுடைய பிரசன்னத்தை எங்கும் உணர்தல்,
எல்லா ஜந்துக்களிடமும் அன்பு,
எல்லா உருவங்களும் இறைவன் உருவமே
என்றுணர்தல்,
இந்த உலகம் இறைவனே என்றுணர்தல்,
எந்த உயிர்களிடமும் கருணை அல்லது
வெறுப்பின்மை,
நிந்தனை செய்பவர்கள், அவமானப்
படுத்துகிறவர்களிடம்கூட, வெறுப்பின்மை

அவமானத்தையும் இன்னல்களையும்
தாங்கிக்கொள்ளும் மனோதிடம்
ஆபத்துக்களையும், விபத்துக்களையும்
எதிர்நோக்கல் (மனோபலம்)
ஆகியவைகள் பூர்வாங்க ஆத்மீக அனுபவங்களில்
சில.

இவைகள் ஒருவன் ஆத்மீக வழியில்
முன்னுக்குச் செல்கிறான் என்பதைக் குறிக்கின்றன.

## II

தியானத்தின்போது வெள்ளை, மற்றும் பல்வேறு
வர்ண ஒளிப் பந்துகள், சூரியன், நட்சத்திரங்கள்,
திவ்ய கந்தம், திவ்ய ருசி,
கனவில் இறைவனுடைய காட்சி,
அசாதாரண, அமானுஷ்ய அனுபவங்கள்,
மனித உருவத்தில் இறைவனுடைய காட்சி,
சில வேளைகளில் அந்தண வடிவில்,
கிழவன், குஷ்டரோகி, அல்லது கந்தையுடையிலே
இழிமகன் ரூபத்திலும் காட்சி,
இறைவனிடம் அளவளாவுதல்,
ஆகியவைகள் பூர்வாங்க ஆத்மீக அனுபவங்கள்.
பிறகு அர்ஜுனன் அனுபவித்த இறையுணர்வு
அல்லது சவிகல்ப சமாதி வருகிறது.
நாளடைவில் சாதகன் நிர்விகல்ப சமாதியில்
நுழைகின்றான்.
அதில் பார்ப்பவனோ பார்க்கப்படுபவனோ
கிடையாது.
அதில் ஒருவன் எதையும் பார்ப்பதில்லை,
எதையும் கேட்பதில்லை.
அவன் முடிவற்றதோடு ஒன்றாகி விடுகின்றான்.

## 3. நான் வாழ்க்கைப் பந்தயத்தை வென்றுவிட்டேன்.

இறைவன், சத்-குரு ஆகியோருடைய
கருணையின் மூலம்
நான் பற்றற்று விடுதலையுடன் இருக்கிறேன்.
எல்லா சந்தேகங்களும், பிரமைகளும்
மறைந்துவிட்டன.
நான் விடுதலையுடன் இருப்பதோடு எப்போதும்
பேரானந்தமுடன் இருக்கின்றேன்.
நான் பயத்திலிருந்து விடுபட்டிருக்கிறேன்.
ஏனெனில் நான் அந்த இரண்டல்லாத நிலையில்
நிலைத்திருப்பதால்.
பயம் இருமையால் (துவிதம்) ஏற்படுகிறது.
நான் பிரம்ம வெறியுண்டவன்
நான் பூரணத்துவத்தையும் விடுதலையையும்
அடைந்துவிட்டேன்.
நான் தூய இறையுணர்விலே இருக்கிறேன்.
நான் வாழ்க்கைப் பந்தயத்தை வெற்றி கொண்டு
விட்டேன்.

நான் வென்றுவிட்டேன் !
நான் வென்றுவிட்டேன் !!
நான் வென்றுவிட்டேன் !!!

## 4. அவனிடம் நான் என்னுடைய சகலத்தையும் காண்கிறேன்

கடைசியாக அவனுடைய அருள் என்மீது
இறங்கியது
நான் அவனை விடாமல் உற்று நோக்கினேன்

நான் அந்த பிரமிக்கத்தக்க கடவுட் காட்சியிலே
ஐக்கியப்பட்டேன்.
அந்தக் கருணை என்னுடைய இதயக் கோப்பையை
நிரப்பியது
அந்த ஆனந்த பரவசமாக்குகிற பிரமிப்பு
என்னிடம் வரம்புமீறிப் போய்விட்டது
அவனுடைய இச்சாசக்தியிலே என்னுடைய
அமைதி இருக்கிறது
அவனுடைய திருநாமம் ஒரு இளைப்பாறும்
சொர்க்கம்
அவனிடம் என்னுடைய சகலத்தையும் கண்டேன்.
எல்லா ஞானமும் அவனுடைய மார்பகத்திலே
பூட்டிவைக்கப்பட்டுள்ளன
சகல சிருஷ்டியும் அவனிடம் மேலே கிளம்பி
கீழே விழுகின்றன.
தோன்றுவன வெல்லாவற்றிற்கும் அவனே
மேலான தேக்கம்
எல்லா உலகங்களுக்கும் அவனே மூலாதாரம்
அவன்தான் புனித ஒன்று, ஞான பரிபூரணன்,
உலகிற்குக் காரணகர்த்தா, விடுதலை
வழங்குவோன்!

## 5. பேரானந்த சாகரத்திலே

ஓ மகாதேவா, ஓ கேசவா
நின்னுடைய கருணை வாளினுல்
நான் என்னுடைய தளைகளனைத்தையும்
அறுத்தெறிந்து விட்டேன்
நான் விடுதலையுடனிருக்கிறேன், நான்
பேரானந்தம் நிரம்பப் பெற்றிருக்கிறேன்.
எல்லா ஆசைகளும் மறைந்து விட்டன

இப்பொழுது நான் எதையும் விரும்பவில்லை
உன்னுடைய ஆசீர்வதிக்கப்பட்ட
பாதகமலங்களைத் தவிர,
நான் என்னுடைய எண்ணங்களனைத்தையும்
தொலைத்து விட்டேன்
உன்னிடம், ஓ நாராயணா
எனக்கு நின் பிரமிக்கத்தக்க காட்சி கிடைத்தது
நான் பரவசத்திலே அழுந்தினேன்.
நான் உடனே மாற்றப்பட்டேன்
நான் மூழ்கடிக்கப்பட்டேன்
தெய்வீக உணர்விலே
பேரானந்த, சாகரத்திலே
வரவேண்டும், வரவேண்டும், என் தேவா.

## 6. அழியாத ஆத்மா நான்

சாசுவதமான, முடிவற்ற தத்துவம் ஒன்று
மட்டுமே இருக்கிறது
ஜீவன் இந்த தத்துவத்திற்கு அனன்னியமானது
வலி உண்மையல்லாதது; இது இருக்க முடியாது
பேரானந்தம் உண்மையானது: இது
அழிவற்றது.
மனம் உண்மையல்லாதது; இது இருக்க முடியாது.
ஆத்மா உண்மையானது; இது சாக முடியாது.
ஆத்ம ஞானத்தின் மூலம் விடுதலை கிடைக்கிறது
விடுதலை என்பது பூர்ணத்துவம், சாசுவதம்,
பேரானந்தம்.
விடுதலை என்பது ஆத்மாவை நேரடியாக உணர்தல்
விடுதலை என்பது பிறப்பு இறப்புக்களிலிருந்து
விடுபடுவது

நான் மனமுமல்ல உடலுமல்ல
அகில உலகமும் எனது உடல்
அகில உலகமும் எனது இல்லம்
ஒன்றும் நிலைத்திருக்கவில்லை, ஒன்றும் எனக்குச்
சொந்தமல்ல.
அழியாத ஆத்மா நான்.

## 7. பேச்சற்ற மண்டலம்

பூர்ணமான, நாமமற்ற, ரூபமற்ற சூன்யத்தில்
எல்லையற்ற பேரானந்தப் பெருவிரிவில்
விஷயமற்ற, மனமற்ற பிராந்தியத்தில்
காலமற்ற, வெளியற்ற, எண்ணமற்ற வெளியாகிய
சாம்ராஜ்யத்தில்
இனிமையான இசையாகிய உன்னதமான
இல்லத்தில்
நான் மேலான மகா ஜோதியுடன் ஐக்யமானேன்
நாம் ஒன்று அல்லது இரண்டு என்கின்ற எண்ணம்
மறைந்தது.
நான் பிறப்பாகிய கடலை சாசுவதமாகக்
கடந்து விட்டேன்.
இவையெல்லாம் இறைவனுடைய கருணையாலேயே
அவன் பிருந்தாவனத்திலே தாளக்கட்டுள்ள
ஒலியுடன் ஆடியவன்
அவன் இடையர்களுக்காக கோவர்த்தனத்தைக்
குடையாக உயர்த்தியவன்.

## 8. நான் அதுவாக ஆகிவிட்டேன்

இப்பொழுது மாயையினலாக்கப்பட்ட உலகம்
மறைந்து விட்டது

மனம் முற்றிலும் அழிந்து விட்டது
''நான்'' முற்றிலும் தூளாக்கப்பட்டு விட்டது
நீர் புகா அறைகள் உடைத்தெரியப்பட்டு விட்டன
நாம ரூபங்கள் மறைந்து விட்டன.
எல்லா பாகுபாடுகளும் வேறுபாடுகளும் உருகி விட்டன
பழைய ஜீவத்தன்மை முற்றிலும் பொசுக்கப்பட்டு விட்டது
உண்மை, ஞானம், பேரானந்தம் ஆகிய வெள்ளம் எங்குபார்த்தாலும் ஏராளமாகப் புகுந்துவிட்டது.
பிரம்மன் மட்டுமே எங்குபார்த்தாலும் பிரகாசிக்கிறான்
ஒரு ஸ்வஜாதியான (ஒரே இனத்தைச் சேர்ந்த) ஆனந்த ரஸம் எங்கணும் ஊடுருவியிருக்கிறது
நான் அதுவாக ஆகிவிட்டேன். நான் அதுவாக ஆகிவிட்டேன்
சிவோஹம். சிவோஹம். சிவோஹம்.

## 9. மாபெரும் பூமானுபவம்

நான் மாபெரும் முடிவற்ற ஆனந்தத்தில் கலந்தேன்
நான் அழியாத பேரானந்த சாகரத்தில் நீந்தினேன்
நான் எல்லையற்ற அமைதிக் கடலிலே மிதந்தேன்
''நான்'' உருகியது; எண்ணங்கள் தணிந்தன
விவேகம் வேலை செய்வதை நிறுத்தியது
இந்திரியங்கள் கிரஹிக்கப்பட்டன
நான் உலகிற்கு விழிக்காத நிலையிலிருந்தேன்
நான் என்னையே எங்கும் கண்டேன்
இது ஒருமைப்பட்ட அனுபவம்
அங்கே உள்ளும் இல்லை புறமும் இல்லை.

அங்கே ''இது''வுமில்லை ''அது''வுமில்லை.
அங்கே ''அவனோ'', ''நீ''யோ, அல்லது
''நானோ'' அல்லது ''அவளோ'' இல்லை
அங்கே நேரமுமில்லை, வெளியுமில்லை.
அங்கே கர்த்தாவுமில்லை கர்மாவுமில்லை.
அங்கு அறிபவனோ, அறியப்படுவதோ, அல்லது
காட்சியோ இல்லை
எப்படி ஒருவன் இந்த மானசிகமான அனுபவத்தை
வர்ணிப்பது?
மொழி முடிவுடையது, வார்த்தைகள்
சக்தியற்றவை,
இதை நீங்களே உணர்ந்து விடுதலையடையுங்கள்.

## 10. அறிவுக்கெட்டாத அனுபவம்

பிரம்மன் அல்லது சாசுவதம், தேன்,
பழக்கூட்டு, கற்கண்டு, ரஸகுல்லா, அல்லது
லட்டு ஆகியவற்றைவிட இனிமையானது
நான் பிரம்மனை, மாற்றமுடியாததை
தியானித்தேன்
நான் முடிவைக் கடந்துசெல்லும் நிலையை
அடைந்தேன்.
உண்மை ஒளி என்னிடம் பிரகாசித்தது
அவித்தை அல்லது அறியாமை முற்றிலும்
மறைந்தது

கதவுகள் முற்றிலும் மூடப்பட்டன
இந்திரியங்கள் பின்னுக்கிழுக்கப்பட்டன
மூச்சும் உள்ளமும் அவைகளின் வழியிலே கலந்தன
நான் மேலான ஒளியோடு ஒன்றாக ஆகிறேன்
பேச்சைக் கடந்த ஒரு திகைப்பான
(அறிவுக்கெட்டாத) அனுபவமே.

சிவோஹம், சிவோஹம், சிவோஹம், சோஹம்
சத்—சித்—ஆனந்த ஸ்வரூபோஹம்.

## 11. சிவோஹம் – சிவோஹம் – சிவோஹம்

நான் தனிப்பட்ட ஆத்மாவுக்கும்,
மேலான ஆத்மாவுக்கும் உள்ள
ஒருமைப்பாட்டை உணர்ந்துவிட்டேன்
சத்—சித்—ஆனந்தம் என்னுடைய பிரதான குணம்
என்னுடைய மனம் எல்லா புறப்பொருள்
களிலிருந்தும் பின்னுக்கிழுக்கப்பட்டுள்ளது.
நான் மிகுந்த கடவுள்
போதையில் ஆழ்த்தப்பட்டிருக்கிறேன்.
துயரம், வலி, பயம் எல்லாம் மறைந்துவிட்டன
நான் எப்பொழுதும் அமைதியும் சந்தோஷமும்
நிரம்பியவனாக இருக்கிறேன்.
நான் உண்மை, தூய உணர்வு, பேரானந்தம்.
நான் புறத் தெய்வீகப் பிழம்பாக ஒளிர்கிறேன்.
எல்லா உயிருள்ள ஜீவராசிகளிலும்
நான் சாஸ்வதத்தின் பேரானந்தத்தை
ருசிக்கின்றேன்.
நான் வாழ்க்கையின் லக்ஷியத்தை
அடைந்துவிட்டேன்
அந்தப் பிரம்மனில் நான் இருக்கிறேன்.
சச்சிதானந்தமாகிய அந்தப் பிரம்மம்
உள்ளே வசிப்பவன், உள்ளே ஆட்சிபுரிபவன்.
அவன் வேதங்களின் கருவூலமாக இருப்பவன்
இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாக
இருப்பவன்
ஒவ்வொன்றிற்கும் மூலாதாரமாக இருப்பவன்

விவேகத்திற்கு ஒளி கொடுப்பவன்
எல்லா ரூபங்களிலும் தன்னை ஒளித்துக்
கொண்டிருப்பவன்
ரிஷிகளால் பூஜிக்கப்படுபவன்
அவனை வேதங்கள் பறைசாற்றுகின்றன
அவனை யோகிகள் சமாதி நிலையில் அடைய
விரும்புகின்றனர்
அவன் இந்திரனுக்கும், அக்கினிக்கும்
பயங்கரமானவன்
அவன் ஒழுக்கப்படுத்தப்பட்ட யோகிக்கு
இனிமையானவன்
அந்தப் பிரம்மன் நானாகவே இருக்கின்றேன்.
சிவோஹம் சிவோஹம் சிவோஹம் !

## 12. சமாதி நிலை

ஆஹா என்ன ஆனந்தம் ! என்ன பேரானந்தம் !
இப்பொழுது எல்லா ஆசைகளும் பூர்த்தியடைந்து
விட்டன
எல்லாம் அடையப்பட்டுவிட்டது
நான் அழிவற்றவன், சாவற்றவன்,
நான் சாசுவதமான உணர்வு
நான்தான் அந்த மகாபுருஷன், அந்த உயர்ந்தவன்
இவையெல்லாம் மோக்ஷம் மட்டுமே
மோக்ஷமே எங்கும் இருக்கிறது
இது அறியப்படவேண்டியிருக்கிறது.
ஒவ்வொருவராலும் அனுபவப்
படவேண்டியிருக்கிறது.
அந்த ''நான்'' இப்பொழுது உருகிவிட்டது
வாசனைகள் எரிக்கப்பட்டு விட்டன

ஞானமாகிய அக்கினியில்
அங்கே மனோநாசம் அல்லது மனத்தை
நிர்மூலமாக்குதல் இருக்கிறது
எல்லா பாகுபாடுகளும் ஒழிந்தன
எல்லா வேற்றுமைகளும் மறைந்தன
அங்கே ''நானு''மில்லை, ''நீ''யுமில்லை.
எல்லாம் பிரம்மனே
இது ஒரு தன்மையான பேரானந்தம்.
இந்த அனுபவ முழுமையும் வர்ணனைக்கப்பாற்
பட்டது
இந்த நிலையை வார்த்தைகளால் வர்ணிக்க
முடியாது
இதை நீங்களே சமாதி நிலையில் உணருங்கள்.

## 13. குருவின் கருணை கடாக்ஷத்தின் மூலம்

நான் என்னுடைய மூலாதார குணத்தை
அறிகிறேன்
நான் பூர்ணத்துவத்தின் சிகரத்தை அடைந்து
விட்டேன்
நான் தூய்மையான அழியாத ஆத்மா.
என்னுடைய ஆசைகள் அனைத்தும் பூர்த்தி
செய்யப்பட்டு விட்டன
நான் ''ஆப்த காம''மாக இருக்கிறேன்
நான் எல்லாவற்றையும் அடைந்துவிட்டேன்
நான் என்னுடைய வேலைகள் அனைத்தையும்
செய்துவிட்டேன்
நான் மேல்கொண்டும் கற்றுக்கொள்ள வேண்டியது
ஒன்றுமில்லை.
வேதங்கள் எனக்கு சொல்லிக்கொடுக்க வேண்டியது
ஒன்றுமில்லை.

ஸ்மிருதிகள் எனக்கு உபதேசிக்கவேண்டியது
ஒன்றுமில்லை.

என்னைக் கவருவதற்கு உலகில் ஒன்றுமில்லை.

மாயை பணிவோடு தன்னை மறைத்துக்கொண்டு
விட்டாள்.

ஏனெனில் எனக்கு அவளுடைய ஜாலவித்தைகள்
எல்லாம் தெரியும்.

அவள் என்முன் தோன்ற நாணப்படுகிறாள்.

இவையெல்லாவற்றிற்கும் இறைவனுடைய
கருணையே காரணம்.

குருவினுடைய கருணையும் காரணம்
அவர் என்னையும் அவரைப்போலவே செய்தார்.
குருவிற்கு சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.
குருவிற்கு வந்தனங்கள். (தண்டங்கள்)

## 14. நான் அந்த நானாகவே இருக்கிறேன்

இந்த லக்ஷியம் காலமற்றது,
வெளியற்றது வலியற்றது,
துயரற்றது இந்த இருக்கை
பேரானந்தமும், அமைதியும் நிறைந்தது இந்த
இல்லம்
மாற்றமில்லாதது, கட்டுப்படாதது இந்த தர்மம்
''நான் அவனாக இருக்கிறேன்'' என்பதை நான்
அறிகிறேன்.
எனக்கு உடலோ, உள்ளமோ, இந்திரியங்களோ
கிடையா
எனக்கு மாற்றமோ, வளர்ச்சியோ, சாவோ
கிடையாது
நான் அழிவற்றவன், எங்கும் நிறைந்த பிரம்மன்.

நற்குணமோ அல்லது பாவமோ என்னைத் தீண்ட
முடியாது
இன்பமோ, அல்லது துன்பமோ என்னைப் பாதிக்க
முடியாது
விருப்போ அல்லது வெறுப்போ என்னை கெடுக்க
முடியாது
நான் பூரணத்துவமான இருப்பு, பூரண ஞானம்,
பேரானந்த ஞானம்.
எனக்கு நண்பர்களோ, விரோதிகளோ கிடையாது
எனக்கு பெற்றோரோ, உற்றாரோ கிடையாது
எனக்கு வீடோ, நாடோ கிடையாது
நான் அந்த நானாக இருக்கிறேன்.
நான் அந்த நானாக இருக்கிறேன்.
நான் ஒருபோதும் பிறக்கவில்லை.
நான் ஒருபோதும் இறப்பதுமில்லை.
நான் எப்பொழுதும் இருக்கிறேன், நான் எங்கும்
இருக்கின்றேன்.
எனக்கு சாவைப்பற்றிய பயமோ,
பொதுஜனங்களின் கண்டன பயமோ கிடையாது
நான் சிவம், பேரானந்தமும் ஞானமும்
நிறையப்பெற்றவன்
சிதானந்த — ரூபஹ் சிவோஹம், சிவோஹம்.

---

## ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அருளிய
## தமிழ் நூல்கள்

| | | |
|---|---|---|
| ஞானயோகம் | ரூ. | 6–00 |
| தர்ம உபதேசம் | .... | 5–00 |
| யோக சாரம் | .... | 5–00 |
| குண்டலினி யோகம் | .... | 5–00 |
| சிறுவர் சிறுமியர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | | 5–00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | .... | 5–00 |
| பிரம்மசர்யத்தின் ரகஸ்யம் | .... | 4–00 |
| நன்னெறிக் கதைகள் | .... | 4–00 |
| குரு தத்துவம் | .... | 3–00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை | .... | 3–00 |
| வீட்டு வைத்தியம் | .... | 2–50 |
| கோபத்தைக் கட்டுப்படுத்தல் | .... | 2–00 |
| உபதேச மஞ்சரி | .... | 2–00 |
| சிவானந்த வாணி | .... | 2–00 |
| * ஞான தீபம் | .... | 3–00 |
| * தினசரி வாழ்வில் யோகம் | .... | 4–00 |
| * கர்ம யோகம் | .... | 4–00 |
| * சிவானந்தர் மொழியமுதம் | .... | 2–00 |
| * உருவ வழிபாடு | .... | 2–00 |
| * ஞான ஒளிபெற நல்வழி காட்டி | .... | 4–00 |
| கவலையிலாப் பெருவாழ்வு (சுவாமி சிதானந்தா) | .... | 5–00 |
| தெய்வீக வாழ்க்கை ,, | .... | 5–00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, | .... | 5–00 |
| சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி | | 3–00 |
| சிதானந்தரின் அருட் செய்தி ,, | .... | 3–00 |
| சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | .... | 2–00 |
| நித்திய நெறிகள் ,, | .... | 2–00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | | 4–00 |

புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை.

* 1981ஆம் ஆண்டு புதிய வெளியீடுகள்.